**வேர்க்குரு**
**தாக்கும்போது...**



# ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றுதான், அதன் ஒப்பற்ற 3-வழிச் செயலால் வியர்க்குருவை தடுக்கிறது, முறியடிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றில் தான், நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது—அது, மூன்று தீவிரமான வழிகளில் செயல் படுகிறது.

● **தடுத்தல்**

இதன் பாக்டீரியோஸ்டாடிக் செயல், பாக்டீரியா கிருமிகள் பெருகுவதை தடுக்கிறது.

● **நிவாரணம்**

அகத்த மணமுள்ள ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், வியர்வையை உறிஞ்சுகிறது. இதமளித்து விரைவான நிவாரணம் தருகிறது.

● **செயல்**

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒப்பற்ற கெரடோலிடிக் செயல் உள்ளது; அது, பாதிக்கப்பட்ட சருமத்தை விரைவாக மாசு மருவற்றதாக்குகிறது.






குடும்பம் முழுவதற்குமான பாதுகாப்பு

OBM-2515 TM

Johnson & Johnson

**ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்- வேர்க்குருவிலிருந்து உங்களுக்கு சிறந்த பாதுகாப்பு.**



# வட்டமேஜை

● ''சிறு நீருடன் ரத்தப் போக்கு இருக்கிறது. தமக்குத் தெரிந்த டாக்டரிடம் போகிறார். டாக்டர் 'உடம்பில் சூடு தான் காரணம்' என்கிறார்.''

—11.3.84 இதழ் ஆரோக்கியம் அழைக்கிறது பகுதியில் 'சிறுநீர் — சிறுநீரக நோய்கள்' என்ற கட்டுரையில் இப்படி முதல் கேள்விக்கான பதிலிலேயே வருகிறது.

ஒரு டாக்டர் இப்படிக்கூறுவாரா? ஒரு நாளும் மாட்டார். நாமே வைத்தியம்



செய்ய முடியாது என்று தோன்றினால் இந்நோய் தொடர்பான ஒரு நிபுணரைக் கலந்து ஆலோசியுங்கள் என்பார்.

சென்னை—20.

அ. பத்மநாபன்.

(நலனுக்கு வருந்துவதாகத் தெரிவிக்கிறார் மேற்படி பகுதியின் தொகுப்பாசிரியர் டாக்டர் விகாஸ்.)

● 1980—லிருந்து சவிட்ரான் நிறுவனத்தார் ஈரோட்டில் வீடியோவை அறிமுகப்படுத்தி, டீ.வி.யில் ஒளிபரப்பாகும் கிரிக்கெட், டென்னிஸ், ஏசியாட்—82 போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளை வீடியோவில் பொது மக்களுக்கு உடனுக்குடன் இலவசமாகப் போட்டுக் காண்பித்து வந்தனர். சமீபத்தில் அறிவிக்கப்பட்டுள்ள வீடியோ கட்டுப்பாடு சட்டத்தினால் எந்த ஒரு டீ. வி. நிகழ்ச்சியையும் பொது மக்களுக்கு இலவசமாகக்காண்பிக்க முடியாமல் உள்ளது. சென்னி மலையில் மாட்டு வண்டி ஏறிய அதிசய நிகழ்ச்சி தமிழக முதல்வர் அவர்கள் ஈரோடு வருகை போன்ற முக்கிய நிகழ்ச்சிகளை, வீடியோவில் படம் பிடித்து இருந்தாலும் அனைத்துப் பொது மக்களுக்கும் உடனுக்குடன் இலவசமாகப் போட்டுக் காண்பிப்பது என்றால் புதிய வீடியோ கட்டுப்பாடு சட்டத்தின்கீழ் அது இயலாத காரியம். இச்சட்டத்தைச் சற்றே மாற்றி வசதி செய்து கொடுக்க வேண்டும்.

ஈரோடு.

ச. ஆர். சந்திரன்.

● இந்த வார கல்கி அட்டையில் எனது அபிமான கதாசிரியை வாஸந்தி அவர்களின் வண்ணப்படம்



''படு ஜோர்'' போங்கள்!

அய்யம்பேட்டை. லதா.

● பல பத்திரிகைகளைப் புரட்டிய போதிலும் எனக்கு விடை கிடைக்கவில்லை. ஆனால், தாங்கள் வெளியிட்ட ''பஞ்சாப் அகராதி''யின் மூலமாக பஞ்சாபில் தற்சமயம் நடந்து வரும் நிகழ்ச்சிகளை அப்படியே படம் பிடித்துக் காட்டி விட்டீர்களே!

திருச்சி. ஆர். அப்துல்சலாம்

● 'சினிமா கதாநாயகனுக்குக் கிடைப்பது 20 லட்ச ரூபாய். மகாவீருக்குக் கிடைத்த போலீஸ் பரிசு ரூ. 200!' இடக்கு விடுங்க. நீங்கதான் வீரனுக்கு நடுப்பக்க அந்தஸ்து தந்துட்டீங்களே!

சென்னை—35. சி. பூபால்சிங்.

● சித்திரக் கதை ஜேம்ஸ் பாண்ட் படங்களில் வரும் உச்சக்கட்டக் காட்சியைப் பார்ப்பது போன்ற பிரமையை ஏற்படுத்திவிட்டது. காரணம் ராமு அவர்களின் கைவண்ணம்தான்.

லால்குடி. சந்திரசேகரன்

● அன்னையைப் பற்றிய அளவான, அழகான கட்டுரை அற்புதம்... அதில் அரசியல்வாதிகளின் அசிங்கமான நடவடிக்கை ஆழமான பாதிப்பு..... அன்னையின் கைபட்ட வாழ்த்து என் நெஞ்சைப் பதிப்பு.

பெங்களூர்—16 டால்சிக்ஸ்.



● ''திறமை மிக்க ஒரு பெண் கலைஞரின் சாதனை, வாழ்க்கை என்ற சக்கரத்தில் எவ்வாறு சிதறுண்டு அவரின் மனத்தில் சோகச் சுவட்டைப் பதிக்கின்றது என்பதற்கு பழைய வயலின் (சிறுகதை) ஓர் எடுத்துக் காட்டு.''

ஊசூர் வெளிக்கடை.

டி. ராஜன்.

● குன்றில் உருவம் செதுக்கும் செய்திகளையெல்லாம் (11.3.84 இதழ்) இனிமேல் வெளியிடாதீர்கள். ஏற்கெனவே சிலைகளை வைத்து, தெருக்களையெல்லாம் ஒரு வழி பண்ணும் நம் ஊர் அரசியல்வாதிகள் இதைப் படித்து விட்டு இனிமேல் ஊரிலிருக்கும் குன்றுகளையும் பதம்பார்த்து விடுவார்கள்!

சென்னை—17.

கே. ரெங்கேஷ்.

(கடைசி கடிதம் பரிசுபெறுகிறது)

# டாக்டர் இப்படி சொல்வாரா?

## விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(15-3-1984 முதல் 14-7-1984 வரை)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V.I.P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

| முதல் பரிசு | இரண்டாவது பரிசு | மூன்றாவது பரிசு | நான்காவது பரிசு |
|---|---|---|---|
| கலர் TV (அல்லது ரூ. 10,000/- ரொக்கம்) | குளிர் சாதனப் பெட்டி (அல்லது ரூ. 5000/- ரொக்கம்) | வாஷிங் மெஷின் (அல்லது ரூ. 4000/- ரொக்கம்) | பிளாக் & ஒயிட் TV (அல்லது ரூ. 3000/- ரொக்கம்) |

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

சென்னை : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017 போன் : 447186, 442216

பெங்களூர் : 24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, செரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனால் ரோடு,
தஞ்சாவூர்-613 100 போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453

---

டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும்
அன்பளிப்பு வழங்கப்படும்.


பஸ்ட் மாத்திரம் எடு. போதும்! ஃபுல் ஃபிகர் வேணும்!
மேற்கத்திய பத்திரிகைகள்
ஜனநாயகம்
ஜியாவைக் கொல்ல இந்தியா சதி! (நாவல்)


மகாராஷ்டிர முதல்வர்↓
அந்துலே
நீங்க அவனை இடுப்பிலே தூக்கிக்க வேணும்னு சொல்றேனா? அவன் பாட்டுக்கு விளையாடிட்டுப் போகட்டும்!


மந்திரி போக்கு வரத்தில் ஊழல்
கோதுமையில் 60 லட்சம் மோசடி
உத்தேச பஸ்கட்டண உயர்வு
தமிழ் மக்கள்




# கல்கி

1984 ஏப்ரல் 1
ருத்ரோத்காரி பங்குனி 19
மலர் : 42 இதழ் : 35




# நீதி விளக்கையும் அணைய விடலாமா?

சுதந்திரத்துக்குப் பின் கடந்த 36 ஆண்டுகளில் எல்லாத் துறைகளிலுமே நாணயம் குறைந்து விட்டது. தார்மீகக் கருத்துக்கள், சத்தியம், நேர்மை, நல்லொழுக்கம், தூய எண்ணங்கள், உயர் லட்சியங்கள் ஆகியனவெல்லாம் அடியோடு மதிப்பிழந்து போக பேராசை, பணத்தாசை, பதவிப் பித்து போன்றவைதாம் கொடிகட்டிப் பறக்கின்றன. பர்மிட் லைசென்ஸ் பொருளாதாரக் கொள்கை, பணவீக்கத்தை அதிகரிக்கும் பட்ஜெட், அரசே லாட்டரி நடத்துகிற விபரீதப் போக்கு, மதுக்கடைகளைத் திறந்து விட்ட கொடுமை, பணமே பிரதானமாகி விட்ட தேர்தல் முறை போன்றவை 'காந்தி இந்த நாட்டில் தான் வாழ்ந்தாரா?' என்ற ஐயத்தையே தோற்றுவிக்கும் சூழலை உருவாக்கி விட்டன.

இருப்பினும் ஒரே ஒரு ஒளி விளக்கு 'மினுக், மினுக்'கென்று எரிந்து, 'அதர்ம இருள் நாட்டை முற்றிலும் கவ்வி, அந்தகாரத்தில் ஆழ்த்த அனுமதிக்க மாட்டேன்' என்று தைரியமாகக் கூறிவருகிறது. அந்தத் தீபம்தான் நீதித்துறை. ஆனால் இந்த ஒரு நுந்தாவிளக்கையும் அணைத்துவிட முயற்சி நடக்கிறது! மக்கள் விழிப்புடன் இல்லையெனில் இந்த முயற்சி வெற்றிபெறவும் கூடும்!

''மோகன் குமாரமங்கலத்தின் ''கமிட்டட் ஜுடிஷியரி'' கொள்கை ஆழக் குழி தோண்டிப் புதைக்கப்பட வேண்டும்'' என்று கூறி நாட்டை எச்சரித்திருக்கிறார் சுப்ரீம் கோர்ட் நீதிபதி துல்ஜாபூர்கர்.

நீதித்துறை நடுநிலையில் இருந்து விருப்பு, வெறுப்பற்ற முறையில் இயங்க வேண்டும் என்றுதான் மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அவ்வாறின்றி ஆட்சியில் இருக்கிற ஒரு அரசியல் கட்சியின் சித்தாந்தங்களை ஏற்று அதற்கு அனுசரணையாகத் தீர்ப்புக்களை வழங்குவது என்று ஆரம்பித்தால் ''கமிட்டட் ஜுடிஷியரி'' என்ற அபத்தநிலை தோன்றுகிறது.

'ஜனநாயக சோஷலிஸம்' என்று ஏற்கெனவே இரு முரண்பாடான வார்த்தைகளை வைத்துச் சொற்றொடர் பின்னி, அதற்கேற்பக் கொள்கைகளை வகுத்து அமல்படுத்தி, நாட்டைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கியவர்கள் இப்போது 'கமிட்டட் ஜுடிஷியரி' என்று மறுபடி முரண்பாடான வார்த்தைகளை ஒன்றிணைத்திருக்கிறார்கள். இந்தக் கொள்கை அமுலாவதன் விளைவாக என்ன நடக்கும் என்றால் ஆட்சியில் உள்ளவர்களின் அரசியல் கொள்கைகளை ஏற்பவர்கள்தாம் உயர்நீதி மன்றங்களில் பதவிக்கு வர முடியும்!

இப்போதே கூட கமிட்டட் 'ஜுடிஷியரி' என்ற சொற்றொடரைப் பிரதமரும் எதிரொலிக்க ஆரம்பித்த பிறகு, நீதிபதிகளின் நியமனம், பதவி உயர்வுகளில் முறைகேடுகளும், அவர்களை மாநிலம் விட்டு மாநிலம் மாற்றுவதாக அச்சுறுத்தல்களும் நடைமுறைக்கு வந்து விட்டன. 'பார், எனக்கு அனுசரணையாகத் தீர்ப்பு வழங்கவில்லையெனில் என்ன நடக்கும் தெரியுமா?' என்று கேட்காமல் கேட்கிற நிலை தோன்றிவிட்டது. அந்துலே போன்ற தனி நபர்களைக் காப்பாற்றுவதற்காகச் சட்டங்களையே மாற்ற முயற்சிகள், மேற்கொள்ளப்படுகின்றன.

எமெர்ஜென்ஸிக்கு வெளிப்படையாக ஆதரவளித்தவர்கள் நீதிபதிகளாகப் பதவி உயர்வுகள் பெறுவதும், நீதிபதி எச். ஆர். கன்னா தலைமையில் இயங்கிய சட்டக் கமிஷனின் சிபாரிசுகள் சரிவர அமல்படுத்தப்படாததுமான இன்றைய போக்குகளைத் துணிந்து கண்டித்துள்ள நீதிபதி துல்ஜாபூர்கர் ஜனநாயகத்திலும் நீதித்துறையின் சுதந்திரத்திலும் நம்பிக்கை கொண்ட அனைவரது நன்றிக்கும் பாத்திரராகிறார்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்




# இதற்குப் பதில் சொல்லுங்கள்!

நூற்றுக்கணக்கான வாசகர்கள் டி.வி. தொடர்பான தங்கள் சந்தேகங்களைக் கேள்வி உருவில் அனுப்பி இருந்தார்கள். பெரும்பாலான கேள்விகளுக்கு இலவச இணைப்பில் உள்ள கட்டுரைகளைப் படித்தாலே பதில் கிடைக்கும். ஆகையால் சில குறிப்பிட்ட கேள்விகளே தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கே பதில்களைப் பெறுகின்றன.

இரணியல் லட்சுமி மணாளன், சீதாராம் காட்டேஜ், நெய்யூர் 629 802.

கேள்வி: பல்வேறு நிலையங்களிலிருந்து ஒளிபரப்பப்படும் நிகழ்ச்சிகளை எப்போது நாம் சென்னை தொலைக்காட்சியில், ஒரே சமயத்தில் பார்க்க முடியும்? அப்படி ஒளிபரப்பப்பட்டால் ஒரே ஆண்டனா மூலம் நிகழ்ச்சிகளைப் பெற முடியுமா?

பதில்: டீ. வி. ஒளிபரப்பு என்பது ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் செயல்படுமாறுதான் அமைக்கப்பட முடியும். செயற்கைக் கோள் மூலம் பல்வேறு நிகழ்ச்சிகளைப் பெற்று ஒரே சமயத்தில் ஒளிபரப்ப முடியும். இந்தியாவைப் பொறுத்தவரை டெல்லியிலிருந்து தான் செயற்கைக் கோள் வழியாக ஒளிபரப்ப முடியும். சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய நகரங்களிலிருந்து கூடச் செயற்கைக் கோளை நேரடியாகத் தொடர்பு கொள்ள வசதி இல்லை. இது சாத்தியப்படுவதற்கு, செயற்கைக்கோளில் உள்ள ''டிரான்ஸ்பாண்டர்'' போன்ற பாகங்களை முன்னமேதிட்டமிட்டுக் கூடுதலான சக்தியுடன் அமைக்க வேண்டும். செயற்கைக் கோளில் இருந்து ஒளிபரப்பப்பட்டாலும் தொலைக்காட்சி நிலையத்தில் ஒரே டிரான்ஸ்மிட்டரை உபயோகப்படுத்தும் வரை, ஒரே ஆண்டனாவில் இரண்டு நிகழ்ச்சிகளைப் பார்க்க முடியாது.

உஷா கணபதி, 4 எ. எஸ். ஆர். கோயில் தெரு, கடலூர் O. T. 607 003.

கேள்வி: கிரிக்கெட் விளையாட்டின் போது Action Replay காண்பிப்பதுபற்றிச் சற்றுவிளக்குவீர்களா?

பதில்: பொதுவாக live telecast செய்யும்போது ஒளிபரப்புவது மட்டுமல்லாது, நிகழ்ச்சிகளை அதேசமயத்தில் பதிவு செய்து கொண்டு வருவார்கள். இரண்டு, மூன்று காமிராக்களில் படம் பிடிப்பது, ஒரே தொடர்பால் டிரான்ஸ்மிட்டருக்குச் செல்கிறது. அப்படி ஒரே தொடர்பாகச் செல்லும் போது தான் பதிவு செய்கிறார்கள். திடீரென்று ஒருவர் 'அவுட்' ஆகிவிட்டாலோ, காட்ச் பிடிக்கப்பட்டாலோ, அதை மீண்டும் பார்க்க, மற்ற காமிராக்களின் ஒளிப்பதிவை நிறுத்திவிட்டு, பதிவு செய்து வைத்ததிலிருந்து அந்தக் காட்சியை எடுத்து ஒளிபரப்புவார்கள். இதையே Slow motion னிலும், Freeze செய்தும் காட்டமுடியும். சென்னை தொலைக்காட்சியில் மேற்சொன்ன இரண்டு வசதிகளும் தற்போது கிடையாது.

கபாமணி, 27, மகாராஷ்ட்ரா சொஸைட்டி, எல்லிஸ் பிரிட்ஜ், அகமதாபாத் 380 006.

கேள்வி: எங்கள் வீட்டு டீ. வி. யில் அடிக்கடி வெள்ளைக் கோடுகள் ஓடுகின்றன. பத்து பதினைந்து நிமிடம் இப்படி இருக்கிறது. டீ.வி மெக்கானிக்கைக் கேட்டால் டீ. வி. நன்றாகத் தான் இருக்கிறது என்கிறார். ஏன் இப்படி?

பதில்: கோடுகள் தோன்றுவதற்குப் பல காரணங்கள் இருந்தாலும் பொதுவாக இரண்டு காரணங்களைக் கூறலாம். கார், பஸ், போன்றவை உங்கள் வீட்டைக் கடந்து செல்லும் போது ஏற்படுத்தும் அதிர்வுகள் சில விநாடிகள் உங்கள் டீ. வி.யைப் பாதிக்க வாய்ப்பு இருக்கிறது. டீ. வி. ஸ்டேஷனில் பதிவு செய்யப்பட்ட நாடாக்களை ஒளிபரப்பும் போது Recording head என்ற பாகம் தேய்ந்து போய் இருக்குமானாலும் திரையில் கோடுகள் தோன்றலாம்.

சித்திரப்பிரியா, கவி இல்லம், 154, சித்தார்த்தாநகர், டாக்டர் ராயன் சாலை, பெங்களூர் 560 053.

கேள்வி: டீ. வி. ஆரம்பித்து இயக்கும் போது ஒலி மட்டும் உடனே வந்து விடுகிறது. ஒளி வரத் தாமதமாகிறது. ஏன்?

பதில்: ஒலி, ஒளி அலைகள் இரண்டும் சேர்ந்தாற் போல் தான் நம் வீட்டு ஆண்டனாவிற்கு வருகின்றன. ஆனால் டீ. வி.யில் உள்ள பிக்சர் ட்யூப் சற்றுச் சூடாக ஆன பிறகு தான் படம் தெரிகிறது.

எம். எம். இப்ராகிம், 20—94 இலப்பவிளைகுளச்சல் 629 251, குமரி மாவட்டம்.

கேள்வி: சாதாரணமாக எவ்வளவு தூரத்தில் உட்கார்ந்து கொண்டு ட. வி. பார்க்கலாம். ட. வி. பார்க்கும் போது அறையின் வெளிச்சம் எவ்வாறு இருக்க வேண்டும்?

பதில்: எட்டு முதல் பன்னிரண்டு அடி தூரம் வரை உட்கார்ந்து கொண்டு பார்ப்பது நல்லது. ட. வி. செயல்படும்போது அறையில் மங்கலான மின் விளக்கு எரிய வேண்டியது அவசியம். நம் கண்களுக்கும் நல்லது. எரியும் விளக்கு கலர் விளக்காக இல்லாமல் பார்த்துக் கொள்ளவும்.

கனகா செங்கைமுத்து. 4. சிங்காரத் தோப்பு அருப்புக்கோட்டை, ராமநாதபுரம் மாவட்டம்.

கேள்வி: எங்கள் ஊர் புகழ்பெற்ற பங்குனிப் பொங்கல் விழாவை ஒளிபரப்ப யாரை அணுக வேண்டும்?

பதில்: கோயில் விழாக்கள், பொது நிகழ்ச்சிகள் போன்றவற்றை ஒளிபரப்ப, சம்பந்தப்பட்டவர்கள் சற்று முன்னதாகவே, விழாவைப் பற்றியும் நிகழ்ச்சிகளைப் பற்றியும் தொலைக்காட்சி இயக்குனருக்கு எழுத வேண்டும். விழாக்களின் சிறப்பைப் பொறுத்தும், நிகழ்ச்சிகளின் முக்கியத்துவத்தைப் பொறுத்தும் அதைப் படம் பிடிக்கலாமா வேண்டாமா என்பதை இயக்குனர் முடிவு செய்வார்.

எம். ஆர். ராமமூர்த்தி, ராம் அண்ட் கோ., 165, காந்தி ரோடு, காஞ்சிபுரம் 1.

கேள்வி: ஒரே வீட்டில் ஒருவருக்குச் சொந்தமாக ஒன்றுக்கு மேற்பட்ட ட. விக்கள் இருந்தால் ரேடியோவுக்கு உள்ளது போன்ற லைசென்ஸ் கட்டணச் சலுகை கிடைக்குமா?

பதில்: தற்போது இடையாது.

ஆர். பெரியசாமி, நார்மன்வில், 50, நாமஸ் சர்ச்ரோடு, உதகமண்டலம் 643 001.

கேள்வி: ட. வி. ஆண்டனாவில் அலுமினியக்கரண்டி போன்றவைகளை மாட்டி வைத்தால் நல்ல reception கிடைக்குமா?

பதில்: ட. வி. ஆண்டனாவில் மூன்று கம்பிகள் உள்ள ஆண்டனாவும், சிலபோது தொலைதூர நிலையங்களில் இருந்து ஒளிபரப்பும் நிகழ்ச்சிகளைக் காண 13 கம்பிகள் கொண்ட ஆண்டனாவும் வைத்திருக்கிறார்கள். ட. வி. நிலையத்தை நோக்கி வைக்கப்பட்டிருக்கும் ஆண்டனாவின் முன்பாகம் மின் காந்த அலைகளைப் பெறுகிறது. பின்பாகம் அப்படிப் பெற்ற அலைகளைக் கடந்து செல்ல விடாமல் பூஸ்டர் ஆம்ப்ளிபையர் மூலம் ஆண்டனா ஒயர் வழியாக செட்டுக்கு அனுப்புகிறது—சென்னையில் தொலைக்காட்சியின் ஒளிபரப்பைப் பெற 3 கம்பிகள் கொண்ட ஆண்டனா போதும். சென்னையில் உள்ளவர் 13 கம்பிகள் கொண்ட ஆண்டனா வைத்தால், செட்டுக்குத் தேவைக்கு அதிகமான மின் காந்த அலைகள் வந்துசேரும். கரண்டிகளை மாட்டி வைத்தால், அசிங்கமாக இருப்பது மட்டுமல்ல; அதனால் பிரயோஜன மேதுமில்லை.

டி. விஸ்வநாதன், தலைமையாசிரியர், S.V.K. மேல்நிலைப்பள்ளி, ஆ. தெக்கூர், 623 201, ராமநாதபுரம் மாவட்டம்.

கேள்வி: தற்போது வீடியோ பஸ்களில் ஓட்டுனரின் தலைக்கு மிக அருகில் கலர் ட. விக்கள் பொருத்தப்பட்டுள்ளன. அந்த ட. வி.யிலிருந்து வெளிப்படும் கதிர்வீச்சால் ஓட்டுனர் பாதிக்கப்படுவாரா? ட. வி. செட்டில் கதிர் வீச்சைத் தடுக்க என்ன செய்யப்பட்டுள்ளது?

பதில்: ட. வி. யின் திரை ரசாயனப் பூச்சு கலந்தது. நிச்சயமாகக் கதிர்வீச்சு உண்டு. ஆனால் கதிர் வீச்சு, ட. வி. பார்ப்பவர்களை எந்த அளவுக்குப் பாதிக்கிறது என்பதை காலம் தான் பதில் சொல்லவேண்டும். ட. வி. பார்க்கும் போது 12 அடி தூரத்தில் உட்கார்ந்து பார்ப்பது நல்லது. ஒரு ஆச்சரியமான விஷயம்: ட. வி. வேலை செய்யாத போது கூட திரையிலிருந்து கதிர்வீச்சு இருந்து கொண்டு இருக்குமாம்.

சந்தனமேரி சுபிரியேல், 18, பிரீட்டோ காலனி, கோ. புதூர், மதுரை 625 007.

கேள்வி: ட. வி. யில் ஒளிபரப்பப்படும் உரையாடல்கள் பாடல்கள் ஆகியவற்றை F.M. வசதியுள்ள ரேடியோவில் ட. வி. ஆண்டனா மூலம் கேட்க முடியுமா?

பதில்: ட. வி. ஒளிபரப்பும், F.M. ஒளிபரப்பும் வெவ்வேறு பாண்டுகளில் (Band) இயங்குகின்றன. வான மண்டலத்திலும் சில பாதைகள் உண்டு. ட. வி. அலைகள் ஒரு பாதையிலும், தபால் தந்தி துறையின் மைக்ரோவேவ் தொடர்புகள், ரயில்வேயின் ஒயர்லெஸ் தொடர்புகள், வானொலி அலைகள் போன்றவை பல்வேறு பாதைகளிலும், ஒன்றுக்கொன்று மோதிக் கொள்ளாமல் (சமயத்தில் மோதுவதுண்டு) செல்லுகின்றன. அதனால் ட.வி. உரையாடல்களை F.M. வசதியுள்ள ரேடியோவில் கேட்பது சற்றுச் சிரமமான காரியம் தான்.

தொகுப்பு: ப்ரியன்

பதில் கொடுக்க உதவியவர்கள்:

திரு. ஜி. நாகநாதன் இயக்குனர் (இன்ஜினியரிங்) தொலைக்காட்சி பிரிவு, தலைமைப் பொறியாளர் அலுவலகம், சென்னை—6.

திரு. கிருஷ்ணசாமி, மேற்பார்வை பொறியாளர், சென்னை, தொலைக்காட்சி.

திரு. குன்னி கிருஷ்ணன், துணை இயக்குனர், சென்னைத் தொலைக்காட்சி.

திரு. பார்த்தசாரதி, தபால்துறை இயக்குனர், சென்னை—2.

திரு. கிருஷ்ணபிள்ளை, ட. வி. டிரேடர்ஸ், சென்னை—18.

மேலட்டையில்: ஜெயலட்சுமி
வண்ணப்படம்: ஜே. டி. ஜானி







# தொழிலுறவு செழிக்க...

''சர்வதேச தொழிற்சங்க மாநாடுகளுக்குச் செல்லும் போது பல்வேறுதேசங்களிலிருந்து வரும் தொழிற்சங்கப் பிரதிநிதிகளை அவர்களின் தொழில் என்ன என்று விசாரித்தால் ஒருவர் பிளம்பர், மற்றொருவர் டிரக் ஓட்டுனர், மூன்றுமவர், மின்சாரத் தொழிலாளர் என்று பதில் வரும். அதே கேள்வியை இந்தியாவிலிருந்து வரும் பிரதிநிதிகளைக் கேட்டால் பதில் பரிதாபகரமாய் இருக்கும். தங்கள் தொழில் தொழிற்சங்கம் நடத்துவதுதான் என்பார்கள்! நமது நாட்டில் தொழிற்சங்கம் நடத்துவது ஒரு தொழிலாகி விட்டது. லாபகரமான வியாபாரமாகவும் சில சமயம் நடைபெறுகிறது...!''

—இப்படிக் கூறுபவர் யார் என்று பார்த்தால் வியப்பு மேலோங்கும். சுமார் 40 ஆண்டுகளாகத் தொழிற்சங்க இயக்கத்தில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு, இந்தியாவின் பிரதான தொழிற் சங்க இயக்கமான இந்திய தேசிய தொழிற் சங்கக் காங்கிரஸின் பொதுச் செயலாளராக இருந்து வரும் திரு. ஜி. ராமானுஜம் தான். ''யாருக்காக'' என்ற தமது நூலில் அவர் மேலும் சொல்கிறார்:

- தொழிற்சாலை செடியிலே பூத்திருக்கும் மலர். அதை மென்மையாகக் கையாள வேண்டும். மலருக்குச் சிரமமின்றித் தேனீ தேனைச் சேகரிப்பது போல தொழிலகத்திலிருந்து லாபத்தைத் தொழிற்சங்கத் தேனீ தொழிலாளருக்குப்பெற்றுத் தர வேண்டும். தொழிற்சங்கம் தொழிலகத்துக்குப் பாரமாகவோ ஆபத்தாகவோ இருக்கக் கூடாது.

- ஆடிக் கறக்கும் மாட்டை ஆடிக் கற, பாடிக் கறக்கும் மாட்டைப் பாடிக் கற, அடித்துக் கறக்கும் மாட்டை அடித்துக்கற என்பார்கள். பசுவின் சுபாவத்தைப் புரிந்து கொள்ளாத பால்காரன் போல் தொழிற்சாலை நிர்வாகத்தைப் புரிந்து கொள்ளாத தொழிற்சங்கத் தலைவர்களால் பிரச்னைகள் அதிகமாகுமே தவிர இரு தரப்புக்கும் லாபம் இராது.

- தொழிலாளர் கூடித் தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையில்வெளியார் எவரும் குறுக்கிடக் கூடாது. தங்கள் தலைவர் தங்களில் ஒருவராக இருக்க வேண்டுமா அல்லது வெளியார் ஒருவராக இருக்க வேண்டுமா என்று நிர்மாணிப்பது தொழிலாளர்விருப்பத்தைப் பொருத்தது.

- ஒரு ஊழியர் கோஷ்டி சேர்க்கத் தொடங்கியதுமே தலைவராகிறார்; ஊழியம் செய்வது உண்மையானால் அவருக்கு எதற்கு கோஷ்டி? ஆதிக்கம் செலுத்த கோஷ்டியே தவிர ஊழியம் செய்யத் தேவைப் படாது. கோஷ்டி சேர்ப்பது பதவியைத் தக்க வைத்துக் கொள்ளவும் சுயநலத்துக்காகத் தொழிலாளரைச் சுரண்டவும்தான்!

- தொழில் வளமாக இருந்தாலன்றி முதலாளி, தொழிலாளி இருவருக்குமே வேலை இல்லாது போகும். எனவே இரு சாராருக்கும் பொதுவான ஒரு லட்சியத்தை மையமாகக் கொண்டு ஒரு புதிய சட்டம், புதிய கலாச்சாரம் உருவாக வேண்டும்.

எல்லாம் சின்னச் சின்ன அத்தியாயங்கள். ஒவ்வொன்றிலும் எளிதாகப் புரிய வைக்க ஒரு உவமை. இந்த எளிமை—உவமை காரணமாக ராஜாஜியின் நடையை நினைவூட்டுகிறார் ராமானுஜம்.

இந்தப் புத்தகத்தை ஒவ்வொரு தொழிலதிபரும் தொழிலாளர்களுக்கு வழங்கிப் படிக்கச் செய்வது தொழிலுறவும் தொழிலும் செழிக்க உதவும்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை—17, விலை: ரூ. 12.




**பா**பு. தன் வீட்டு வாசலில் வந்து நிற்பவர்களை ஏற இறங்கப் பார்க்கிறான்.

''யாரு நீங்க...''

''இந்த வீட்டு அம்மாவைப் பார்க்க வந்தோம்...''

இவர்களின் குரல் கேட்டு, சமையலறை இருட்டிலிருந்து பயத்துடன், தலையை நீட்டுகிறாள் தாரா.

''அதோ, அம்மாவே இருக்காங்களே...''

முதலில் பேசியவன், தாராவைப் பார்த்தவுடன் போலிப் பணிவுடன் உடம்பை வளைக்கிறான்.

''நீங்க....''

தாரா கேட்கும்முன்பே அவன் சடாரெனப் பதிலளிக்கிறான்.

''விஜிம்மா உங்களை ஒரு நாளைக்கு வீட்டுக்கு வரச் சொன்னாங்க... நான் அவங்க வீட்டு கார் டிரைவர். மூந்தா நாள் நீங்க கூட அவங்க கிட்டப் பேசிட்டிருந்தீங்களே.. கோவிலாண்டை...''

எத்திராஜ் வேண்டுமென்றேதான் அப்படியொரு துருப்புச் சீட்டை உபயோகிக்கிறான்.

அவனுக்கு — இவள் விஜியுடன் பேசிக் கொண்டிருந்ததுதான் தெரியும். விஜியை — உமாவென்று நினைத்துப் பேசியது தெரியாது.

''விஜியம்மாவா... அப்படி எனக்கு யாரையும் தெரியாதே...''

தாரா படபடக்கிறாள். அவன் யாரைக் குறிப்பிடுகிறான் என்பது அவளுக்குத் தெரியாமலில்லை.

'அந்தப்பெண் பெயர் விஜியா... அட கஷ்டமே... இது கூடத் தெரியாம, என்னவெல்லாமோ உளறிட்டு வந்தோமே.... போதாக் குறைக்கு நான் பேசிட்டிருந்ததை இவன் வேறே கவனிச்சிட்டிருக்கான் போல இருக்கு. கடவுளே... இது எங்கே கொண்டு போய் விடுமோ தெரியலையே... நுணலும் தன் வாயாலே கெடும்னு தெரியாமலாச் சொல்லியிருக்காங்க பெரியவங்க...'

அவள் பரிதவித்துப் போய் விட்டாள்.

அந்தப் பதற்றத்தையும், பரிதவிப்பையும் அத்தனை சீக்கிரத்தில் மறைக்க முடியாததால் மேன்மேலும் உளறிக் கொட்டுகிறாள்.

''நல்லாயிருக்கே இது... நீங்க யாருன்னே எனக்குத் தெரியாது. எப்படி விஜியையும், உமாவையும் தெரியும்....? நீங்க ஆள் மாறாட்டமா வந்துட்டீங்க. நீங்க தேடற பொம்பளை நான் இல்லே...''

எத்திராஜ் புன்னகை மாறாமல், நின்ற இடத்திலிருந்தபடியே அவளையே ஆழமாய்ப் பார்க்கிறான்.

''நான் விஜிம்மாவைப் பத்திதான் கேட்டேன்... நீங்க உமா அம்மா பேரையும் சொல்றீங்க...''

''உம்... ஆ... விஜின்னு எனக்கு ஒரு ஸினேகிதி. ஆனா அவ இப்ப ஹைதராபாத்திலே இருக்கா. அவ தங்கை பேரு உமா... எனக்கு விஜின்னு உடனே அவளோட தங்கை உமாவும் தான் நினைப்புக்கு வருவா. இது ஒரு பெரிய விஷயமா... முதல்லே இடத்தைக் காலி பண்ணுங்க. இல்லாட்டி போலீசைக் கூப்பிடுவேன்...''

இதற்குள் பாபு, எத்திராஜின் சட்டையைப் பிடித்து, கொத்தாகத் தூக்குகிறான்.

''யார்ரா நீ...''

''சார் விடுங்க நாங்களும் போலீசைச் சேர்ந்தவங்கதான். இந்தம்மா வேலை பாக்கற கம்பெனி



# சொல் ஒன்று வேண்டும்

அநுராதா ரமணன்

சின்ன முதலாளி கொலை விஷயமா விசாரிக்க வந்தோம். அதுக்குள்ளே இவங்க அரண்டு போயிட்டாங்க. இந்தாங்க மேடம்.. உங்களுக்கு இந்தக் கொலையைப் பத்தின

ஏதாவது தெரியுமானு சொல்லுங்க.... இல்லாட்டி நாங்க வற்புறுத்த மாட்டோம். போயிட்டேயிருப்போம்.''

''மஃப்டியில் வந்திருந்த போலீஸ், தாராவின் பக்கம் திரும்ப, அவள் அவனை நோக்கிக் கையெடுத்துக் கும்பிடுகிறாள்.

''எனக்கு எதுவுமே தெரியாதுங்க...''

அவர்கள் தலையைத் தொங்கப் போட்டபடி நகர, அதற்காகவே காத்திருந்தாற் போல — பாபு, தாராவின் தலைமுடியைப் பிடித்திழுத்து, சுவரில் மோதுகிறான்.

''ஐயோ!''

''கத்தாதே ———யா. யாருடி இவங்க.''

''எனக்குத் தெரியாதுங்க...''

''முந்தா நாள் சாயந்திரம் யார் கூட நின்னு பேசிட்டிருந்தே...''

''நான் யார்கூடவும் நின்னுப்பேசல்லே.''

''எங்கிட்டப் பொய் சொல்றயாக் கழுதே.''

அவன் ஓங்கி அவளது இடுப்பில் ஒரு உதை விட்டான் அதே வேகத்தில் வாசற் கதவைத் தாழிட்டு விட்டு அலையக் குலைய விழுந்து கிடப்பவளின் கழுத்தில் இருகரங்களையும் பதிய வைத்து நெரிக்க

''சொல்லு விஜி யாரு..''

''தெரியாது...''

''மடியில கனமில்லாதவளுக்குப் போலீஸ் கிட்ட என்னடி பயம்... எதுக்கு அவங்களைப் பார்த்து நடுங்கிச் செத்தே...''

''....''

''நான் சொல்றேன்... விஜிங்கறது உன்னோடக் கூட்டாச் சேர்ந்து தொழில் நடத்தறவ... சரியா? நீ ஒண்ணும் ஆபீசுக்குப் போகலே. ஆபீஸ், ஆபீஸ்னு போக்கு காட்டிட்டு அந்த விஜி கூட '———யாத்தனம்' செய்யப் போறே... சரியா.... யாரோ உமான்னு சொன்னியே....செத்துப் போன சின்ன முதலாளிக்கும் உனக்கும் தொடர்பு உண்டு. சரியா... அது பொறுக்காத அவனுங்கள்லே எவனோ ஒருத்திதான் ஆள் வைச்சு, உங்க சின்ன முதலாளியைக் கொன்னிருக்கா, சரியா...''

ஒவ்வொரு 'சரியா'விற்கும் ஒரு பலத்த உதை. அவனது முரட்டுத்தனமான தாக்குதல்களின் விளைவாக அவளின் உதட்டுச் சதை பிய்ந்து ரத்தம் கசிகிறது. பின் மண்டையில் கணிசமான ரத்தப் பெருக்கு. கன்னத்தில் கருநீலமாய் ஊமைக் காயம்.

அத்தனையையும் தாங்கிக் கொண்டு, மௌனமாய், ஜடமாய்த் தரையில் படர்ந்திருக்கிறாள் அவள்.

''சொல்லேண்டி. இதெல்லாம் நிஜமில்லேன்னு—கம்பெனியில வேலை செய்யற அத்



தன்னை பேரையும் விட்டுட்டு — உன்னை எதுக்காகப் போலீஸ் விசாரிக்க வரணும்..''

அவன், அவளை மீண்டும் அடிக்கக்கையை ஓங்க — அதேசமயம் பார்த்து வாசற்கதவு தட்டப்பட...

''யாரு?''

அவன் கடுப்புடன் வினவுகிறான்.

''பாபு சார் இருக்காங்களா...?''

குரல் பழகிய குரலாய் இருக்க, அவன் கதவைத் திறக்கிறான்.

''டைரக்டர் உங்களைக் கையோட கூட்டிட்டு வரச் சொன்னாங்கண்ணே....''

—புதியவன் தலையைச் சொறிந்தபடி நிற்கிறான். பாபுவுக்கு வாயெல்லாம் பல். ஓர் இமைப் பொழுதில் முகமே பிரகாசமாகி விட்டது. சிரித்தபடி புதியவனின் தோள் மீது கையைப் போட்டுக் கொள்கிறான்.

''எதுக்குடா...''

''நாளை மறுநாள் அவுட்டோருக்காக சிம்லாபோறதா இருக்குங்க. ஹீரோவுக்கு டூப் வேண்டியிருக்கு... அதுக்குத்தான்...''

''சிம்லாவுல எத்தனை நாளுடா?''

''தெரியல்லீங்க...' பதினஞ்சு, இருபது நாளுக்குக் குறையாம இருக்கும்....''

''சரி, சரி வா...''

பாபு, அவனுடன் கிளம்பி விட்டான். புதியவன், வாசலைத் தாண்டும் வரையில், தரையில் அலங்கோலமாய்ப் படுவிக் கிடந்த தாராவையே திரும்பத் திரும்பப் பார்த்தபடி நகருகிறான்.

''அம்மாவுக்கு உடம்பு சரியில்லேயா?''

''உம். வயித்து வலி. நீ வா...''

கிளம்பியவன் வாசலில் நின்றபடி குரல் கொடுக்கிறான்:

''அடியேய்...வாசக் கதவைச் சாத்திக்க... கண்ட நாய்களும் உள்ளே வரப்போகுது..''

தாரா வெகு நேரம் அப்படியே கிடக்கிறாள்...

'ச்சே, என்ன ஒரு மடத்தனம்.... அந்தப் பெண்ணோட பேசறப்ப, அக்கம்பக்கத்துல யார் இருக்காங்கன்னு கூடப் பார்க்காம. இப்படியா...'

''அது சரி... இந்த விஜி யாரு.... இவளுக்கும், அந்த உமாவுக்கும் என்ன உறவு? நல்ல சினேகிதம்தானா... இல்லே....''

அந்தக் கணத்தில், புருஷனின் அடியுதையைப் பற்றி அவள் கவலைப்பட்டதை விடவும், தான் விஜியிடம் பேசியது தன் கணவன் வரையில் பரவி விட்டதே என்பதற்காகத்தான் அதிகமாய் வருத்தப்பட்டாள்.

'இனிமே இதுபோல மாட்டிக்கக்கூடாது.. ஜாக்கிரதையா நடந்துக்கணும்...'

அவள் எழுந்து உட்கார்ந்து, பிரிபிரியாய்க் கலைந்து கிடக்கும் தலை முடியை இழுத்து முடிந்து கொள்கிறாள். உதட்டுக் காயத்துக்கும், கன்னத்துக் கருந்திட்டுக்கும் தேங்காயெண்ணெயைக் குழைத்துப் பூசுகிறாள்.

இத்தனை வலியையும் மீறி, நெஞ்சுக்குள் சின்னதாய் ஒரு சந்தோஷம்....

'இன்னும் இருபது நாளைக்கு இந்த மனுஷனோட தொந்தரவு இல்லாம இருக்கலாம்..'

ஒரு நல்ல மனைவி இதுபோல நினைப்பது தப்புத்தான் என்று உள்ளுக்குள் ஒரு குரல் கொடுத்தாலும்... தன்னைத் தானே சமாதானப் படுத்திக் கொள்கிறாள்...

'நல்ல மனைவி இதுமாதிரி நினைக்கறது தப்புத் தான். ஆனா, நல்ல புருஷன் கிடைச்ச நான் இப்படி நினைச்சா அது தப்பு... இவனுக்கு இது போதும்....'

'இப்படி நினைக்கறவ ஏன் இன்னமும் இவன் காலடியையே சுத்திச் சுத்தி வர்றே... உன் சங்காத்தமே வேண்டாம்ன்னு உதறிட்டுப் போய், போலீஸ் ஸ்டேஷன்லே நில்லேன்... பாவம், வாயும் வயிறுமா புருஷனை நினைச்சு அழுதுட்டிருக்கிற அந்தப் பொண்ணுக்காவது வாழ்க்கை திரும்பும்...'

'அது... அது... எப்படி சாத்தியம்.... அதற்கப்புறம் என் வாழ்க்கை என்னஆறது? இந்த வாழ்க்கை ஒரு நரகம் தான். ஒத்துக்கறேன். இருந்தாலும் இதிலேயிருந்து கழண்டுட்டா, இந்த மனுஷனே என்னை நாலு பேர் முன்னாடிக் கேவலப்படுத்திடுவானே...'

இவள் தனக்குள் குழம்பிக் கொண்டிருந்த அதே நேரத்தில்—

எத்திராஜின் முகத்தில் இடிக்காத குறையாக, கையிலிருந்த லத்தியை ஆட்டி ஆட்டிப் பேசுகிறார் மஃப்டி போலீஸ்காரர்.

''யோவ்... நீ சொன்னதை வச்சுட்டு அங்கே போய்க் கேட்டேனே... என் புத்தியை ஜோட்டால அடிச்சுக்கணும்... அந்த மனுசன் சரியான சந்தேகப் பிராணி... நாம அந்தண்டை நகர்ந்ததுமே அந்தப் பொண்ணுக்குச் செமத்தியான அடி.... காதுல விழுந்திச்சா... இனிமேயாவது இந்த மாதிரி தப்புத் தப்பா அடையாளம் காட்டாதே...''

''இல்லே ஏட்டு. இந்தப் பொண்ணுதான். அதுல எனக்குச் சந்தேகமில்லே. ஒரு விஷயம் பார்த்தீங்களா... இந்தப் பொண்ணு வேலை செய்யறதும் ராஜா வேலை பார்க்கற அதே கம்பெனியிலதான்...''

''இருக்கலாம்யா. ஆனா, கோயிலாண்டை உங்க எஜமானர் வீட்டு ஜனமைப்

---

''எனக்கு ரெண்டு கோடி பரிசு விழுந்தது பியூன் பங்காருக்குத் தெரியக்கூடாது!''

''ஏன்?''

''நான் அவங்கிட்டே வாங்கியிருந்த ரெண்டு ரூபாய் கடனைக்கேட்பானே!''

—நெல்லை சுவாதி.



இரண்டாம் ரிச்சர்டு மன்னன் பெரும் செலவாளி. இவர் ஒருசமயம் செலவுக்குப் பணமில்லாமல் தம் கிரீடத்தையே அடகு வைத்துவிட்டார்!

'பார்த்தும் கேட்டும் அறியாத' என்னும் நூலிலிருந்து. —ஜா. ரவி.





ஹீரோ: ''இந்த இருபது பக்க வசனத்தை நான் எப்போ பேசணும்?''

டைரக்டர்: ''உங்களை வில்லன் சுட்டதும் சாகிற போது...''

—கீழை. அ. கதிர்வேல்.

பொண்ணு கிட்டப் பேசிட்டிருந்த பொண்ணும் இதுவும் ஒண்ணு... இனிமே கரீக்டா தெரிஞ்சா என்கிட்ட வந்து சொல்லு. இல்லாட்டி வராதே... அந்தப் பொண்ணோட புருஷன்காரனைப் பார்த்தேயில்லே.. ஒண்ணும் நம்பர் ரவுடி போல இருக்கான். அவன் ஒரு தட்டு தட்டினு —நான் தான் — அங்கே இருக்கற 'டிச்'சிலே போய் விழுவேன்...''

எத்திராஜ் முன் படர்ந்த தனது தாடையைத் தடவியபடியே அங்கிருந்து நகருகிறான்...

அன்று, தான் பார்த்தது இவளைத்தான். அதில் அவனுக்கு எள்ளளவும் சந்தேகமேயில்லை.

ஆனால் இதை எப்படி, போலீஸில் சொல்லி, அவர்களை நம்ப வைப்பது?

நம்ப வைப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். தான் இது போல, போலீசுக்கு உள் கையாக இருப்பது பரந்தாமன் குடும்பத்தினருக்கோ.. இல்லே, பரந்தாமனின் போலீஸ் சினேகிதர்களுக்கோ தெரிந்து விட்டால் — அதற்குப் பின் தன் நிலை என்ன....?

அந்தக் கணமே, அவன் தன் மனசுக்குள் ஒரு தீர்மானம் செய்து கொள்கிறான்...

இந்தக் கொலையில் எந்தவொரு துப்புக் கிடைத்தாலும், உடனுக்குடன், போலீசுக்கு அதை ஒரு மொட்டைக் கடிதத்தின் மூலமோ, அனுமதேய 'போன் கால்' மூலமோ தெரிவித்து விடுவது என்பதுதான்.

அவனது கையெழுத்தைச் சுலபத்தில் அடையாளம் கண்டுகொள்ள யாராலும் முடியாது என்கிற நம்பிக்கை அவனுக்கு எப்பொழுதும் உண்டு.

கொஞ்சம் ஓவியம் வரையும் திறமையும், இயல்பிலேயே ஊறிப்போன குயுக்தி புத்தியும் ஒருங்கிணைந்தவனாயிற்றே...

தாரா வீட்டிலிருந்து கிளம்பியவன்—லஸ் முனையில் திரும்பி, அங்கிருந்த நவசக்தி விநாயகர் கோவில் முன் நின்று கண்களை மூடி, கன்னத்தில் போட்டுக் கொள்கிறான்..

''பிள்ளையாரே... இந்த ராஜா போலீஸ் கையில சிக்கி, அவனுக்குத் தூக்குத் தண்டனை கிடைக்கட்டும். உனக்கு நூத்தியெட்டு சதுர் காய் போடறேன்... அவனைப் பத்தின தகவல்களை எப்படியாவது எனக்குத் தெரிவி. நான் கொடுக்கிற துப்புக்களை வச்சிக்கிட்டு, போலீஸ் அவனை அரெஸ்ட் செய்யணும். ஆண்டவனே, கை விட்டுடாதே...''

எத்திராஜ் பிள்ளையாரிடம் வேண்டிக் கொண்டிருந்த அதே நேரத்தில் —

தாரா — சமையலறையின் இருள் படர்ந்த சுவரில், ஒப்புக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் பிய்ந்துப் போன வேங்கடாஜலபதிப் படத்தின் முன் அகல் விளக்கை ஏற்றிவிட்டுக் கண்களை மூடிப் பிரார்த்திக்கிறாள்....

'கடவுளே... ராஜா போலீஸ் கையில அகப்படக் கூடாது. அவனுக்குப் பாதுகாப்பு தர வேண்டியது உன் கடமை...'

தாரா மனமுருகி நின்ற அதே கணத்தில்—

படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த உமா, தன் தாலிச் சரட்டில் கோக்கப் பட்டிருந்த திருமாங்கல்யத்தை எடுத்து, கண்களில் ஒற்றிக் கொள்கிறாள்...

'என் தெய்வமே... கல்யாணத்துக்கு முன்னாலே கடவுள் பக்தியைப் பத்தி எனக்கு அதிகம் தெரியாது. அப்புறமோ — உங்களைத் தவிர வேற ஒரு கடவுள் இருப்பதே எனக்குத் தெரியாது... நீங்க எங்கேயிருந்தாலும் பத்திரமாயிருக்க — முதல் தடவையா இப்பத்தான் கண்ணுக்குத் தெரியாத கடவுள்கிட்ட மடிப்பிச்சை கேட்கறேன்...'

உமா, உதட்டுக்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்த அதே நேரத்தில் —

விஜி, மீனாட்சியின் கட்டிலுக்குக் கீழே, தரையில் படுத்திருந்தவள், தன் கையிலிருந்த வளையல் சுற்றி வந்த காகிதத்தை ரகசியமாய் முகர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாள்...

அவனது ராஜாவுக்கே உரிய, அவள் மூக்குக்குப் பரிச்சயமான, அவளால் மட்டுமே அறியக் கூடிய — அந்தத் தேக வாசனை புலப்படுகிறதா என்று... (தொடரும்)

# விடி வெள்ளி

**வ**டகிழக்கு மூலையிலிருந்து வாடைக் காற்று பனியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு வீசியது. தெருவிளக்குக் கம்பங்கள் வெறுமையாக நிற்கின்றன. நீக்கமற நிறைந்திருக்கும் அறியாமையைப்போல் அமாவாசை இருள் கனமாகச் சூழ்ந்திருந்தது.

அந்தக் கிராமத்து மூலையில் எங்கோ சில நாய்கள் குரைத்துக் கொண்டே இருந்தன.

வடிவு நிமிஷத்துக்கொருதரம் குடிசை வாசலை நோக்கியபடியே, இன்று மதியம் வாங்கிய உப்புக் கருவாட்டை நெருப்பில் சுட்டுப் பதப்படுத்தி, சாம்பலைத்தட்டி அலுமினியக் கிண்ணத்தில் எடுத்து வைத்தாள். கருவாடு நெருப்பில் பொசுங்கும் மணம் தெருவெல்லாம் நிறைந்து கமழ்ந்தது.

இன்று காலை உதயத்திற்குச் சற்று முன்பாகவே எழுந்து கருக்கிருட்டு மறைவதற்குள் குடிசை வாசல் தெளித்துக் கூட்டிப் பெருக்கிவிட்டு, கொஞ்சம் நீராகாரத்தையும் நாலு பருக்கையையும் அலுமினிய வாளியில் நிறைத்துத் தூக்கிக் கொண்டு அவள் கிளம்பியபோது கூட அவன் நிறைமுக்காட்டை விலக்காமல் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தான். குனிந்து அவனை அசைத்தாள்.

''ஏன் புள்ளே! ஏன் இப்படித் தொந்தரவு பண்றே?''

''''விடிஞ்சிடுச்சி மச்சான்! எழுந்திரி. நேத்தே அறுப்பு இல்லேன்னு வெறுங்கையோட வந்தே. இப்பவாச்சும் ஏங்கூட வாயேன். மேஸ்திரி வேலை குடுப்பாரு.''

''ம். ம்... நீ போ... நான் வர்றேன்.''

''ம்க்கும். உன்மேல தப்பில்லே. எல்லாம் ஒங்க சங்கத்தால வர்ர வெனே. ஏதாச்சும் பண்ணு. நான் போறேன்.''

**ரூ**பாய் ராவுத்தர் புதிதாகக் கட்டும் பங்களா வேலையில் சித்தாளாகப் பகல் முழுவதும் ஊசியாகக் குத்தும் வெயிலில் செங்கல்லும் கலவைச் சட்டியும் சுமந்து, அந்தி சாய்ந்ததும் ஆறு ரூபாய் கூலிவாங்கி அவசர அவசரமாகத் திரும்பும் வழியில் செட்டியார்மளிகைக்கடையில் நின்றாள்வடிவு.

லாட்டரிச் சீட்டு விற்குமிடத்தில் நிறைந்திருக்கும் கூட்டத்தைப் போல், இங்கும் அந்தி சாய்ந்தால் அளவற்ற கூட்டம். இடித்துப் புடைத்து ஒருவழியாக உள்ளே நுழைந்து, அரிசியும் அன்றைய சமையலுக்குத் தேவையான சாமான்களையும் வாங்கி முந்தானையில் முடிந்து. கொண்டு கடை வெளிச்சத்திலிருந்து வெளியே வந்தபோது அவள் கண்கள் இருட்டில் பழகச் சற்று நேரம் பிடித்தது.

அப்போது—

''வடிவு!''

தேனொழுகும் கணவன் குரல் அவளைத் திரும்ப வைத்தது. அதற்குள் அவன் அவளைத் தொடும் தூரத்தில் நெருங்கிவிட்டான்.

''எம்மா காசு வச்சிருக்கே வடிவு?''

''உனக்கு எம்மா வேணும்? அதைச் சொல்லேன்!''

மனதிற்குள் சினம் துளிர்த்தது அவளுக்கு. கள்ளுக் கடைக்குத் தண்டம் அழ வேண்டியிருக்கிறதே என்ற பொருமலுடன் இயந்திரமாக அவள் கை துணிமுடிச்சை அவிழ்த்து ஒன்றரை ரூபாயை அவன் கையில் திணித்தது.

''வெள்ளென வந்திடு, மச்சான்.''

அவன் பதில் குரலைக் கூடக் கேட்காமல் வேகமாக நடையை எட்டிப்போட்டு நடந்தாள் வடிவு.

**இ**ரவு வெகு நேரமாகியும் அவன் திரும்பவில்லை.



# ராஜகுரு



பசி அவள் வயிற்றைக் கிள்ளியது. எண்ணெய்ப் பசையற்ற தலைமுடியை ஒரு முறை பிரித்துத் தட்டி முடிந்துகொண்டு எழுந்தாள். உடம்பெல்லாம் பகலின் உழைப்பு காரணமாகக் கடுமையாக வலித்தது. ஒருமுறை கைகளைத் தலைக்குமேல் கொண்டு போய்ச் சோம்பல் முறித்தாள். வளமாகத் திரண்டிருந்த உறுதியான மார்பகங்கள் திண்ணென்று நிமிர்ந்ததால் அவள் அணிந்திருந்த பழைய ஜாக்கெட் திணறியது. திட்டுத் திட்டாக வியர்வையால் காய்ந்து சாம்பல் பூத்திருந்த அந்த ஜாக்கெட்டைக் கழற்றிக் கொல்லைப்பக்கமிருந்த மண்தோண்டி நீரில் நனைத்துக் கசக்கி நேற்று மீதம் வைத்திருந்த உப்புச்சவக்காரத் துண்டால் தேய்த்துத் துவைத்து அலசி, குடிசைக்குள் கட்டியிருந்த சணல் கொடியில் காயப் போட்டாள்.

அவள் கண்கள் அவனைத் தேடி அலைபாய்ந்தன.

சங்கத்தில் தொடர்பு வைத்துக்கொண்டபின் அவன் ரொம்பவும் கெட்டுப்போய் விட்டதாக அவள் உள்மனம் எண்ணியது. புதுப்புதுப் பழக்கங்கள் அவனிடம் தொற்றிக் கொண்டிருந்தன.

'எப்படியாவது சங்கத்தொடர்பை அவனிடமிருந்து துண்டித்து விடவேண்டும்.'

காவிரியின் கடைமடைப் பகுதியில் உள்ள இந்தக் கிராமமே நீரின்றி வறண்டு விட்டது. தாளடிப் பயிர்கள் கருகி உழவர்களின் நெஞ்சங்கள் உருக்குலைந்து விட்டன. சம்பாப் பயிர்கள் அரைகுறையாய் விளைந்து அங்கொன்றும் இங்கொன்றுமாய் நாளும் நலிந்து" வரும் நியாயத்தைப் போல், பஞ்சையாய்க் காற்றில் கலகலத்து வெறுமைச் சிரிப்பைச் சிந்தி நின்றன.

இருக்கும் அரைகுறை நெற்பயிரை எப்படி அறுத்துக் கரை சேர்ப்பது என்பது குறித்துக் கிராமத்து உழவர்கள் கூட்டம் கூடி விவாதிக்க வேண்டிய நிலை.

கூட்டத்தில் சரியான முடிவு ஒன்றும் புலப்படவில்லை.

ஓர் இளம் விவசாயி எழுந்து நின்று நரைத்த தலைகளுக்கும் நாட்டாண்மைப் பெரியவருக்கும் ஒரு பெரிய கும்பிடு போட்டான்.

''இன்னிக்கிக் காத்தால என்வயலை அரசாங்கம் நிர்ணயிச்ச கூலி வாங்கிக்கிட்டு அறுக்க முடியாதுன்னு நம்மூர் தொழிலாளிங்க சொல்லித் திரும்பிட்டாங்க. நான் கொஞ்சம் கூடுதலாப் போட்டுத் தர்றதாயும் சொல்லிப் பார்த்திட்டேங்க. யாரும் காதிலேயே வாங்கல.''

''நீங்க எம்மா கூலி தர்றதாச் சொன்னீங்க?''

''மார்வுக்கு மூணு மரக்கால் கூடுதலாத் தர்றதாச் சொன்னேங்க.''

''ஓங்க நெலம் விளைச்சல் எப்படி இருக்கு?''

''மார்வுக்கு அதிகபட்சமா ரெண்டு கலம் காணும்னு நெனக்கிறேன். மாட்டுக்காவது வைக்கோல் கிடைக்கும்னு தான் இப்ப அறுக்கணும்னு சொல்றதே.''

''ஆமாம். அது வேறல்லே பெரிய சங்கடமா இருக்கு? இப்பவே மாட்டுக்கு வைக்கோல் கெடைக்கல. வயல்ல இருக்கிற வைக்கோலயாவது அறுத்தெடுத்தாத்தான் மாடுகளையாவது காப்பாத்தலாம்.''

''நாளையிலேருந்து நம்ம விவசாயிகள் மட்டும் ஒண்ணுசேர்ந்து ஒவ்வொருத்தருக்கா அறுவடையை முடிச்சிடுவோம். வேலே தெரிஞ்ச பெண்டு பிள்ளைகள் எல்லோருமே அறுப்போம். வேற வெளி ஆட்களை யாரா யிருந்தாலும் வெச்சிக்க வேணும். என்ன சொல்றீங்க?''

ஒருமித்த முடிவோடு விவசாயிகள் கூட்டம் கலைந்தது.

நடு இரவு நேரம்.

''வடிவு!... வடிவு!''

அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த வடிவு துடித்தெழுந்தாள். பசி மயக்கமும், தூக்கக் கலக்கமும் இணைந்து அவள் கால்கள் சற்றுத் தடுமாறின. ஆங்காங்கே சிறுசிறு நட்சத்திரக் கண்களோடு இருந்த சேலைத்தலைப்பை நன்றாக இழுத்துச் செருகிக் கொண்டு வாசல் மூங்கில் தட்டியைத் திறந்தாள்.

''என் மச்சான்! சாமக்கோழி கூவப் போவுது. இம்மா நாழி எங்க வெட்டப் போனியாம்? இது ஒனக்கே நல்லாஇருக்கா? குடிக்கிற கஞ்சியைச் சூடா குடிக்க முடியுதா? எல்லாம் ஆறிக் குட்டிச்செவுராப் போயிருக்கும்.''

---

மத்திய மந்திரி பூடாசிங்கிற்கு ஒருவர் கடிதம் எழுதித் தபாலில் சேர்த்தார். ''விலாசதாரரைக் கண்டுபிடிக்க முடியவில்லை'' என்று அக்கடிதம் திருப்பியனுப்பப்பட்டது!

ஆதாரம்: விஸ்டம்.
தகவல்: ஆர். அரிகோபி.



''கள்ளுக்கடையிலேருந்து வீட்டுக்கு வெள்ளனமாத் திரும்பிக்கிட்டிருந்தேன், வடிவு! வழியிலே புடிச்சி இழுத்துக்கிட்டுப் பூட்டானுவ.''

''எங்க?''

''இன்னிக்கி அம்மாசிக் கூட்டம்ல. எனக்கு நெனவில்லாமதான் வூட்டுக்குத் திரும்பிக்கிட்டிருந்தேன்.''

''சரி, சரி சாப்பிடு, மச்சான்.''

அவன் முகமும் உடலும் வாட்டமாக இருப்பதும் அவள் மனசை நெகிழச் செய்தது.

தான் வேலைக்குச் செல்லாமல் மனைவிமட்டும் கொளுத்தும் வெயிலில் கடந்த சில மாதங்களாக வேலைக்குச் சென்று தனக்கு வாய்க்கு ருசியாகச் சோறும் கருவாடும் கொடுக்கும் அருமையை நினைத்து நினைத்து அவன் நெஞ்சு குற்ற உணர்ச்சியால் குன்றியது. தன்மானத்திற்கு இழுக்கு என்று மனம் தடுமாறினான்.

தன்னைக் கட்டிக் கொண்டு அவள் என்ன சுகத்தைக் கண்டாள்? அவள் மாநிற அழகு கறுத்து உருமாறிப் போவதை எண்ணி அளவற்றுத் தன்னை நொந்து கொண்டான். நாளையிலிருந்தாவது அவளோடு தானும் கட்டட வேலைக்குப் போவதென்று மனதிற்குள் முடிவு செய்தான்.

ஆனால்....

மின்னல் வெட்டியதைப் போல் அன்றைய அமாவாசைக் கூட்ட நடப்புகள் நினைவில் தோன்றியதும்.....

இதேபோல் சென்ற ஆண்டு இந்த சங்கத்தார் சொல்லை நம்பி கூலி உயர்வு கேட்டுப் போராட்டம் நடத்திச் சிறைக்குச் சென்ற, அவன் தெருவைச் சேர்ந்த சின்னான், கலியன், கருப்பன் இவர்கள் ஆறுமாத சிறை வாசத்திற்குப் பின் மஞ்சள் காமாலை, வயிற்றுப்போக்கு, காச நோய் கண்டு திரும்பிய அவலமும், அவர்கள் சிறைக்குச் சென்ற பின் அவர்களின் மனைவி மக்கள் கஞ்சிக்கும் கட்டிக் கொள்ளத் துணிக்கும் அலைந்து அல்லல் பட்டதும், அதில் ஒருத்தி வயிற்றுப் பசிக்காக மானத்தை இழந்து, ஊர் முழுக்க சிரிப்பாய்ச் சிரித்து... கடைசியில் ஊரை விட்டே விரட்டப்பட்டதும் அவன் நினைவில் நிழலாடி நிம்மதியைக் குலைத்தன.

நெஞ்சில் ஓர் அச்சத்தை ஏற்படுத்தின.

இந்த நிமிடத்தில் தானும் சிறைக்குச் செல்வதாக உணர்ந்தான். அவன் கண்கள் கலங்கி விட்டன.

பனிக்குளிரை அவன் உடல் உணர்ந்தது. வடிவின் ஜாக்கெட் இல்லாது திரண்டிருக்கும் எழுச்சிகள் அவன் உணர்வுத் தீக்கு எண்ணெய் வார்த்தன. என்றுமில்லா முனைப்போடு, மூர்க்கமாக அவளை அள்ளி மார்பில் போட்டுக் கொண்டு, அவள் இதமுருகே முகத்தைக் கொண்டு போனான். சிம்னி விளக்கு அணைய இவ்வுலக சிந்தனை அவர்களுக்கு மறந்தது!

விடிகாலை.

கிராமத்துச் சேவல்கள் ஒன்றன் பின் ஒன்றாகக் கூக்குரலிட்டுக் கூவின.

விடிவெள்ளி மட்டுமே வானத்தாமரை போல் தகதகவென ஒளி வீசியது.

வழக்கம்போல் வேலைக்குக் கிளம்புமுன் மச்சானிடம் குனிந்து அவன் நிறைமூக்காட்டைத் தொட்டாள் வடிவு.

''இரு, வடிவு.''

விலுக்கென்று வேட்டியை நன்கு கட்டிக் கொண்டு, முகம் கைகால் கழுவிக்கொண்டு அவனும் அவளுடன் வேலைக்குக் கிளம்பிய அந்த வினாடியிலும் அவளால் அதை நம்ப முடியவில்லை.

இவையெல்லாம் நிஜந்தானா? கனவல்லவே?

மெய்யாகவே அவனும் மனைவியோடு வேலைக்கே கிளம்பி விட்டான். அவர்கள் வாழ்வில் விடிவெள்ளி முளைத்து விட்டது.

அவள் கையைப் பிடித்துத் தன்னுடன் சேர்த்தணைத்துக் கொண்டு குடிசைக்கு வெளியே வந்தான்.

தெருத் திருப்பத்தை நெருங்கினார்கள்.

எதிரே....

கூட்டமாக ஆணும் பெண்ணும் அறுப்பு அரிவாள்கள் சகிதம் இவர்களை நெருங்கியதும்....

அவர்கள் திகைத்துப் போய்ச் சற்று விலகி நின்றார்கள். அந்தக் குளிரிலும் அவளுக்குக் 'குப்'பென்று வியர்த்துக்கொட்டியது.

''என்னடா வடிவேலு! எங்க பொஞ்சாதியோட பொறப்பட்டுட்டே?''

''கட்டட வேலைக்குப் போறோம் தலைவரய்யா.''

பதிலை வடிவுதான் சொன்னாள்.

''ஏண்டா, ராத்திரி ராக் கூட்டத்துலே என்ன தீர்மானம் செஞ்சோம்? நீ மட்டும் பொஞ்சாதி பேச்சைக் கேட்டுக் கட்டட வேலைக்குப் போயிடுவியா? நீ இந்தத் தெருவில... ஊர்ல இருந்திடுவியா....? என்னு நினைச்சுக்கிட்டிருக்கே நீ ...ம்? மரியாதையா எங்களோட ஒத்துமையா இப்ப அறுப்பு அறுக்க நீங்க ரெண்டு பேரும் வரீங்களா? இல்ல... இன்னிலேயிருந்து ஒன்னோட நெருப்பு வழக்கம் நீர் வழக்கம் இல்லாம... ஊர்லயிருந்து ஒங்கள ஒதுக்கி வச்சுடுவோம். ஆமாம், வாழ்வு சாவுக்குக் கூட எங்க கிட்ட நீ நெருங்கக் கூடாது... என்னடா சொல்றே?''

சங்கத் தலைவன் ஆக்ரோஷமாக அனலை வார்த்தைகளாக்கிக் கொட்டினான்.

வடிவின் மனசின் உற்சாகமெல்லாம் வடிந்து போய் முகம் வெளுக்க நின்றாள். வடிவேலு இன்னமும் பேச நாவெழாமல் குழம்பிப் போய் நின்றான்...!

வேண்டா வெறுப்போடு கூட்டத்தோடு கூட்டமாக அவர்கள் அலையில் அடித்துச் செல்லும் துரும்புகளாக வயல்வெளிக்கு நகர்ந்தனர்.

பொழுது நன்றாக விடிந்து விட்டிருந்தது. புற்களும் இலைகளும், பனித்துளிகள் பனிச் சிட்ட காட்சி வடிவேலுவின் மனசில், அவை தங்களைப் பார்த்துக் கண்ணீர் விடுவதாக எண்ண வைத்தது.

இவர்கள் வயல் வரப்புகளை அடைந்த போது...



திருடன்: ஏன் பணத்தையெல்லாம் வெத்திலைப் பாக்கு வச்சுக் கொடுக்கிறே?

அவன்: நீதானே 'உன் பணத்தையெல்லாம் 'மரியாதையா' என்கிட்டே கொடுத்துடு'ன்னு கேட்டே!

—எம். பாஸ்கர்,

அங்கே வயலின் சொந்தக்காரர்கள் அறுவடை செய்து கொண்டிருந்தார்கள்.

'நிழல் தீர்மானங்கள் நீராகிப் போய் — நிஜப்போராட்டம் தோன்றி நெருப்பு விழிகள் விழிக்க —

என்ன? அடுத்து என்ன? என்ற பரபரப்பு.

இரு பக்கத்திலும் உணர்ச்சிகள் ஊசிமுனைகளில் நிற்க —

எங்கும் தீ அரக்கன் கொடூரம்; பயங்கரப் போராட்டங்கள்; குருதி வெள்ளம் பாய்ந்தோடியது!

எல்லாமே ஒரு சூறாவளியின் வேகத்தில் நடந்தன.

தீயணைப்பு வண்டிகள் அலறிப்புடைத்து வந்தன. காவல் துறை வந்தது. ஆர்.டி.ஓ. வந்தார். கடமையுணர்வோடு முன் வந்த போலீஸ் சப் — இன்ஸ்பெக்டருக்கு அரிவாள் வெட்டு.

கற்கள் தோட்டாக்களாக மாறின. மனித மனங்கள் கற்களாக மாறின. தடியடிப் பிரயோகம் செய்தும் கலவரம் கட்டுக்கு வரவில்லை. கண்ணீர்ப் புகைக் குண்டுகள் வெடிக்கப்பட்டன.

எல்லாமே புஸ்வாணங்களாயின.

நிஜத் தோட்டாக்கள் சீறி வெடித்தன.

கிராமத்தில் ஒரு பெட்டாலியன் காவற் படை 'காவல்' காக்கிறது. கிராமம் வறட்சியால் அழிந்ததுபோக மீதி சொச்சமிச்சங்கள் புரட்சியால் அழிந்து களையிழந்து சுடுகாடாக நின்றது.

கொலைக் குற்றத்திலிருந்து தன் கணவன் எப்போது விடுதலையாகி வருவான் என்று ஏக்கத்தோடு தினந்தோறும் விடியற்காலையில் எழுந்து விடிவெள்ளியைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள் வடிவு. அடிக்கடி வானத்தையும், மேட்டூரையும் சபித்துக் கொண்டிருந்தாள்.

எல்லாமே ஒரு விடியலுக்காகத்தான்.

எல்லாமே ஒரு விடியலை எதிர்பார்த்துத் தான்.

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

"எஸ்தர் எனக்கு ஒரே பொண்ணு. ரொம்ப நாள் கழிச்சுப் பொறந்த பொண்ணு!" என்றார் மாத்யூ.

காசி மௌனமாய் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

"இப்ப என்ன ஆச்சு பார்த்தே இல்லே?"

"......."

"பந்து மாதிரிதான். அடிச்சாத் திரும்பித் திரும்பி வந்து எங்கேயோ உருண்டு என்னவோ ஆய்ப் போவும். ம் ம்ம்... மனுஷனை மாத்த முடியும்ன்ற நம்பிக்கை இப்ப எனக்குக் குறையுது."

அதற்குக் காசி ஏதோ சொல்ல வேண்டும். ஓர் உத்தரவாதம் அளிக்க வேண்டும். ஒரு வாக்குறுதி தர வேண்டும். அவருடைய ஒரே பெண்ணின் பிரேமைக்கும் வாஞ்சைக்கும் பாத்திரமாய் விட்டதற்குப் பதிலாக ஒரு பிரகடனம் செய்ய வேண்டும்.

"இவ்வளவு சின்ன காமிராவைக் கொண்டு வந்திருக்கியே இதிலே நான் விழுவேனா?"




அவனால் எதைச் செய்யவும் முடியவில்லை. வேண்டாம். எதுவும் வேண்டாம்.

என்ன வந்து என்ன ஆகப்போகிறது? இவ்வளவு நடந்த பின், இவர்கள் குடும்பமே ஒரு கவலையிலும், குழப்பத்திலும் சிக்கி மருண்டு கொண்டு வேறு வழியில்லையே என்று இவர்கள் எஸ்தரை எனக்குக் கொடுக்க வேண்டாம்.

உலகில் எதுவும் வேண்டாம்.

மேம்பாலம் இருக்கிறது. அதிலே கால்கள் நடந்து நடந்து கடக்கின்றன. ஆயிரக் கணக்கான கால்கள். இருபத்திநாலு வருஷங்களாக லட்சக்கணக்கான கால்கள் கடந்து சென்றிருக்கின்றன. அதில் ஏறிக் கடந்து கடந்து இறக்கும் மேற்குமாய் நடந்து நடந்து என் வாழ்க்கை கழிந்து போகட்டும்.

"என்னப்பா கம்முனு இருக்கே?"

"ஒங்க மனசு நோகறாப்பிலே நான் எந்தக் காரியத்தையும் செய்யலே சார்! இதுவரைக்கும் செய்யலே. ஒங்க மனசு நோகும்னு இனிமேலேயும் செய்ய மாட்டேன்."

"காசி" என்று மாத்யூ சார் அவன் தோளைப் பிடித்தார்.

அவன் திரும்பினான். அவன் கண்கள் பளபளத்தன.

"நீ தப்பாப் புரிஞ்சுக்கிட்டே."

வினாக் குறியுடன் அவன் புருவங்கள் நிமிர்ந்தன.

"எனக்குப் பரிபூரண சம்மதம். மனுஷனை மாத்த முடியாதோன்னு சந்தேகம் வந்ததுன்னு சொன்னேன்னு பாத்தியா.... பொண்ணுலே மாத்த முடியும். அது இப்ப எனக்குத் தோணுது..."

அவன் சற்று மலர்ச்சியுற்றான்.

"ஒரே பொண்ணுன்னு சொன்னேனே... அது ஏன் தெரியுதா?"

அவன் அவரையே பார்த்தான்.

"அவளைப் பிரிஞ்சு என்னாலே இருக்க முடியாது. எவ்வளவு நாளைக்கு நான் இருந்துடப் போறேன்... கொஞ்ச நாள்... கொஞ்ச நாள் தான். கர்த்தருடைய சித்தம் உள்ள வரைக்கும், அது வரைலே நீங்க ரெண்டு பேரும் அங்கே வந்து இருக்கணும். என்ன சரியா?"

அவன் முகம் பிரகாசமுற்றது.

"இந்தக் கேஸ் முடிஞ்சு ஜெயாவுக்கு விடுதலை கெடைச்சு அவ இருப்பியா வாழற வரைக்கும் என்னாலே வேற எதையும் யோசிக்க முடியலே சார்."

அவர் யோசனையோடு தலையாட்டினார்.

"கர்த்தருடைய கிருபையாலே வில்லவம் உயிர் பிழைச்சுட்டான். நாங்க வர்றப்ப அவனைப் போய்ப் பார்த்துட்டு வந்தோம். கண்ணைத் தொறந்து என்னைப் பார்த்தான். அடையாளம் தெரிஞ்சுக்கிட்டான். மெதுவா சிரிக்கவும் செஞ்சான்."

"காலேலே. ஆஸ்பத்திரிக்குப் போனப்ப. சொன்னாங்க சார்!"

"ஜெயா பண்ணது ஓர் அதிர்ச்சி வைத்தியம்."

"அந்த அதிர்ச்சி வைத்தியம் பண்ணினவளுக்கே அதிர்ச்சியாப் போயிடுச்சு சார்."

"எப்படி?"

"தன் கையாலத் தன்னைப் பொண்ணு கேக்க வந்தவனை ஒலக்கையால அடிச்சுட்ட

மேன்னு அவனே நொந்துக்கறு... ரொம்ப மனசு நோகறு...''

''அப்படின்னு ஜெயா...''

''ஆமா சார்... ஜெயா...'' என்று பேச்சைத் தொடரப் போனவன் நிறுத்தினுன்.

சப்ஜெயிலிலிருந்து பீட்டரும், எஸ்தரும் இருபுறமும் உடன் தொடர ஜெயா மெதுவாக அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

''ஜெயா வர்ரு சார்...''

மாத்யூ சார் திரும்பிப் பார்த்தார். கைகளைக் கூப்பிக் கொண்டு ஜெயா வந்தான். பதிலுக்கு இவரும் கைகூப்பினுர்.

ஜெயாவின் முகம் வாடியிருந்தது. வெளுத்திருந்தாள். அந்தத் துடிப்பும், துள்ளலும் ஜீவனும் மறைந்து விட்டிருந்தன. ஏதோ அக்கினிப் பரீட்சையில் இறங்கி அதில் வென்று விட்டு, அந்த வெற்றியின் பெருமிதம் இன்றி அதில் தேர்ந்து வந்த மாதிரி அவள் வந்தாள். சோர்வு இல்லே. தெளிவு இருந்தது.

அந்த முகத்தில் எல்லாவற்றையும் சீர் தூக்கிப் பார்த்து அசைக்கமுடியாத ஒரு நிர்ணயமான முடிவுக்கு வந்த மாதிரி இடம் இருந்தது.

''போகலாமா?'' என்று மாத்யூ சார் கேட்டார்.

''போகலாம். ஆஸ்பத்திரிக்குப்போய்ட்டுப் போகலாம்.''

''ஏன்...? எதுக்கு ஆஸ்பத்திரி?'' என்று பீட்டர் கேட்டார்.

**வையவன்**



''அவரைப் பார்க்கனும்?''

எல்லா முகங்களும் வியப்போடு அவள் பக்கம் திரும்பின.

ஜோலார்ப்பேட்டையில் சாலேவி லிருந்து சற்றே தாழ்ந்து இறங்கிய கேசவன் கபே என்று போர்டு எழுதிய வீட்டில், காலேயிலிருந்து சாயங்காலம் வரை நடக்கும் ஹோட்டல் வியாபாரத்தில், ஜங்ஷனின் பழைய இயக்கத்தில் இவ்வளவு சீக்கிரம் மறுபடியும் கலந்து விட முடியும் என்று ஜெயா எதிர்பார்க்கவில்லே.

தான் பழைய ஜெயாவாய் இல்லே என்பதை மட்டும் அவள் உணர்ந்தாள். இப்போது எல்லோரிடமும் அவளாலும் பழைய கலகலப்புடனும், உயிர்த் துடிப்புடனும் பழக முடியவில்லே. காரணம் ஒன்று. எல்லோரும் அவளேக் கண்டு சற்றுப் பயந்தார்கள். அல்லது மதித்தார்கள்.

எந்தவிதமான மாறுபாடுகளும் இல்லாமல் சகஜமாக இருக்க அவள் முயன்முள்.

ஆனல் முகங்களில் அவளேப் பழைய சௌஜன்யத்திலிருந்து, அவர்களுக்குத் தெரிந்த அவர்கள் சண்டை போட்ட, சிரித்துப் பேசிய, உரிமையுடன் கோபித்துக் கொண்ட ஓர் இணக்கத்திலிருந்து எங்கோ விலகிய விலக்கம் தெரிந்தது; ஒதுக்கம் தெரிந்தது.

சட்டென்று தான் தனிமையுற்றதை ஜெயா உணர்ந்தாள்.

தன் அந்தஸ்து, உலக்கையால் ஒரு பெரிய ரௌடியை அடித்து வீழ்த்தியவள் என்று உயர்ந்து போனது அவளுக்குப் பிடிக்கவில்லே. எஸ்தர் அவளிடம் முன்பு போலத்தான் சிரித்துப் பேசினள். இருப்பினும் ஒரு நுட்பமான வித்தியாசம் தெரிந்தது. காசி பழையபடியே தான் பழகினன். இருப்பினும் அவன் கொஞ்சம் மரியாதையோடு ஒதுங்குவது போல் தோன்றிற்று.

தீமைக்கு இரையானவர்கள் மீது பரிதாபம் செலுத்துவதுபோல், கொடுமையைத் தாங்கிக் கொண்டவர்கள் மீது இரக்கம் காட்டுவது போல் கொடுமையை எதிர்த்துப் போராடியவர்களை ஏன் உலகம் நேசிப்பதில்லே?

தனக்கு என்ன பெயர் மிஞ்சும்?

பெண் பார்க்க வந்தவனே உலக்கையால் அடித்தவள் என்ற பெயரா?

ஒருவேளே காலப் போக்கில் எல்லாம் மறைந்துவிடுமா? அவள் தந்தை மறைந்ததும், தாய் மறைந்ததும், எப்படி லேசலேசாக இவளே மறந்து கொண்டு வருகிற விஷயம் ஆகிவிட்டதோ அவ்விதம் அவளுக்கு இருந்த நல்ல பெயரும், பின்னல் அவளுக்கு வந்த கெட்ட பெயரும் மறந்து போகுமா?

மறந்து விடும், மறைந்து விடும் என்றால் எப்போது? அது சீக்கிரமே நடக்கக்கூடாதா? தன்னுடையவர்கள் என்று தான் நினைத்தவர்கள் எல்லாம் தங்கள் மனத்தின் கதவைச் சற்றுச் சாத்திக் கொண்டு, அந்தக் கதவின் பின்னல் நின்று தயங்கித் தயங்கிப் பேசும் கொடுமை சீக்கிரமே நீங்கிவிடாதா?

அவள் படுக்கையில் விழித்துக்கொண்டே புரண்டாள். கலகலவென்று வளையல்கள் அதிர்ந்தன. ஜலுங்கென்று கால் மெட்டி ஒலித்தது.

மெட்டியைச் சிறையிலிருந்து வெளிவந்து ஜோலார்ப்பேட்டையில் இறங்கியதுமே எஸ்தரேதான் காலில் மாட்டி விட்டாள். அது வரை அவளிடம்தான் இருந்தன.

தனக்கு மெட்டியணிகின்ற அந்தஸ்து போய் விட்டது. காலேயில் அதைக் கழற்றி எடுத்து வைத்து விட வேண்டும். தான் பழைய ஜெயா அல்ல. தன் மெட்டியில் ஓசை முன் மாதிரி கேட்பவர் மனசில் களிப்பையோ திருப்தியையோ பரப்பாது. பயப்பட வைக்கும்.

அவள் மீண்டும் புரண்டாள். மறுபடியும் ஜலுங்கென்று மெட்டி ஓசையிட்டது.

''சீ... எனக்கு இன்னு வந்துடுச்சி.... அவுரு தான் பொளேச்சிக்கிளுரே ஏன்இப்படி மனசு கெடந்து புலம்புது!'' என்று தன் உள்ளம் தன்னிரக்கத்தின் பாதாளங்களில் வீழ்வதைத் தவிர்த்தாள். எழுந்து உட்கார்ந்து யோசனையில் மூழ்கினள்.

''ஜெயா.....''

வெளியே இருந்து குரல் கேட்டது.

''யாரு.''

''ஹரி.''

''இன்னு ஹரி.''

''தூக்கம் வர்லியா கொளந்தே?''

''வர்லே.''

''கதவைத் தொறந்து வெளியே வா... வெளியே காத்து நல்லா வருது. கொஞ்ச நேரம் பேசிக்கினு இரு. தூக்கம் வரும்.''

ஹரி ஒருவன் தான் பழைய மாதிரியே இருக்கிறன். அதே குழந்தைத்தனத்துடன் ஒன்றுமே நடக்காதது போல், அவள் பழைய ஜெயா போல் பழகிக் கொண்டிருக்கிறன். ஆனல் அதற்கு ஈடு கொடுத்து அவளால் நடந்து கொள்ள முடியவில்லே. இவன் எல்லாம் தெரிந்தும் அதை மறைத்துக் கொண்டு பேசுவது இதமாக இருந்தது. அதற்காகத் தானும் அப்படியே பேசிப் பழகினல் அது வேஷம் மாதிரி உறுத்திற்று!

(தொடரும்)

---

''25 பைசாவுக்கு நெய் வராது. வேணும்னு 25 பைசா கொடுத்து நெய் டப்பாவை வாசனை பார்த்துட்டுப் போங்க!''





# அம்மா இருக்கா

சினிமாத் துறையின் நெளிவு சுளிவுகள் மேஜருக்குத் தெரிந்து போய் விட்டது. அழுத்தமான கதையையும், அபாரமான நடிப்பையும் மட்டுமே நம்பி முதல் போட முடியாது என்கிற மாதிரி இந்தப் படத்தில் நிறைய ஜிம்மிக்ஷங்களை நயமாகப் புகுத்திவிட்டார். ஒரு சாதாரண சிறு கதைக்கான முடிச்சை வைத்துக் கொண்டு சம்பவங்களைப் பின்னிப் பின்னிப் பலூன் ஊதியிருக்கிறார்கள்.

உடம்பு மட்டும் வளர்ந்து விட்ட 'அசத்து' ராமுவாய் சிவகுமார் உருவாகி இருக்கிறார். அம்மாவும் இல்லாமல் போனவுடன் சுலபமாய் அநாதை ஆகிறார். கூப்பிட்ட குரலுக்கெல்லாம் எடுபிடியாய் வருகிறார். குருக்கள் பெண்ணுடன் வெட்கம் மாறாமல் கற்பனைக் குடித்தனம் பண்ணுகிறார். ஒரு பெண்ணின் ரகசியத்தைக் காப்பாற்றக் கொலைக் குற்றத்திற்கும் அடிஉதைகளுக்கும் மசியாத மௌனம் சாதிக்கிறார்.

அத்தனை கட்டங்களிலும் சிவகுமாரின் முகம் அயராமல் அபிநயங்கள் காட்டுகிறது. கதை இன்னும் சற்று இயல்பாய் அமைந்திருந்தால் எட்டிப் பிடிக்க முடியாத உயரத்திற்குப் போயிருப்பார்.

குருக்களாய் மேஜர் சுந்தர்ராஜன். கருணையும், அவசிய நேரங்களில் ஆத்திரமுமாய் கண்களே பேசுகின்றன.

மிரட்டல் வேட்டைக்காரனாய் ஜெய்சங்கர். பொறி பறக்கிற சண்டையும் 'ஹஹா' சிரிப்பும் இவர் ஸ்பெஷாலிட்டி.

இரட்டைப்பெண்டாட்டி நாடகக் காரனாய் தேங்காய். திரையில் தோன்றுகிற நேரமெல்லாம் தியேட்டரையே குலுங்க வைக்கிற பிரம்மாத எக்ஸ்பிரஷன்கள். மற்றபடி வி. கே. ராமசாமி வழக்கமான இரைச்சல்களுடனும், சுலக்ஷணா முதலில் சின்னக் குறும்புகளும், பின்னால் கண்ணீருடனும், மனோரமா நையாண்டிப் பேச்சுடனும் படத்தை நகர்த்துகிறார்கள்.



ஓடுகிற ரயிலை பஸ்ஸாக மாற்றுங்கள். இராம. நாராயணன் டைரக்ஷன் என்பதற்காகக் கொஞ்சம் இரட்டை அர்த்த வசனங்களைச் சேருங்கள். இரண்டு நண்பர்கள் என்பதை நான்கு நண்பர்களாக்குங்கள். கரி பூசின முகங்களுடன் குதிரை மேல் ஒரு பத்துப் பதினைந்து பேரை 'க்கிங்', 'க்கிங்' என்கிற கனைப்புக்களோடு ஓட விடுங்கள்.

வளர்த்துவானேன்: ஹிந்தி ஷோலே! தமிழ் திருட்டு ராஜாக்கள்! அம்ஜத்கான் மாதிரி ராஜசுதிர் வில்லனாய் அறிமுகம். அவர் தெலுங்கு வாடை வீச வசனம் (டப்பிங்?) பேசும் அழகும், முகபாவங்களைக் காட்டும் விதமும். அசோகனின் நகல்! ஃபார் எ ஃப்யூ டா

குருக்கள் பெண்ணுய் வரும் கே. விஜயாவும் நன்ருக்வே பண்ணியிருக்கிருர். வில்ல ஞய் விஞேத். கரகரப்பில் லாத குரல் பெரிய பல வீனம் என்ருலும் கண்விழி உருட்டல்களும், சண்டைப் புரட்டல்களும் ஓ.கே.சென் சாரில் எவ்வளவு அனுமதிப் பார்களோ அவ்வளவும் காட்டுகிற ரிகார்டு ராணி— ஜெலுக்கு. அனுராதா வகை யில் ஒரு மலிவுப் பதிப்பு. காட்சிகளின் நீளத்தைக் கச் சிதமாய்க் குறைத்திருக்க லாம். அலுப்புத் தட் டாமல் இருந்திருக்கும்.

மேளம்: சங்கர் கணேஷ். 'ராஜா எங்கே' கேட்கும் படி இருக்கிறது என்பதே பெரிய விஷயம்.

மாலேயாய்க் கோத் திருக்க வேண்டியது. உதிரிப் பூக்களாய்ச் சிதற விட்டிருக் கிருர்கள்.

படத்தில் அம்மா இருக்கா, சரி.

மேஜர்?



# கடம்ப ராஜாக்கள்

வர்ஸ் மோர் ட்யூன். இளைய ராஜாவின் இசை, எம்.எஸ். வி.யின்இசை — இந்தக்கதம் பத்தைப் படம் முழுக்க வாரி இறைத்திருப்பது வேறு யார் — சங்கர் — கணேஷ்தான்.

ஆனுலும் 'ஒத்தப் பூ பூத்த மரம்!' — அந்தக் கதம்பப் பாலைவனத்தில் ஒரு பூஞ்சோலேதான்.

பஸ்ஸுக்கு டயர் பக்கத் தில் குதிரைகள் ஓடுவது— ஓடும் குதிரையிலிருந்து ஓடும் பஸ்ஸுக்குத் தாவு வது — சும்மா சொல்லக் கூடாது. என். கே. விஸ்வ நாதனின் காமிரா நிறை யவே சிரமப்பட்டிருக்கிறது.

குதிரைமேல் சண்டை, பஸ் மேல் சண்டை, நின்று கொண்டு சண்டை, கத்தி யுடன் சண்டை, துப்பாக்கி யுடன் சண்டை—இத்தனை சண்டைகள் இருந்தும் அலுக்கவேயில்லே. சூப்பர் சுப்பராயன் வாழ்க!

ரவீந்தர், ராதாரவி நடித்திருக்கிருர்கள். சுரேஷ், கராத்தே மணி ரோகிணி. ஆகியோரும் நடி கர் லிஸ்டில் இடம் பெற் றிருக்கிருர்கள்.

இடைவேளேக்குப் பின் அனுராதாவின் ஆட்டம்.

ஏகப்பட்ட சென்டிமென் டல் டச்.

டைரக்டர் நிறையவே உழைத்திருக்கிருர்.

பஸ்ஸைக் கொள்ளே யடிக்க ஆரம்பித்ததிலிருந்து கடைசியில் வில்லன் சாகும் வரை விறுவிறுவென்று கதை யைக் கொண்டு சென் றிருக்கும் இராம. நாரா யணன் இந்த மாதிரி நகல் களை இனி நிறையவே கொடுப்பார் என்று எதிர் பார்க்கலாம்.

—ஜெயமன்மதன்







# நாட்டுச் சிறப்பு
# நமட்டுச் சிரிப்பு

மதன்.












# சோதனை மேல் சோதனை



**வீடு** கட்டுகிற போது செங்கல் சுண்ணாம்புக் கலவை எல்லாம் டக்டக் என்று கைமாறிக் கைமாறி வருவதைப் பார்த்திருப்போம். கிட்டத்தட்ட அது போலத் தான். சக்கரம் பதிக்கப்பட்ட பலகையில், பிறக்கப் போகிற டீ. வி. யின் உதிரி உறுப்புக்கள் விறுவிறுவென்று வெவ்வேறு நிலைக்குப் போய்க் கொண்டிருக்கின்றன.

உதிரி உறுப்புக்கள் அவ்வளவும் நரகக் கட்டுப்பாட்டுச் சோதனைகளைத் தாக்குப் பிடித்தாக வேண்டும். டீ. வி. யின் உள்ளே விதம் விதமாய்க் கொலுவிருக்கிற பாகங்கள் அவ்வளவும் தக்கவர்களால் முதலிலேயே சரிபார்க்கப்படுகின்றன. **டீ. வி. தயாரிப்பில் முதல் கட்டம் இது.**

பிக்சர் ட்யூப், ஸ்பீக்கர், யோக், பிரிண்டட் ஸர்க்யூட் போர்டு காபினெட் என்று வரிசையாகச் சேர்ந்து வருகின்றன. ஆரம்ப நாட்களில் படக்குழாய் ஓர் இறக்குமதிப் பொருள். இப்போது, வண்ணமானாலும், கறுப்பு வெள்ளையானாலும் 'பெல் நிறுவனமே' தயாரித்துத் தந்து விடுகிறது.

யோக் என்பது முழுப்படமும் தெரிய உதவுகிற கருவி. ஸைட் பேனல் பகுதியில் வீடியோ, ஆண்டனா இவற்றுக்கான இணைப்புக்கள் உண்டு.

பிரிண்டட் ஸர்க்யூட் போர்டு என்பது பார்த்தால் குண்டூசி ஓட்டைகளாக நிரம்பியிருக்கிற அட்டை மாதிரிதான் இருக்கும். உதிரி உறுப்புக்களை இந்த அட்டையில் முறைப்படி பதிப்பது தான் மிக முக்கியமான வேலை. மிகவும் நுட்பமான சிறு உறுப்புக்களை முதல் கட்டமாகப் பதித்துப் பற்ற வைத்து விடுவார்கள். அப்புறம் இன்னும் கொஞ்சம் பெரிய உறுப்புக்களை மேலே பதித்து இணைப்பேற்படுத்துவார்கள். அதன் பிறகு மூன்றாவது கட்டமாய் இன்னும் பெரிய துணை உறுப்புக்கள் இந்த அட்டையில் பொருத்தப்படுகின்றன.

அடுத்த வேலை, டீ. வி. ஸெட்டின் உட்புறத்தில் உறுப்புக்களை ஒயர்களுடன் இணைத்து விடுவது. அப்புறம், உலோகச் சட்டம் ஒன்றில் இந்த மின்னிணைப்பு அட்டையை உரிய முறையில் பொருத்தியாக வேண்டும். கபாஸிட்டர், ட்ரான்ஸ்பார்மர், ரெஸிஸ்டர் என்று என்னென்னவோ பெயர்கள். நேரில் பார்க்கிறவர்களுக்குத் தான் என்ன ஏது என்று ஓரளவாவது புரியும்.

பொருத்தப்பட்ட பாகங்கள் சரியாக இணைக்கப்பட்டுள்ளனவா என்று கவனிக்க வேண்டும். மின் ஓட்டத்தைத் தாக்குப் பிடிக்கின்றனவா, எங்காவது ஷார்ட் சர்க்யூட் ஏற்படுகிறதா, சரியான அளவு மின் சாரம் வருகிறதா என்பதையெல்லாம் சோதனை செய்கிறார்கள். பெட்டிக்குள் பொருத்துவதற்கு முன்னால் தான் இவற்றைக் கவனிக்க முடியும். அப்புறம் ஆராய்ந்து பயனில்லையே!

அடுத்த கட்டம் காபினெட் என்கிற பெட்டியை ஒழுங்கு பண்ணுவது. படக்குழாய், ஸ்பீக்கர், டிரான்ஸ்பார்மர் எல்லாவற்றையும் உரிய இடங்களில் பொருத்தி விடுகிறார்கள். ட்யூனர், வீடியோ போர்டு ஆகியவற்றையும் இணைத்து விடுவார்கள்.

ஏற்கெனவே சோதனைக்கு உட்பட்டுத் தேறிய உலோகத் தகட்டு இணைப்புக்களைப் பெட்டிக்குள் பொருத்தி வைப்பதுதான் அடுத்த கட்டம். 'காபினெட்டில் உள்ள பிக்சர் ட்யூப், ஸ்பீக்கர் போன்ற எல்லா உறுப்புக்களோடும், பிரிண்டட் ஸர்க்யூட் போர்டு அஸெம்பிளி ஒயர்களால் இணைக்கப்படுகிறது.

எல்லா உறுப்புக்களின் வோல்ட்டேஜையும் சரி பார்க்க வேண்டும். ஒளிபரப்பு இல்லாத நேரமாக இருந்தாலும் கூட ஸ்வீப் ஜெனரேட்டர் மூலம் திரையில் வெவ்வேறு ஸிக்னல்கள் சரியாக வருகிறதா என்று கவனிப்பார்கள். திரையில் படுக்கைக் கோடுகளாய் வெளிச்சம் விழுவது 'ராஸ்டர்' என்கிறார்கள். இம்மாதிரி ராஸ்டர் கோடுகள் 625 சேர்ந்தால் தான் படம் உருவாகும். இந்த ராஸ்டரில் கலரோ கறுப்பு வெள்ளையோ சிக்னல் தரும்போது தான் படம் விழுகிறது... பிக்சர் ட்யூப் செய்கிற வேலை இது.

டீ. வி. ஸெட்டின் பின்புறம் நின்று கொண்டு டெக்னீஷியன்கள் கவனித்துக் கொண்டே டீ. வி. திரையில் படம் சரியாக வருகிறதா என்பதையும் கவனிக்க வேண்டுமே. இதற்காக, சுவரில் சதுரம் சதுரமாய்க் கண்ணாடிகள் பதித்திருக்கிறார்கள். படத்தின் பிம்பத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்கிறார்கள்.





அப்புறம் தரப் பரிசோதனை வருகிறது. இது முக்கியமான வேலை. 'ஸோக்கிங்' என்று சொல்கிறார்கள். தயாரான டீ. வி. ஸெட்டை எட்டு மணி முதல் பத்து மணி வரை இயங்க வைப்பார்கள். வழக்கமான மின் சக்தியை விடப் பத்து சதவீதம் அதிகமான வோல்டேஜில் இவை இயங்கும். கோளாறு ஏதும் ஏற்படுவதானால் இந்தக் காலத்துக்குள் அது தெரிந்து விடுமாம். தேவையானால் மாற்ற வேண்டிய உதிரி உறுப்புக்களை மாற்றி விடுகிறார்கள்.

குழாய் மூலம் ஒரு திரவத்தைப் பீச்சியடித்து எல்லாப் பாகங்களையும் நன்றாய் அலசித் தூசு தும்புஇல்லாமல் சுத்தம் பண்ணுவது கடைசி வேலைதான். அப்புறம் பின்புற உறையைப் பொருத்துதல். சானல், ஸ்விட்ச், எல்லாவற்றுக்கும் 'நாப்' என்கிற சிறுசிறு கைப்பிடிகளைப் பொருத்த வேண்டும். இப்போது டீ.வி. ரெடி என்று தோன்றுகிறது.

ஆனாலும் விடுவதில்லை. 'ஆஸிலாஸ்கோப்' என்னும் கருவியை வைத்துக் கொண்டு மறுபடியும் ஒரு சோதனை. படம், ஒலி தேவையான அளவு வருகிறதா என்பதைக் கவனிக்கிறார்கள். விற்பனை மையத்துக்குப் போகிற வரை டீ. வி. ஸெட்டுக்குச் சோதனை மேல் சோதனைதான். அட்டைப் பெட்டியில் டீ. வி.யை நகர, அசைய இடம் தராமல் பஃப்பர்களைத் திணித்துப் பாக் செய்த பிறகும் கூட விடுவதில்லை.

'எஸ். க்யூ. ஸி.' என்று ஒரு சோதனை. (STATISTICAL QUALITY CONTROL). நூறு பாக்கிங்குகளில் ஏதாவது பத்தை எடுத்துப் பிரிப்பார்கள். சோதனை பண்ணுவார்கள். அதில் நான்கைந்து கோளாறுள்ளவையாக இருந்தாலும் போதும். நூறு ஸெட்களையுமே விற்பனைக்கு அனுப்பாமல் ஒதுக்கி விடுவார்கள்.

விற்பனை மையத்திலும் கூட டீ. வி. ஸெட்டுகள் காலை ஒன்பது மணி முதல் மாலை எட்டு ஒன்பது மணி வரை கூட இயங்கிக் கொண்டிருக்கும். விளம்பரம் மாத்திரம் அல்ல. சரிபார்ப்பதும் தான் இதன் காரணம்.

இவ்வளவு சோதனைகளையும் தாக்குப் பிடித்து உங்கள் வீடுகளுக்கு வருகிற டீ. வி. ஸெட்டுகள், அப்புறமும் தகராறு பண்ணுமா என்ன? வெகு அபூர்வமாக அப்படி நேருவதும் உண்டு. அதற்கென்ன செய்ய முடியும்?

-தமயந்தி

தகவல்: ஹைபீம் எலக்ட்ரானிக்ஸ், அடையாறு

ஹேடாரி எலக்ட்ரானிக்ஸ், நந்தனம்

---

## இவர்களைப் பற்றி



சென்னைத் தொலைக்காட்சியில் பகுதி நேர அறிவிப்பாளராகப் பலர் இருந்தாலும் இப்பணியில் நிரந்தரமாக உள்ளவர் இருவர். ஒருவர் லோகேஸ்வரி. மற்றவர் ஹேமலதா. எம். ஏ. பட்டம் பெற்றதும் 1979—ல் தொலைக்காட்சி நிலையத்தில் அறிவிப்பாளராகச் சேர்ந்த லோகேஸ்வரி அதற்கடுத்த ஆண்டு இதே நிலையத்தில் காமிராமேனாகப் பணிபுரியும் செல்வகுமார் என்பவரைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார். இப்போது இரண்டரை வயது மகன் பிரதீப்பைத் தாயாரிடம் விட்டுவிட்டு வேலைக்கு வருகிறார். ஜர்னலிசத்தில் ஆர்வம் கொண்ட இவர் இதில் டிப்ளமா பரீட்சை எழுதியிருக்கிறார். தொலைக்காட்சியில் இவர் விரும்பும் நிகழ்ச்சி ஏக்முலாகாத் என்ற பகுதியில் பிரமுகர்களைச் சந்திப்பதுதான்.

வெளியே சென்றால் உங்களைப் பலர் அடையாளம் கண்டு கொள்கிறார்களா என்று கேட்டதற்கு, 'பலர் என்னை லோகேஸ்வரியின் தங்கையா? என்றுதான் கேட்கிறார்கள்' என்கிறார்.



மற்றொரு அறிவிப்பாளரான திருமதி ஹேமலதா சென்ற ஐந்து ஆண்டுகளாக இங்கு பணியாற்றுகிறார். எஸ். ஐ. ஈ. டீ. கல்லூரியில் பட்டப் படிப்பு முடித்ததும் மங்கையர் மலர் பத்திரிகையில் இரண்டு ஆண்டுகள் துணை ஆசிரியராகப் பணியாற்றிய பிறகு யூனிட் டிரஸ்டு நிறுவனத்தில் சில மாதங்கள் தற்காலிகமாகச் சேர்ந்தார். அந்த வேலை நிரந்தரமான அதே நேரத்தில் தொலைக்காட்சியின் இந்த வேலையும் கிடைத்தது. ஒளார்க் வேலையை விட இவர் விரும்பி ஏற்றது இப்போது இருக்கும் வேலைதான்.

''வெளியே சென்றால் பலர் என்னை அடையாளம் தெரிந்து கொண்டு அருகில் இருப்பவர்களுடன் பேசிக் கொள்வார்கள். சில சமயங்களில் இதனால் கொஞ்சம் கஷ்டமாக இருந்தாலும் பல இடங்களில் என்னைத் தெரிந்திருப்பதால் எனக்குச் சலுகை கிடைக்கிறது'' என்கிறார். இவருடைய கணவர் வெங்கட்ராமன் பஞ்சாப் நேஷனல் வங்கியில் பணி புரிகிறார்.

—கலா மூர்த்தி

# பிடி இறுகட்டும், பணச் செலவு குறையட்டும்...

**டயனோரா T481.**
**அனைத்து சாதனைகளையும் முறியடித்த அதிக விற்பனையுள்ள எகானமி செட்.**



ஆமாம்: இப்போது உங்கள் இல்லத்தில் தொலைக்காட்சிகளுக்காகும் செலவைக் குறைத்துக்கொள்ளலாம். அதற்கு உதவுகிறது டயனோரா டிவி. எப்படியெனில், டயனோரா T 481-ல் மட்டுமே மிகச் சிறந்த செயல்திறனும் சிக்கன விலையும் இணைந் திருக்கின்றன.

- ☐ 51 செ.மீ. (20") ஸ்க்ரீன் தெளிவாகவும் துல்லியமாகவும் படத்தைக் காட்டுகிறது.
- ☐ ஹை-ஃபிடிலிடி சவுண்ட் உயர்ந்தபட்ச 5 வாட் அவுட்-புட் பவர் அளிக்கிறது.
- ☐ டேப் ரெகார்டர்/ரெகார்ட் பிளேயர் இணைப்பு வசதி கொண்டது.
- ☐ மல்டி-சானல் வசதியும், எளிதில் இயக்கக்கூடிய குமிழ்களும் உள்ளன.
- ☐ மிகக் குறைந்த அளவு மின் செலவு.
- ☐ நேர்த்தியான நாகரீகத் தோற்றம்.
- ☐ விற்பனைக்குப்பின் சிறப்பான சேவை.

# டயனோரா® T481

HTM DYN-1282

# மிகவும் குறைவான விலையில் கிடைக்கிறது



சாலிடேர்
மஸ்டாங்
வெஸ்டன்
டெலிவிஷன்கள்



கோத்ரேஜ்
கெல்வினேட்டர்
ஆல்வின்
ஜெம்
ரெப்ரிஜிரேட்டர்கள்



உஷா
ஓரியண்ட்
கேதான்
விசிறிகள்



ஸுமீத்
மீனு
பிரீத்
மிக்ஸர்கள்

நிக்கிடாவுா
கிச்சனேட்



பிரிஸ்டிஜ்
பிரஷர்
குக்கர்கள்



வெலின்
வெட் கிரைண்டர்கள்





யூனிவாஷ்
எலக்ட்ரோ
வாஷிங் மிஷின்கள்

# எஸ். ஸி. ஷா

அண்ணாசாலை, தேனாம்பேட்டை, நுங்கம்பாக்கம், வேலூர் (வ.ஆ.)

போன்: 88671 போன்: 450268 போன்: 423731 போன்: 21590

# தெரிந்ததும் தெரியாததும்



### எவ்வளவு அருகில்?

டி.வி. திரையிலிருந்து எட்டு முதல் பத்து அடி தூரத்துக்குள் இருந்து பார்ப்பது தான் நல்லது. அதிக பட்சம் பன்னிரண்டு அடி.

டி.வி. திரையின் உட்புறத்தில் பாஸ்பர் (PHOSPHOR) கலவை பூசப்பட்டிருக்கும். ஒளிக்குழாய் வழியே வருகிற ஒளிக்கற்றை இந்தப் பூச்சின்மீது விழுகிறது. படம் தெரியப் பண்ணுகிற கதிர்களுடன் அலட்ரா வயலட் கதிர்களும் சேர்ந்தே வருவதால் கண்ணில் கெடுதல் ஏற்படக் கூடும். ஆனால் காற்றில் உள்ள நைட்ரஜன் புற ஊதாக் கதிர்களை (அல்ட்ரா வயலட்) உட்கவர்ந்து விடுகிறது. எட்டு அடி இடைவெளி தாண்டி வரும் போது புற ஊதாக் கதிர் செயலற்றுப் போகும்.

### ஸ்கிரீன்கள் அவசியமா?

ஆரம்பம் முதல் ஸ்கிரீன்கள் இல்லாமலே டி.வி. பார்த்துப் பழகி விட்டவர்களுக்குத் தேவையில்லை. சாதாரணமாகக் கூலிங் கிளாஸ் போடுகிற மாதிரி தான் இது...

ஆயினும் டி.வி. படங்களில் வித்தியாசமான ஒளி வீச்சுக்கள் ஏற்படும் போது, ஓரளவு கட்டுப்படுத்த இது பயன்படும்.

### ஆண்டன்னாவா குருவிக் கூடா?

பல மாடிக் கட்டிடங்களில் குருவிக் கூடு கட்டுகிற மாதிரி பத்துப் பதினைந்து ஆண்டன்னாக்களைப் பார்க்கிறோம். நூற்றுக்கணக்கான அறைகள் உள்ள ஹோட்டல்களில் இப்படி நூற்றுக் கணக்கில் ஆண்டன்னா வைப்பதில்லை. மாஸ் ஆண்டன்னா ஒன்றை நிறுவி விட்டு, அதிலிருந்து ஆர். எஃப். ஆம்பிளிபையர் மூலம் ஒழுங்கு செய்து விடுவார்கள். இதன் மூலம் அந்தக் கட்டிடத்திலுள்ள எல்லா டி.வி. செட்களுக்கும் இணைப்புக் கிடைத்து விடும்.

இந்த மாதிரியான ஆண்டன்னாக்களை நிறுவுவதற்காகத் தனியாக அமைப்புக்கள் உண்டு. செலவு கம்மி என்று சொல்லிவிட முடியாவிட்டாலும் வசதி அதிகம். ஐம்பது டி.வி. செட்களுக்கு இணைப்பேற்படுத்தப் பத்தாயிரம் ரூபாய் செலவாகலாம்.

### கலர் டி.வி. விலை கூடுதல் ஏன்?

விலைமட்டுமில்லை. மின்சாரமும் அதிகமாகவேசெலவாகும். கறுப்பு, வெள்ளை டி.விக்கு 40 வாட்ஸ் ஆகும். கலர் என்றால் 65-70 ஆகும்.

பிக்சர் ட்யூப் என்பது கறுப்பு வெள்ளையானால் ஒன்றுதான் இருக்கும். கலர் டி.வி. என்றால் மூன்று விதமான எலக்ட்ரான் கற்றைகளைப் பாய்ச்சுகிற பிக்சர் ட்யூப் இருக்கும்.

அதே போல் படம் விழுகிற திரையில் PHOSPHOR பூச்சு கறுப்பு வெள்ளை டி.விக்கு ஒன்றுதான். கலர் டி.வி. யானால் மூன்றுவிதமான பூச்சுக்கள் உண்டு.

### எத்தனை அலைவரிசைகள்?

மொத்தம் 83 சானல்கள் வரைதான் உண்டு.

சானல் ஒன்று என்பது பொது மக்களுக்குக் கிடைக்காது. போலீஸ் துறைக்கு மட்டுமே பயன்படக்கூடியது அது.

முதல் பாண்ட் சானல் நான்குதான் நம்முடையது. பாண்ட் 2 பண்பலை ஒளி பரப்புக்குப் போய் விடும். சானல் 12 வரை நமக்குப் பயன்படலாம்.

### ஸ்டெபிலைசர்கள் பற்றி...?

சில டி.வி. பெட்டிகளில் உட்புறம் இணைந்தே இருக்கும். (Inbuilt) ஏதாவது பழுது ஏற்பட்டால் சர்வீஸிங் ஆள் வந்துதான் ஆக வேண்டும். தனியே ஸ்டெபிலைசர் இருந்தால்




இந்த மூன்று நிறங்கள்தான் ஒன்றுடன் ஒன்று கலந்து பல வண்ணங்களைத் தோற்றுவிக்கின்றன.

இந்தத் தொல்லை இல்லை.

ஆனால் ஒரு நல்ல செய்தி! கறுப்பு வெள்ளை டி.வி. பெட்டிகளில் பழுது ஏற்படுவது எல்லாம் பழைய செட்களில் தான். இப்போது வருகிற தயாரிப்புகளில் கோளாறுகள் மிகவும் அபூர்வம்.

## டி.வி. செட்டைத்திறந்து பார்க்கலாமா?

விவரம் தெரியாதவர்களானால் கூடாது என்பது தான் பதில். மின் இணைப்பை எடுத்துவிட்டாலும் கூட வலுவான 'ஷாக்' ஏற்படுத்துகிற கண்டென்ஸர் ஒன்று படக் குழாய்ப்பகுதியில் இருக்கிறது. Extra High Tension (EHT)என்னும் உயர் அழுத்த டிரான்ஸ்பார்மரில் இது தொடர்பு கொண்டிருக்கும். நிரந்தரமாக இதில் மின்னோட்டம் தேங்கியிருக்கும். கறுப்பு வெள்ளைப் பெட்டியில் 15,000 முதல் 18000 வோல்ட்... கலரில்25,000 வோல்ட் சக்தி உண்டு.

## புகை வருமா?

கண்டென்ஸர்களோ,வேறு எந்தப் பகுதியிலோ பழுதாகியிருந்தால் புகைவரக் கூடும். உடனே செட்டை அணைத்து விட வேண்டும். பழுது பார்த்துச் சரி செய்யாமல் மறுபடி டி.வி.யைப் போட வேண்டாம். அதனால், மற்ற நல்ல பாகங்களும் கெட்டுப் போய்விடலாம்.

## நல்ல டி.வி. எப்படி வாங்குவது?

வாங்கப் போகிற டி.வி. யை நான்கு அல்லது ஐந்து மணி நேரம் கடையிலேயே வேலை செய்ய விட்டுப் பார்க்கலாம். கோளாறு ஏதும் ஏற்படுவதானால் இந்தக் காலத்திலேயே தெரிந்து விடும்.

ஒவ்வொரு டி.வி. தயாரிப்புக்கும் சர்வீஸ் எஞ்சினியர்கள் என்பவர்கள் உண்டு. கோளாறு ஏற்பட்டால் இவர்கள் தான் வந்து பார்க்க வேண்டியிருக்கும். ஆகவே போதுமான அளவு சர்வீஸ் எஞ்சினியர்கள் கிடைப்பார்களா என்று விற்பனையாளரிடமேகேட்டுக் கொண்டு செட்டை வாங்குவது நல்லது.



## ஸர்வீஸிங் கட்டணங்கள்:

நம்பகமான இடம் என்று தெரிந்தால் ஆண்டுக்கட்டணமாக 300 முதல் 450 வரை செலுத்தி விட்டு, அவர்கள் பொறுப்பில்விட்டு விடலாம். படக்குழாயைத் தவிர மற்ற பாகங்கள்நூறு ரூபாய்க்கும் குறைவாகத் தான் ஆகும். அதிக சக்தியுடைய எலக்ட்ராலிடிக் கண்டென்ஸர்கள் கூட இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் இல்லை. சிறிய கண்டென்ஸர்கள், ரெஸிஸ்டர்கள் எல்லாம் இரண்டு ரூபாய்க்குள்தான் ஆகும்.

உதிரி பாகங்களின் விலையை அப்படியேசொல்லி 25, 30 என்று மெக்கானிக் கேட்டால் கொடுத்துவிடலாம். கூலியைக் குறைக்க முயலும் போது தான் அவர்களும் பாகங்களின் விலையைக் கூட்டிச் சொல்லி ஈடுகட்ட முயல்வார்கள்.

படக்குழாய் அறுநூறு ரூபாய் வரை ஆகும். சென்னையில் உள்ளவர்கள் BEL நிறுவன அலுவலகத்திலேயே போய்ப் பதிவு செய்து கொண்டு நேரடியாகவே வாங்கி வரலாம்.

## சாதாரணக் கோளாறுகளைச் சரிசெய்ய முடியுமா?

பெரும்பாலான கோளாறுகளுக்கு பொறுப்பு டி. வி. ஆன்டென்னாதான். ஆன்டென்னா தகராறுகளை நாமே சரி செய்து விடலாம். 'Dipole' என்கிற இணைப்புப் பகுதி இரண்டும் ஒன்றையொன்று தொடாமல் விலகி இருக்கவேண்டும்.

இணைப்புப் பகுதியில் துரு ஏறியிருந்தாலும் ஒளி அலையின் ஆற்றல் கிடைக்காமல் போகக் கூடும். இந்த இரண்டு கோளாறுகளையும் நாமே சரி செய்துவிடலாம்.

முதலில் ஆன்டென்னா சரியாக இருக்கிறதா என்பதைப் பார்த்த பின்னர் தான் மற்றக் கோளாறுகளைக் கவனிக்க வேண்டும்.

ஃப்யூஸ்கள் போயிருக்கலாம். அல்லது மின்சாரம் வருகிற கம்பி ஒயரின் உட்புறம் துண்டாகியிருக்கலாம். கைவசம் இரண்டு ஃப்யூஸ்கள் வாங்கிவைத்துக் கொண்டால் விவரம் தெரிந்த எவரேனும் போட்டுச் சரிசெய்யலாம். ஒரு ஃப்யூஸின் விலை ஒருரூபாய் தான்.

## இந்தத் துறையில் வேலை வாய்ப்பும் பற்றி?

இப்போது எஸ். எஸ். எல். ஸி. படித்தவர்கள் நிறையப் பேர் டெக்னீஷியன்களாகப் பயிற்சி பெறுகிறார்கள். பி. எஸ்ஸி. கெமிஸ்ட்ரி அல்லது பிஸிக்ஸ் படித்து விட்டு மூன்று மாதம் டி. வி. மெக்கானிஸம் படித்து விட்டால் கண்டிப்பாய் வேலை கிடைத்து விடுகிறது. அவரவர்கள் கற்றுக் கொள்கிற ஆர்வம் திறமை இவற்றின் அடிப்படையில் கம்பெனிகள் வேலைக்கு எடுத்துக் கொள்கின்றன.

## எதிர்காலம்...

1985 இறுதிக்குள் இந்தியாவில் 137 ஒளி பரப்பு நிலையங்கள் அமையப் போகின்றன. மொத்த ஜனத்தொகையில் 90 சதவீதம் பேருக்குப் பயன் கிடைக்கப் போகிறது. இது எலக்ட்ரானிக் யுகம். ஆண்டுக்கு ஒரு மில்லியன் செட்டுகள் என்று இருந்த டி.வி. உற்பத்திஇப்போது இரண்டு மில்லியன் அளவுக்கு வந்து விட்டது. டி.வி. லைசென்ஸ் ஐம்பது ரூபாயாக உள்ளதைப் பாதியாகக் குறைக்கலாம்.

தகவல் உதவி:

தமிழிலும் டி. வி.வகுப்புக்களை நடத்துகிற லேட் நிறவுஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி. சென்னை–18.

—வெஸ்பால்.

# நீங்கள் எதிர்பார்த்தது இதோ வந்துவிட்டது!



**ஹடாரி:** இந்தியாவில் தயாரிக்கப்பட்ட மிகச் சிறந்த கறுப்பு வெள்ளை டி.வி. இதை பிறகு கலர் டிவியாகவும் மாற்றிக் கொள்ளலாம்.

**ஒப்பற்ற தனிச் சிறப்புகள் :**

★ இதுவரை காணக் கிடைக்காத, தரத்தில் தெளிவான பிரகாசமான படக்காட்சிகள்.

★ தரமிக்க 7 வாட் ஹைஃபி ஒலிநயம்.

★ உள்ளடங்கிய வோல்டேஜ் ஸ்டெபிலைஸர்.

★ ஆடியோ டேப் ரெக்கார்டர், ரிக்கார்டு பிளேயர், விசிஆர் பொருத்த வசதிகள்.

★ தொலைதூரங்களிலும் திறமையாக செயலாற்றக்கூடிய ஹை கெய்ன் டிவி.

★ மின் அதிர்வு (ஷாக்) அபாயத்தைத் தவிர்க்க தனி மெயின்ஸ் டிரான்ஸ்பார்மர் பொருத்தப் பட்டுள்ளது. மின்சார செலவோ மிகக் குறைவு.

★ பார்ப்பதற்கு அயல்நாட்டு டிவி போல் உள்ளது. ஆனால் அவற்றை விட சிறப்பாக செயலாற்றுகிறது.

★ குறைந்த விலையில் நிறைந்த வசதிகளுடன் கூடியது.

★ ஹடாரியின் தரமான கலர் டிவிகள் குறைந்த விலையில் வெகு விரைவில் வர இருக்கிறது.

## ஹடாரி

எலக்டிரானிக்ஸ் (பி) லிமிடெட்

481, அண்ணா சாலை, நந்தனம்,
சென்னை-600 035.
தொலைபேசி எண் : 450642

Interpub(M) 84



# கறுப்பு வெள்ளை கலராகிறது



- 'கலர் டி. வி.'' வாங்கலாம் என்று பார்த்தால் எட்டாயிரம் ஒன்பதாயிரம் என்று விலைப்பட்டியல்கள் மிரட்டுகின்றன. போதாக்குறைக்கு 'வரிகள் தனி' வேறு.

- சில தயாரிப்புக்களில் விளம்பரம் செய்கிறார்கள்: ''இப்போது கறுப்பு—வாங்குங்கள். பின்னால் கலருக்கு மாற்றிக் கொள்ளலாம்'' என்று. விசாரித்தால் பழைய கறுப்பு —வெள்ளை செட்டை 'ஒரு 'விலை போட்டு' எடுத்துக் கொள்வார்கள். கலர் டி. வி. என்று புதிதாய் ஒன்றை விற்பார்கள்.

- இந்தியா சிமெண்ட்ஸிலிருந்த **கே. எஸ். ராமனும்**, பத்திரிகையாளராக இருந்து தொழில் துறைக்கு வந்துள்ள **நம்பி மார்த்தாண்டமும்** இணைந்து தொடங்கியுள்ள எலக்ட்ரானிக்ஸ் நிறுவனம், கலருக்கு ஒரு புதிய முறையை வடிவமைத்திருக்கிறது.

- கறுப்பு, வெள்ளை டி. வி. யை கலருக்கு மாற்றுவது ஒன்றும் மாஜிக் வேலை இல்லை. ''இரண்டு மணி நேர வேலைதான்'' என்கிறார் தொழில் நுட்ப ஆலோசகரான **ஆர். பி. லால்**.

- இவர்களிடம் வாங்கும் கறுப்பு—வெளுப்பு செட்டை ஒரு வருஷம் பயன்படுத்தியிருக்க வேண்டும் என்பது தான் நிபந்தனை. அடுத்த வருஷம் அதே செட்டை கலர் டி.வி.யாக இவர்கள் மாற்றி விடுகிறார்கள்.

- டி. வி. தயாரிக்கும் போதே, பின்னால் கலருக்கு மாற்றியமைக்கக் கூடிய வசதிகளை எல்லாம் செய்து வைத்து விடுகிறார்கள்.

- கறுப்பு வெளுப்பு டி. வி. இப்போது 2747 ரூபாய்தான். ஓர் ஆண்டுக்கு அப்புறம் கலர் டி. வி. யின் விலை ரூ. 5,700 என்றால் நீங்கள் கூடுதலாய் வித்தியாசத் தொகையான ரூ. 2953—ஐ மட்டும் செலுத்திவிட்டால் போதும். உங்கள் டி. வி. வண்ண டி. வியாகி விடும்.

- கறுப்பு வெள்ளை செட்டை வாங்கிப் பத்து வருஷம் ஆனால் கூட இந்த மாதிரி மாற்றிக் கொள்ள முடியும் என்கிறார்கள்.

- கண்டென்ஸர்கள், மற்றும் சிறுசிறு பாகங்களெல்லாம் 'ஸாலிட் ஸ்டேட்' ஆக இருப்பதால் எவ்வளவு வருஷம் ஆனாலும் அவை பழுதடைவதில்லையாம். 'ஸாலிட் ஸ்டேட்' என்பது கசமுசவென்று பெருவாரியான இடத்தை அடைத்துக் கொள்கிற உதிரி உறுப்புக்களை அரை அங்குலம், கால் அங்குலம் மாதிரியான சதுரப் பரப்புக்களில் இணைத்து வைப்பது என்று பொருள் கொள்ளலாம்.

- முக்கியமாக நான்கு உறுப்புக்கள்தான் கலர் டி. வி. யில் மாறுபடும். பிக்சர் ட்யூப் என்கிற படக்குழாய், குரோமா போர்டு, கூடுதல் உயர் அழுத்த டிரான்ஸ்பார்மர், படம் தெரிகிற வீடியோ போர்டு இவையும், இவை தொடர்பான சில உதிரி உறுப்புக்களும் தான். குரோமா போர்டு என்பது கலருக்காகத் தனியாக உண்டு.

- காபினெட் என்ற மரப்பெட்டியைக்கூட மாற்ற வேண்டியதில்லை. ஒளி அலைகளை வாங்கி ஒழுங்கு செய்கிற பிரிண்டட் ஸர்க்யூட் பகுதியை, பெட்டியின் ஒரு பக்கம் மட்டுமே வைத்து, மற்ற பகுதியை கலர் ஸர்க்யூட் வைப்பதற்காகக் காலியாக விட்டிருக்கிறார்கள்.

- இந்த முயற்சியில் இதுவரை வேறு யாரும் இறங்கியிருப்பதாய்த் தெரியவில்லை. இப்படி வடிவ மாற்றம் பெறும் கலர் டி. வி. செட்டுகள் அடுத்த மாதம் பார்வைக்கு வைக்கப்படுமாம்.

-வெஸ்பால்



"இல்லவே இல்லை" என்று அடித்துச் சொல்லுகிறார் சென்னை வானொலி நிலைய இயக்குனர் திரு. ஆர். என். நாயர். அவர் சொல்லும் காரணங்கள்:

- சென்னையிலிருந்து மட்டும் நான்கு ஒலிபரப்புகள். தவிர இழக்காசிய ஒலிபரப்பு. நான்கிலும் நான்கு விதமான நிகழ்ச்சிகள். எவருக்கு எது பிடிக்குமோ அதைக் கேட்க வசதி இருக்கிறது. டீ. வி. யில் இது சாத்தியமில்லை.

- எங்களுக்கு வருகிற நேயர் கடிதங்கள் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறதே தவிர துளியும் குறையவில்லை. ஒரு கடிதமாவது 'இந்த நிகழ்ச்சி நன்றாக இல்லை, நேரத்தைக் குறையுங்கள் என்று வருவது கிடையாது. 'இன்னும் நிறைய கொடுங்கள்' என்றுதான் கேட்கிறார்கள்.

- அ. இ. ரேடியோவின் நிகழ்ச்சிகளைத் தாங்கி வருகிற 'வானொலி' இதழின் சர்குலேஷன் படிப்படியாகக் கூடிக் கொண்டேதான் போகிறது.



- கிரிக்கெட் மாட்ச் ஒலிபரப்பை எடுத்துக் கொண்டால், எத்தனை பேர் டீ. வி. யில் ஒலியை நிறுத்தி விட்டு, ரேடியோ கமெண்டரி கேட்டபடி மாட்ச் பார்க்கிறார்கள் தெரியுமா? காரணம் ரேடியோ கமெண்டரியில் இருக்கிற விறுவிறுப்புத்தான்.

- லட்சக்கணக்கான கர்நாடக இசைப்பிரியர்களைத் திருப்திப் படுத்த ரேடியோவால் மட்டுமே முடியும். தினமும் இரவிகல் சங்கீதத்துக்காக ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாய் ஒதுக்கியிருக்கிறோம். டீ. வி. யில் அப்படி இல்லையே?

# டெலிவிஷன் ரேடியோவை பாதித்திருக்கிறதா?



- காலை முதல் இரவு வரை சென்னை 'ஏ', சென்னை 'பி' விவிதபாரதி என்று எல்லாவற்றிலும், தமிழ், இந்தி, ஆங்கிலத்தில் செய்திகள் மொத்தம் 19 ஒலிபரப்பாகிறது. சராசரியாக ஒரு மணிக்கு ஒரு தடவை 'செய்திகள்' அளிக்கிறோம்.

- சினிமாப் பாட்டு என்று எடுத்துக் கொண்டால் ரேடியோதான் மிக அதிக அளவில் நேயர்களை மகிழ்விக்கிறது. நேயர் விருப்பம் நிகழ்ச்சி ரேடியோவின் ஸ்பெஷாலிட்டி.

- இப்போது நான் சொல்வது ஒரு முக்கியமான பாயிண்ட். நாட்டின் எல்லா மூலை முடுக்குகளுக்கும் போய் விட்டது ரேடியோ. ஏன், நடுக்கடலில் இருப்பவர்கள் கூட ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட்டு, கரைக்கு வந்ததும் என்றைக்கு எந்த இடத்தில், எத்தனை மணிக்கு எந்த நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ்ந்தார்கள் என்று பாராட்டுக் கடிதங்கள் எழுதுகிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.



- இன்னொரு விஷயம் இன்று நரிக்குறவர்கள் கூட ஜாலியாய் ரேடியோ கேட்பதை நாம் பார்க்கிறோம். ஆனால் டீ. வி. இன்னும் மத்திய தரக்குடும்பத்தைத் தாண்டிக் கீழே வரவில்லையே? அப்படியே டீ. வி. வைத்திருப்பவர்கள், ரேடியோவும் கூடவே வைத்துக் கொண்டு தானே இருக்கிறார்கள். டீ. வி. வந்து விட்டதால், ரேடியோவைத் தூக்கி எறிந்துவிடவில்லையே?

பேட்டி: மௌலி

# திரைக்குப்பின் திறமைகள்



## ஒரு டி. வி. நாடகம் உருவாகிறது!

● இது என்ன தொழிற்சாலையா, இல்லை புதுமாதிரி பாஸ்கெட் பால் விளையாட்டு அரங்கமா? இரண்டுமில்லை. டி. வி. ஸ்டுடியோ நம்பர் ஒன்று. இதில் அமைந்திருக்கும் 'ஸெட்'டுக்கு ஒளியை அள்ளி வீசும் ஒளி விளக்குகள் பொருத்திய 'லைட்டிங்கிரிட்' மேலேயும், கீழேயும், பக்கவாட்டிலும் நகர வைக்கும் வின்ச் வசதி கொண்டது. லைட்டிங் எஞ்சினியரின் ஆலோசனைக்கு ஏற்ப, தேவையான இடத்தில், தேவையான அளவுக்கு ஒளிவீச்சு அமைய, லைட்டிங் உதவியாளர் செயல்படுகிறார். (படம் 1)



● சினிமாவில் பின்னணி இசையைத் தனியே அமைத்துச் சேர்ப்பார்கள். டி. வி. நாடகத்தில் — 'ஸெட்'டுக்கு வெளியே இசையமைப்பாளர் பாட்ரிக்கின் குழுவினர் தங்கள் முன்னே இருக்கும் டி. வி. திரையில் வரும் காட்சியைப் பார்த்துக் கொண்டே, அவ்வப்போது தகுந்த பின்னணி இசை தயாரிக்கிறார்கள்.

● நாடகத்தில் ஒரு காட்சி. மாணிக்கமாக ரவிசங்கரும், மண்ணாங்கட்டியாக தங்கராஜூம். மேலேயிருந்து தொங்கும் மைக் டி. வி. திரையில் வராது. (படம் 2)



● ஃப்ளோர் மானேஜர் அரசுக்கு 'மேலிடத்தி'லிருந்து ஏதோ கட்டளை. மரகதமாக நடிக்கும் விஜயலட்சுமிக்கு அதைத் தெரிவிக்கிறார். மேலிடம் என்றால் வேறொன்றுமில்லை. தயாரிப்பாளர் மேலேயிருந்து கொடுக்கும் டைரக்ஷன் குறிப்புகளைத் தமது 'காதில் வாங்கி', பாத்திரங்களிடம் அதைத் தெரிவிக்கிறார் ஃப்ளோர் மானேஜர் அரசு. (டி. வி. நாடகத்துக்குத் தயாரிப்பாளர்தான் இயக்குநர்.) (படம் 3)



● எதற்கு ஒன்றுக்கு மூன்றாக காமிரா மாறுபட்ட கோணங்களில் பாத்திரங்களின் முகபாவத்தையும் நடிப்பையும் காண்பிக்கத்தான். சினிமாவில் ஒரு காமிரா போதும். டி. வி. நாடகத்துக்கு மூன்று வேண்டும். காமிராமேன் ராதாகிருஷ்ணன் (1) காமிராமேன், ஜெயசங்கர் (2), காமிராமேன் ரவி, (3) மூன்று பேரும் 'கடத்'தயாராய் இருக்கிறார்கள்! (படம் 4)

● நாடகத்தில் ஒரு முக்கியமான சின்–டிக்கடை. ''இந்த சீனுக்கு பாய்லர் எல்லாம் வெளியே இருந்து கொண்டு வருவீர்களா?'' ''இல்லே. இங்கேயே இருக்கிறது. ஒரு நாடகத்துக்குத் தேவையான பொருள்கள் எல்லாம் வைத்திருப்போம்!''



● இதுதான் காமிரா கண்ட்ரோல் யூனிட் எனப்படும் C.C.U. தயாரிப்பாளரின் விருப்பப்படி இயங்கும் எலக்ட்ரானிக் காமிராக்களின் இயக்கங்களைக் கட்டுப்படுத்தியும் நெறிப்படுத்தியும் பணிபுரியும் ஆபரேடிங் என்ஜினியர்கள் ஒய். மங்களம், ஜி. சந்திரகலா, ரவீந்திரன். (படம் 5)

● குரலையும், வாத்தியக் கருவிகளின் ஒலியையும் சீரான அளவுக்கு ஆடியோ கன்ஸோலில் ஒலிப்பதிவு செய்கிறார்கள். என்ஜினியர்கள் பரணியும், ராமச்சந்திரனும்.



● இதுதான் தயாரிப்புக் குழு. நடுநாயகமாக இருப்பவர் நாடகத் தயாரிப்பாளர் சேனாபதி. இவர் இருந்த இடத்திலிருந்து ஃப்ளோர் மானேஜரிடமும் காமிராமேன்களிடமும் பேசலாம். அவருக்கு வலப்புறம் தயாரிப்பு உதவியாளர் ரவிச்சந்திரன். இடப்புறம் விஷன் மிக்ஸர் என்ஜினியர் வைத்தியநாதன். உட்கார்ந்த இடத்திலிருந்தே ஆட்டி வைக்கிறார் தயாரிப்பாளர். (சேனாபதி அல்லவா?, (படம் 6)

● தயாரிப்புக் குழுவுக்கு எதிரே இருக்கும் வீடியோ மானிட்டர்களில் கிடைக்கும் பிம்பங்களை ஒரே சமயத்தில் பார்வையிட்டபடியே, எது தேவை என்று அந்தக் கணமே தீர்மானித்து, அருகிலுள்ள ஒளிக்கலவைப் பொறியாளரிடம் சொல்லிக் கொண்டே வருகிறார் தயாரிப்பாளர். (பொறி கலங்குகிறது நமக்கு! அத்தனை வேகம்.) அந்தக் காட்சி 'பஞ்ச்' செய்யப்படுகிறது.



● தியாகமூர்த்தி என்ன செய்கிறார்? ஒளிப்பதிவு – ஒலிப்பதிவு இரண்டும் இங்கே தான் நடக்கிறது. (படம் 7)

● கடைசிக் கட்டம்: இதுதான் மாஸ்டர் கண்ட்ரோல் ரூம் எனப்படும் பிரதான கட்டுப்பாட்டு அறை. சென்ட்ரல் அபேரடஸ் ரூமிலிருந்து வரும் நிகழ்ச்சியை, இங்கேயிருந்து தான் டிரான்ஸ்மிட்டருக்கு அனுப்பி வைக்கிறார்கள். டெக்னிகல் டைரக்டர் நீலகண்டன் கண்குத்திப்பாம்பாய்க்கவனித்துக் கொண்டு, கைவிரல்களுக்கு அடியிலிருக்கும் பல ஸ்விட்சுகளில் எதை எந்தச் சமயத்தில் அழுத்த வேண்டுமோ அதை அழுத்தத்தயாராய் இருக்கிறார். இனி நாடகம் டி.வி. திரையில். (படம் 8)



–சாருகேசி

புகைப்படங்கள்: 'சுபா' எட்வர்ட்

# The Westonishing Variety


Color TV's


Black & White TV's


Video Cassette Players


Cassette Tape Recorders


Calculators



Video Tapes


Video Cassette Recorders



Cassette Tapes


Two-in-Ones

**Weston®**
**The electronics people**

SAA/WEL/3065

# சிரமங்களும் சாதனைகளும்



**காமிராக்கள் எப்படி இருந்தாலும் படம் எடுக்கிறவரின் ரசனையும் ஆர்வமும்தான் நல்ல பலனைத் தரும்... முதலில் காமிராமேன் 'பார்த்து' ரசிக்கிற ஒன்றைத்தான் நாம் டி. வி. திரையில் பார்க்கிறோம்.**

'என்ன இது? டி.வி.யிலே படம் சரியாகவே வரல்லியே...?' என்று அலுத்துக் கொள்கிறோம். 'ஆகா! எவ்வளவு அழகாப் படமாக்கியிருக்காங்க...' என்று வியப்பும் அடைகிறோம்.

இந்தக் காமிராக்கள், படம் பிடிப்பவர்கள் சமாசாரம் என்ன என்று தெரிய வேண்டாமா? சென்னைத் தொலைக்காட்சியின் வெளிப்புறப் படப்பிடிப்புக் குழுவின் தலைமைக் காமிராமேன் திரு. பழனிச்சாமியிடம் சேகரித்த சில தகவல்கள்:

ஸ்டுடியோவில் படமாக்குவது எலக்ட்ரானிக் காமிரா பிரிவு. இவர்களின் எலக்ட்ரானிக் முறைக் காமிராவில் படச்சுருள் கிடையாது. டி. வி. செட்டில் உள்ளது போன்ற பிக்சர்ட்யூப்தான் உண்டு. ஒளி அலைகளை மின் அலைகளாக மாற்றிக் காமிராவுக்கு அப்பால் உள்ள ஓர் இடத்தில் ஒயர்களின் வழியே வீடியோ நாடாவில் பதிவு செய்து கொள்ளலாம். அல்லது அப்படிப் பதிவு செய்து கொள்ளாமல் நேரடியாக (லைவ்) ஒளி பரப்பவும் செய்யலாம். செய்தி அறிக்கைகள், கிரிக்கெட் மாட்சுகள் இப்படி லைவ் ஆக ஒளி பரப்பப்படுகிறவை.

வெளிப்புறப் படப்பிடிப்புக்கு என்று இருப்பது சினிமா காமிரா மாதிரிதான். பதினாறு மி. மீ. படச்சுருளைத்தான் டி.வி. காமிராக்களில் பயன்படுத்துகிறார்கள். காமிராக்களில் பிலிம் சுருள்களை 'மாகஸின்' என்கிறார்கள். 100 அடி நீளச்சுருள் இரண்டரை நிமிடம் தான் வரும். 400 அடி சுருளானால் பத்து நிமிடங்கள் எடுக்கலாம். இரு வகை மாகஸின்களையும் வைக்கக் காமிராவில் இடமுண்டு - கண் சிமிட்டுகிற நேரத்தில் என்கிற மாதிரி புதிய பிலிம் சுருள்களை மாற்றுவது இவர்களுடைய திறமை.

○ பி. எஸ். பழனிச்சாமி



சில நேரங்களில் டி.வி. திரையில் காட்சிகள் கறுப்பு அடித்த மாதிரி தோன்றுவதுண்டு. போதுமான வெளிச்சம் இல்லாமல் எடுத்த படமாக இருக்கலாம். அல்லது, லாபரேடரியில் ஏற்பட்ட கோளாறாகவும் இருக்கலாம். எப்படியிருந்தாலும் டி. வி. திரைக்கு வரும் போது, புரொஜக்டர் மாதிரி டெலிஸினி கருவிகளிலேயே திரையிடுவார்கள் அப்போது ஒளியைக் கூட்டிக் குறைப்பதால் நல்ல மாதிரி படங்களைக் காட்ட முடியும்.

நம்முடைய டி. வி. காமிராக்களால் நூற்றைம்பது அடி தூரம்தான் 'பார்த்துப்' படமெடுக்க முடியும். வெள்ளம் போன்ற நேரங்களில், ஹெலிகாப்டரில் தாழப் பறந்து படங்களை எடுப்பது மிகவும் அபாயகரமான வேலை.

காமிராக்கள், பிலிம்கள் எல்லாமே இந்தியாவில் தயாரானவை அல்ல. இறக்குமதிப் பொருள்கள்தான். சாதாரணமாக, கூட்டங்களிலும், நிகழ்ச்சிகளிலும் தோளில் சுமந்து கொண்டு போகிற காமி





○ அறுவை சிகிச்சை டி.வி.யில் காட்டப்படுகிறது

ராக்களின் விலை? ஐந்து லட்சத்துக்கும் அதிகம்.

காமிராமேன் பயிற்சிக்காக இந்தியாவில் புனேயிலும், சென்னை அடையாறிலும் பயிற்சி நிலையங்கள் உள்ளன. இந்தியத் தொலைக்காட்சி நிலையங்கள் பலவற்றில் நம்முடைய அடையாறு பயிற்சி நிலைய மாணவர்கள் தான் அதிகமான அளவில் பணியாற்றுகிறார்கள் என்பது தமிழகம் பெருமைப்பட வேண்டிய செய்தி. இது +2—வுக்குப் பிறகு அளிக்கப்படும் மூன்றாண்டுப் பயிற்சி.

காமிராக்கள் எப்படியிருந்தாலும் படம் எடுக்கிறவரின் ரசனையும் ஆர்வமும் தான் நல்ல பலன்களைத் தரும். பொதுவாக டி.வி. என்பதே புகைப்படக்காரர்களை நம்பியிருக்கிற ஒரு சாதனம்தான். முதலில் காமிரா மேன் 'பார்த்து' ரசிக்கிற ஒன்றைத்தான் அப்புறம் நாம் டி.வி. திரையில் பார்க்கிறோம்.

இவர்களுக்குத் தொழில் முறையில் சிரமங்களும் உண்டு. நெஞ்சை நிமிர்த்துகிற சாதனைகளும் உண்டு. மழை நேரங்களில், விலையுயர்ந்த காமிராவின் லென்சுகளில் மழைத்துளி படாமல், பட்டாலும் உடனுக்குடன் துடைத்துக் காப்பாற்றிப் படமெடுப்பது சாதாரணமான இல்லை. வனவிலங்குகளைப் பற்றிய டாகுமெண்டரி தயாரிப்பில் காடுமலைகளில் காமிராவுடன் அலைந்துகாட்சிக்காகக் காத்துக் கிடப்பதும், கூட்டங்களில் முக்கியமான நிகழ்ச்சியைப் படம் பிடிக்கக் காத்துக் கிடக்கும் போது சம்பந்தமில்லாத ஒருவர் குறுக்கே வந்து காரியத்தைக்கெடுப்பதும்—ஹாய்யாக அமர்ந்து டி.வி.பார்க்கிறவர்களுக்குத் தெரிய நியாயமில்லை.

அதேபோல் இருதய ஆபரேஷன் போன்ற அரிதான காட்சிகளை டாக்டர்களுடன் கூடவே இருந்து கவனித்துப் படமெடுத்து வழங்கும்போது ஏற்படுகிற அனுபவம்காஞ்சிப்பெரியவர் போன்ற ஞானிகளின் முன்னால் அருகில் போய் நின்று தரிசிக்கிற பேறு எல்லாமே இந்தத் தொழிலில் மன நிறைவு தருகிற 'ஊக்க போனஸ்' தான்.

ஒரு சமயம் பாலசந்தரின் வீணைக்கச்சேரியைப் படமாக்கினோம். திடீரென்று திரையில் முழு அளவுக்கும் முருகன்உருவத்தைக் காட்டினோம்.பார்த்தவர்கள் இது எப்படிவந்ததுஎன்றுஎண்ணியிருக்கக் கூடும். பாலசந்தரின் வீணைத் தந்திகளை முடுக்குகிற பிருடையின் முகப்பில் கணபதி, முருகன் உருவங்கள் உண்டு. படம் பிடிக்கும்போது எதிர்பாராத காமிரா ஆங்கிளில் இது தட்டுப்படவே அதைத் திரையில் கொண்டு வந்தோம்.

வேலூர் ஜலகண்டேசுவரர் ஆலயத்தில் அறுபத்து மூவர் பிரதிஷ்டையின் போது காஞ்சிப் பெரியவர்கள் மூன்று பேரையும் தரிசித்து, டி.வி. அன்பர்களையும் தரிசிக்கப் பண்ணிய அனுபவம் சுவையானது. திடீரென்று தோன்றியது, ஊன்று கோல் இல்லாமல், பாத அணி கூட இல்லாமல் இத்தனை முதுமையில் ஞான யாத்திரை போகிற பாதங்கள் எப்படியிருக்கும் என்று பார்க்கத் தோன்றியது. காமிராக் கண்களால் அந்தப் பொற்பாதங்களைப் பார்த்து நான் மெய்சிலிர்த்தது மட்டுமின்றி, அதை டி.வி.யில் பார்த்த நேயர்களும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

தஞ்சை மன்னார்குடி வெள்ளப் பகுதியில் மீட்புப் பணி நடந்த நேரம். காட்சிகளை ஹெலிகாப்டரில் பறந்து கொண்டே படமாக்கிக்கொண்டிருந்தோம். ஒரு திட்டுப் பகுதியில், சில கன்னிகாஸ்திரீகளும், பள்ளிக் குழந்தைகளும் உதவிக்குக் காத்து நின்றார்கள். எங்கள் ஹெலிகாப்டர் படம் எடுக்க வந்தது தான் என்று தெரியாமல் உதவிக்கோ உணவுப் பொட்டலம் போடவோ என்று எண்ணி அவர்கள் கைகளை அசைத்த காட்சி நெஞ்சை நெகிழ்த்தி விட்டது.

மொத்தத்தில், இந்தக் காமிராக் கலைஞர்களுக்கு அற்புதமான மன வளம் வேண்டும்.

சினிமா காமிரா மேன் ஆனால் டைரக்ஷன் என்று உண்டு. டி.வி. காமிராவில் அவர்களேதான் நீதிபதிகள்! நுணுக்க அறிவும், கற்பனை வளமும், கலாரசனையும், எல்லாவற்றுக்கும் மேல் அளவற்ற பொறுமையும் வேண்டிய தொழில் இது.

—சுப்ரபாலன்

## ஒன்றுபட்டால் உண்டு அதிக லாபமே!

# இப்போது! ஸியர்ஸ் டிவி
# குருப் பர்ச்சேஸ் திட்டம்





**தொழிற்சாலைகள்/தொழிற்பேட்டைகள், வணிக மற்றும் இதர நிறுவனங்கள், பெரிய அலுவலகங்கள், கூட்டுறவு சங்கங்கள் முதலியவற்றின் ஊழியர்களே!**

- உங்கள் ஸியர்ஸ் டிவி செட்டை இன்றே எடுத்துச் செல்லுங்கள் (உங்கள் குழுவினர் செலுத்த வேண்டிய பணத்தை முதலில் நாங்கள் ஏற்பாடு செய்வோம்)— பின்பு சுலபமான மாதத் தவணைகளில் கட்டுங்கள்.
- உங்கள் குழுவினர் ரொக்கப் பணம் கொடுத்து வாங்கினால், விசேஷ விலை குறைப்புச் சலுகை!
- தேர்ந்தெடுக்க 6 மாடல்கள்

*முந்துங்கள்! உங்கள் குழுவின் தலைவரை, அருகிலுள்ள விற்பனையாளரை அணுகி முழு விவரங்களைப் பெறச் செய்யுங்கள்!*

GK&E.M84.23 Tm.



### இசை அரங்கம்

''என்ன இது. அந்தப் பெண் பாடிண்டு இருக்கும் போது, பின்னுடி தம்புரா போடற லேடி அழகு காமிச்சுண்டு இருக்காங்களே, ஏன்?''

''அது பாடறவங்களோட மாமியார்!''

### நாடகம்

''டீ. வி. நாடகங்களிலே ரியலிஸமே கிடையாதுங்கறியே, ஏன்?''

''பாரேன். டெலிபோன் வராத நாடகமே கிடையாது. ஆனா ஒரு தடவையாவது ராங் நம்பர் வர மாதிரி காமிச்சிருக்காங்களா?''



ஜம்புநா



### செய்திகள்

''ஏங்கடா மண்டையிலே பிளாஸ்திரி?''

''ஒண்ணுமில்லே. பெண் செய்தி வாசிப்பவரோட இமைகள் துல்லியமா தெரியுதான்னு இமை கொட்டாம பாத்திண்டு இருந்தேன். பொண்டாட்டி மண்டையிலே 'போட்டா பாரு!...''

### எதிரொலி

அவன்: பொண் பார்க்க வந்த பையன்கிட்டே 'நீங்க எதிரொலியிலே பதில் சொல்றவர் மாதிரி கல்யாணத்துக்கு அப்புறம் நடந்துக்கக் கூடாதுன்னு' எதுக்கு கண்டிஷன் போட்டே?

இவள்: ஆமாம்! எந்தக் குற்றம் குறையைச் சொன்னாலும் ஒத்துக்காம தான் செஞ்சது சரின்னு சமாளிக்கக் கூடாது இல்லேயா?







### சினிமா

"போன வாரம் நீ பார்த்த படம் ரொம்ம்ம்பப் பழசுன்னு ஏன் நடுங்கிண்டே சொல்றே?"

"சினிமா ஆரம்பிச்ச உடனே அதிலே நடிச்சவங்களோட ஆவியெல்லாம் டி. வி. பார்க்க என் பக்கத்திலே வந்து உக்காந்துடுத்து!"

# ஸ்பெஷல்



### நல்வாழ்வு

"எங்க டாக்டர்கிட்டே நல்வாழ்வு நிகழ்ச்சியிலே அவர் சொன்ன அட்வைஸ்னாலே என் உடம்பு குணமாச்சுன்னு நான் சொல்லியிருக்கக் கூடாது!"

"ஏன்?"

"நாற்பது ரூபாய்க்கு பில் அனுப்பியிருக்கிறார்."



### கலந்துரையாடல்

"டேய் கனகதுரை, டி. வி. யிலே வேலை செய்கிற பொண்ணைக் கல்யாணம் செஞ்சுண்டயே, முதல் இரவிலே முதல் முதலா என்ன பேசினே?"

"'வணக்கம் திரு. கனகதுரை அவர்களே!'".





### விளம்பரம்

அவன்: டி. வி. யினாலே நிறைய விஷயங்கள் தெரிஞ்சுக்கலாம்னு சொல்றாங்களே, உன்னோட மூணு வயசுக் கடைக் குட்டி என்ன தெரிஞ்சுண்டு இருக்கான்?

இவன்: நிரோத்!

# கண்ணைக் கவரும் காபினெட்டுகள்





எவ்வளவுதான் உயர்ந்த நுணுக்கத்துடன் தயார் செய்யப்பட்டிருந்தாலும் எந்தப் பொருளுமே பார்க்க அழகாய் இல்லாவிட்டால் விற்பனையாகாது. கண்ணுக்குத் தெரிவதென்னவோ டி. வி. காபினெட்டின் பளபளா தோற்றமும் வழவழ சன்மைக்கா கதவும் தான். இவ்வாறு கண்கவர் புறத் தோற்றத்தை அளிக்கும் காபினெட்டுகளைச் செய்யத் தேவையான முக்கியமான பொருட்கள்:—

ப்ளைவுட், ஃபெவிகால், மைகா ஷீட்.

பிளைவுட் வாங்கி, டி. வி. யின் அளவுக்கு ஏற்ற மாதிரி வெட்டி. மேலே மைக்கா ஷீட்டை 'பெவிகால்' உபயோகித்து ஒட்டி விடுகிறார்கள்; சைட் பேனல், இரில் இவற்றுக்கு 'ஹார்ட் போர்ட்' உபயோகிக்கிறார்கள்.

''இந்தத் தொழிலுக்கு நிறைய கிராக்கி இருந்தது. ஆனால் கலர் டி. வி. யின் விலை குறையும் என்ற எண்ணத்தை அரசாங்கம் ஏற்படுத்தி விட்டதால், பிடிவாதமாகப்பலர் டி. வி. வாங்காமல் இருக்கிறார்கள். அதனால் கொஞ்ச காலமாக இந்தத் தொழிலில் மந்த நிலை.'' என்கிறார் **கே. ஜி. சந்திரசேகரன்** (ஜி. வி. இண்டஸ்ட்ரீஸ் உரிமையாளர்) தற்போது ஹடாரி, ஸ்கேனர் டி. விகளுக்குத் தேவையான காபினெட்டுகளைச் செய்து தருகிறார். இந்த டி. வி. கம்பெனிக்காரர்கள் 'பிளாக் அண்ட் ஒயிட்டை' பின்னால் வண்ணமாக மாற்ற முடியும் என்று திடமாக நம்பி; அதற்கான உத்தரவாதமும் தருவதால் — அதற்கு ஏற்றாற்போல் காபினெட்டுகள் இங்கு தயாரிக்கப்படுகின்றன.

எவ்வளவு விலை?

ஜனதா மாடலில், கதவு இல்லாமல் ரூ. 175; கதவுடன் ரூ. 300. இரண்டு ஸ்பீக்கர் பொருத்துமளவு அமைப்புகள் கொண்ட ஸ்பெஷல் காபினெட்டுக்கு இன்னும் விலை கூட.

''மூலப்பொருள் தேவையான சமயத்தில் கிடைப்பது இல்லை: மைகா ஷீட் கொஞ்ச மாதங்களுக்கு முன் கிடைக்கவே இல்லை. போதாக்குறைக்கு பிளைவுட்டின் விலை ஒரு மாதத்துக்கு முன் ஏறிவிட்டது. ஆனால் நாங்கள் விலையை ஏற்ற முடியவில்லை'' என்று குறைப்பட்டுக் கொண்டார் சந்திரசேகரன்.

''பிரபல, பெரிய, டி. வி. கம்பெனிக்காரர்கள் டி. வி. விலை குறைப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறார்களே?'' என்று கேட்ட போது,

''இந்த விலை குறைப்பு மிகத் தீவிரமாகச் சென்று சில சமயம் சாதாரண தச்சு வேலை செய்பவர்களைக் கூட, காபினெட் செய்வதில் ஈடுபடச் செய்து விடுகிறார்கள்!'' என்றார் சந்திரசேகரன்.

''இப்போதைக்கு குறைவான லாபம்தான் கிடைக்கிறது: என்றாலும் எதிர்காலத்தில் நல்ல வாய்ப்புக்கள் உள்ளன'' என்று நம்பிக்கையுடன் தெரிவிக்கும் இந்த 27வயது இளைஞர் அரசாங்க வங்கி உதவியுடன் கே. நகரில் இத்தொழிலைத் துவங்கியிருக்கிறார். முன்பு பிரபலமான டி. வி. கம்பெனிகளில் வேலை பார்த்து அனுபவம் பெற்றவர்.

-வாதூலன்

# உற்பத்தியாளர்களுக்கு உதவ ஓர் அமைப்பு

டி. விக்குத் தேவையான மூலப் பொருள்கள் தருவிக்கும் பொறுப்போடு தயாரான டி. வி. செட்டுகளை விற்கிற பொறுப்பையும் ஏற்றுள்ளது— நேஷனல் ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன். என். எஸ். ஐ. ஸியைச் சேர்ந்த ஒரு நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் திரு. ஆர். பக்குராமன் தெரிவித்த தகவல்கள்:



✕ பிக்சர் டியூபினுள் இருக்கும் எலக்ட்ரானிக் கானன்

- எல்லா டெலிவிஷன்களுக்கும் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருந்தாலும், 'டிஸைன்' னில் ஒன்றுக்கு ஒன்று வேறுபடுகிறது. சாதாரண ஜனங்களாலும் இதைக்கண்டு பிடிக்க முடியும்.

- டி. வி. உற்பத்திக்கு இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் ஏதும் தேவை இல்லை. நுகர்வோர் சாதனமான இதைத் தற்போதைக்குப் பங்களாவில் கூட உற்பத்தி செய்துவிடலாம்.

- அரசாங்கம் எக்ஸைஸ் வரியைக் குறைத்தது உண்மைதான். ஆனால் வண்ண டி. வி. யில் நிறையகுறைத்து விட்டு, சாதாரண பிளாக் அண்ட் ஒயிட்டில் லேசாக ஏற்றியுள்ளார்கள். ஆக, பயன் அடைவது பணம் படைத்தோரே!

- புதுப் புது டி. வி. உற்பத்தி வரவேற்கத்தக்கதுதான். போட்டி இருந்தால் ஜனங்களுக்குப் பலன் உண்டு. அதுவும் நூறு இடங்களுக்கு மேல் புது ஸ்டேஷன்கள் நிறுவ, அரசாங்கம் தீர்மானம் செய்திருப்பதால் — டிவி விற்பனைக்கு நிறைய வாய்ப்பு உள்ளது. ஆனால் தொழிலதிபர்களுக்குள் ஒரு கட்டுப்பாடு இருப்பது நலம். பிற டி. வி. க்களைப் பழிப்பது போன்ற விளம்பரத்தைத் தவிர்க்கலாம்.

- இதற்கும் ஐ. எஸ். ஐ. மார்க் உண்டு. ஆனால் கட்டாயமில்லை. கலர் டி. வி. இண்டர்நேஷனல் தரத்துக்கு அமைய வேண்டும்.

- ஒல்டேஜில் அதிகமான ஏற்றத்தாழ்வு இருப்பதால் 'பில்ட் இன் ஸ்டெபிலைசர்' இருந்தும் கூடத் தனியாக வேறு ஒரு ஸ்டெபிலைசர் தேவைப்படுகிறது.



✕ டீவி. பிக்சர் ட்யூப் இந்திய தயாரிப்பு

- டி. விக்குத் தேவையான 'பிக்சர் டியூப்' இரண்டரை லட்சம் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆனால் இதற்குத் தேவையான ஓர் உறுப்பு — ('ஷெல்' என்று குறிப்பிடுகிறார்கள்.) வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. இப்போதுதான் இந்தியாவிலேயே மஹாராஷ்டிரத்தில் இதைத் தயாரிக்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

- எந்தப் பொருளிலுமே தரத்துக்குத் தனியான விலை உண்டு. விலை குறைப்பு என்ற பெயரில் தரக் குறைவான பொருட்கள் நிறைய வருகின்றன. உண்மையான தரம் எது என்று ஜனங்கள் கண்டுகொள்ள நாள் ஆகும்.

- திடுமென்று பூதம் மாதிரி வளர்ச்சி அடைந்திருக்கிறது டி. வி. உற்பத்தி. இதற்கு ஏற்ற மாதிரி, ஈடு கொடுக்கத் தேர்ச்சி பெற்ற சர்வீஸ் இஞ்சினியர்கள்



நிறைய பேர் கிடையாது. எனவேதான் சற்றுக் குட்டிகளெல்லாம் நுழைந்துவிட்டார்கள். நீங்கள் கூப்பிட்ட குரலுக்கு உடனே வந்து, ''இதற்கு வேறு ஒரு பாகம் வேண்டும்; நாளை வருகிறேன்!'' என்று அந்த மெகானிக் சொல்லிவிட்டால், பூரித்துப் போய் விடுகிறீர்கள்; உண்மை என்னவென்றால், விஷயம் தெரிந்த ஆளைக் கூப்பிட்டுக் கொண்டு வர அவகாசம் தேவைப்படுகிறது!

- உற்பத்தி செய்யப்பட்ட புது டீ. வி.யை ''Environmental Chamber'' —இல் வைத்து, விதவிதமான பருவ நிலைகளில் சோதித்துப் பார்க்க வேண்டும்; 'இன்ஸ்ட்ரானிக்ஸ்' எஸ்டேட்டில் இந்த சேம்பர் உள்ளது.

- உற்பத்திக்கான மூலப் பொருட்களைச் சீராக விநியோகம் செய்ய அரசாங்கம் வழி வகுக்க வேண்டும். உதாரணம்; பிக்சர் டியூப். சில சமயத்தில் பெல் நிறுவனத்திலிருந்து கிடைக்காததால், வேறு கம்பெனிகளை நாட வேண்டியிருக்கிறது; தாமதம் ஆகிறது. வேறு சில வேளைகளில், எக்கச்சக்கமாகக் குவிந்துபோய்த் தேங்கி விடுவதால், சரியானபடி உபயோகிக்க முடியாமலும் நிலைமை உள்ளது. ஓரளவு சீராக, ரெகுலராக மூலப் பொருள் கிடைத்தால் நல்லது.

- என்.எஸ்.ஐ.சி. நிறுவனம், டீ.வி. பழுது பார்ப்பதில் தேர்ச்சி அடைய இன்ஸ்டிடியூட் துவங்கவிருக்கிறது. பல பேருக்குச் சுய வேலை வாய்ப்பு அளிப்பதே இதன் முக்கிய நோக்கம்.

---

# பழுது பார்க்க—பயிற்சி

**பா**ர்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ரேடியோ, டீ.வி. ரிப்பேர்க் கடைகளிடையே, ரிச்சி தெருவில் (சிந்தாதிரிப் பேட்டை) ஒரு கட்டிடத்தின் இரண்டாவது மாடியில் ''இன்ஸ்டிடியூட் ஆஃப் எலக்ட்ரானிக்ஸ்'' என்ற நிறுவனம் இயங்கி வருகிறது.

''நாங்கள்தான் இந்தத் துறையின் முன்னோடிகள். மற்ற நிறுவனங்களுக்கும், எங்களுக்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் 'பிராக்டிக'லான சமாசாரங்களை நாங்கள் நிறைய சொல்லித் தருகிறோம்'' என்கிறார் இங்கு பணிபுரியும் **திரு. ரங்கநாதன்.**

பத்தாவது வரை படித்திருப்பவருக்கு மூன்று மாதம் பயிற்சி அளிக்கிறார்கள்; படிப்பு அதிகமாக ஆக, பயிற்சியின் கால அளவு குறைகிறது.

''பத்து பன்னிரண்டு பேருக்கு மேல் அனுமதி கிடையாது. இங்கு கற்றுக்கொள்ளும்போதே, கடைகளுக்குச் சென்று ரிப்பேர் பார்க்கும் அளவுக்குத் தயார் செய்து விடுகிறோம்'' என்று உற்சாகமாகக் கூறிக் கொண்டே, உள்ளே அழைத்துப் போனார்.

''டீ. வி. தயாரிப்பில் நாம் நிறைய முன்னேறி விட்டதால் டீ. வி. ரிப்பேரும் ஓரளவு எளிதாகி விட்டது. வைறப்ரீட், ஸாலிட் ஸ்டேட்டிலிருந்து இப்போது ஐ. ஸி. (Integrated Ci.cuit) வந்துவிட்டது'', என்று கூறும் ரங்கநாதன், கலர் டீ. வி. பழுது பார்ப்பது ரொம்ப சுலபம்'' என்று அபிப்ராயப்படுகிறார். கலர் டீ. வி. யின் பல பாகங்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி ஆவதால் அப்படி அப்படியே வாங்கிப் பொருத்தி விடலாம்'' என்கிறார்.

நாலைந்து பேர்கள் கூட்டாகச் சேர்ந்து ஆர்வத்துடன் வேலையில் ஈடுபட்டிருந்தனர்.

''உண்மையான சிரத்தை உள்ளவர்களைத் தான் சேர்த்துக் கொள்கிறோம். ஆங்கிலத்திலேயே சொல்லித் தருவதில்லை. தமிழ் தவிர வேறு பல மொழிகளுடன் இயல்பாகக் கற்றுத் தந்து, சர்வீஸிங்குக்கு நல்ல பயிற்சி அளிக்கிறோம்.''

பல்வேறு வகையான டீ. வி. மாடல்களை சர்வீஸ் செய்ய இங்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. ''சில சமயம் ஐ. ஸி. யில் குறிப்பிட்ட பாகங்களின் எண் தெரியாது. சில கம்பெனிக்காரர்கள் மறைத்து விடுகிறார்கள். இதனால் என்ன ஆகிறதென்றால், அந்தக் குறிப்பிட்ட கம்பெனி சர்வீஸ் செண்டருக்கே போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. எல்லோருக்கும் தெரியும்படி இருந்தால், ஜனங்களுக்கும் நல்லது; டெக்னாலஜியும் முன்னேற்றம் அடையும்'' என்கிறார் இங்கு பயிற்சி பெற்ற ஒரு மாணவர்.



''முழுக்க முழுக்க மாணவர்களாலேயே இந்த இன்ஸ்டிடியூட் உருவானது'' என்று பெருமிதத்துடன் கூறுகிறார் இதன் உரிமையாளர் **திரு. பாட்சா.**

—ஈஸ்வர்குமார்



**இயக்குனருடன் சில நிமிடங்கள்**

சென்னைத் தொலைக்காட்சி நிலைய இயக்குனர் திரு ஆர். எஸ் சவ்நேகர் சொல்கிறார்...

# நாடகங்கள் நன்றாகத்தானே இருக்கின்றன

''இங்கே டெலிவிஷன் ரேடியோவைப் பாதித்திருக்கிறதா?''

''இதுவரை இந்த விஷயத்தை ஆராய எந்தவித சர்வேயும் எடுத்ததில்லை. ஆனாலும் என் சொந்த அனுபவத்திலிருந்து சொன்னால் 'நிச்சயம் பாதித்திருக்கிறது. பலர் இப்போது ரேடியோவின் பக்கமே போவது கிடையாது. டீ.வி. ஒரு விஷுவல் மீடியம். இதற்குக் கவரும் சக்தி அதிகம். எனவே டெலிவிஷன் தெரிகிற பகுதிகளில் ரேடியோ பாதிக்கப்பட்டுத்தான் உள்ளது.

''தமிழ்நாட்டின் முக்கிய மொழி தமிழ்தான். பின் எதற்காக சென்னை டெலிவிஷனில் தெலுங்கு, கன்னட, மலையாள நிகழ்ச்சிகள்?''

''டெலிவிஷன் நிகழ்ச்சிகள் அமைக்கப்படுவது மாநில பிரதான மொழியின் அடிப்படையில் இல்லை. அங்கே பேசப்படுகிற மொழிகளின் அடிப்படையில் தான். சென்னையில் மற்ற மொழிக்காரர்கள் நிறைய இருக்கிறார்கள். அதனால் தான் பிறமொழி நிகழ்ச்சிகள். ஏன்? பம்பாயில் இந்தி தவிர குஜராத்தி, மராத்தி, சிந்தி மொழி நிகழ்ச்சிகள் ஒளி பரப்பப்படுகின்றனவே. அந்தந்தப் பகுதிகளில் அதிகம் பேசப்படுகிற மொழிக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட வேண்டும். அவ்வளவு தான்.

''பிராந்திய மொழிகளுக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட வேண்டுமென்றால், ஒவ்வொரு பிராந்தியத்திலும் அந்தந்த மொழி தெரிந்தவர்கள் தானே நிலைய இயக்குனர்களாய் இருக்க வேண்டும்?''

''இது அரசாங்கம் முடிவு செய்ய வேண்டிய விஷயம். என் தனிப்பட்ட கருத்தைக் கேட்டால், நீங்கள் சொல்வது சரி. அப்போது தான் இயக்குனர்கள் இன்னும் சிறப்பாகப் பணியாற்ற முடியும்.''

''அப்படியெனில், இப்போது பல நிகழ்ச்சிகள் -குறிப்பாக நாடகங்கள் – விறுவிறுப்பின்றி, போரடிப்பதற்கு இதுவும் ஒரு காரணமா?''

''எனக்கு தமிழ் தெரியாவிட்டால் கூட நான் எல்லா நாடகங்களையும் பார்க்கிறேன். தமிழ் நாடகங்கள் நன்றாகத்தானே இருக்கின்றன? ஆனாலும் நல்ல நாடகங்களின் ஸ்கிரிப்டுகள் நிறைய வருவதில்லை. எல்லா நாடகங்களுமே, சிறப்பாய் இல்லாமல்போய் விடுவதற்கு இதுவும் ஒரு காரணம்.''

''ஒரு சிலருக்கு நாடகங்களில் நடிக்க அடிக்கடி சான்ஸ் தரப்படுகிறதே, ஏதோ தில்லுமுல்லு நடப்பதாய்...?''

''இல்லை... நிச்சயம் இல்லை. ஒவ்வொரு நாடகத்திலும் மூன்றில் ஒரு பகுதி புதுமுகங்களாக இருக்கும்படி பார்த்துக் கொள்கிறோம்: சில ரோல்களுக்கு, சிலர் பொருத்தமாய் இருப்பார்கள் என்பதால் அவர்களுக்கு வாய்ப்புத் தரப்படுகிறது. அவ்வளவு தான். இதில் தில்லுமுல்லு கிடையாது.''

''ஞாயிற்றுக் கிழமைகளில் நல்ல படங்களை திரையிட்டால் என்ன? பல படங்கள் பொறுமையைச் சோதிப்பதாய் இருக்கின்றனவே!''

''எந்தத் தயாரிப்பாளரையும், டீ. வி. யில் போட படம் கொடுங்கள் என்று கேட்க மாட்டோம். கேட்கவும் கூடாது. தம் படங்களைத் திரையிட விரும்பும், பட உரிமையுள்ளவர்கள், அதற்கான விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து






அனுப்ப வேண்டும். அவை வரிசைப்படி நிலையத்தில் பதிவு செய்யப்படும். ஸ்கிரீனிங் கமிட்டி (உயர் அரசு அதிகாரிகள் இந்த கமிட்டி உறுப்பினர்கள்) ஒவ்வொரு படமாய்ப் பார்த்து, தரம் பிரிப்பார்கள். எந்தக் காரணம் கொண்டும் வரிசை மாறாது. (விதி விலக்கு: பண்டிகை தினங்கள், தேசிய விழா தினங்கள்.)

**''ஒரே நடிகரின் படங்கள் சில சமயம் அடுத்தடுத்து போடப்படுவதற்கு இதுதான் காரணமா?''**

''ஆமாம்.''

**''இந்திப் படத்தேர்வு எப்படி?''**

''அது மத்திய அரசால் செய்யப்படுவது. சன்மானம் அதிகம் தரப்படுகிறது. ('ல' கரத்தில் கொடுக்கிறார்களாம்.)

**''ஒளியும், ஒலியும் நிகழ்ச்சிக்கு எப்படிப் பாடல்களைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்?''**

''இதில் நாங்களும் தயாரிப்பாளர்களை அணுகுவோம். அவர்களும் தாமாகவே தருவதுண்டு. (ஒரு பாடல் காட்சிக்கு ரூ.250 தரப்படுகிறது.)

**''எங்களுக்கு வேண்டியது ஞாயிற்றுக்கிழமை மாலைகளில், வீட்டில் உட்கார்ந்து ரசித்துப் பார்க்க ஒரு நல்ல படம். இதற்கு என்ன செய்யப் போகிறீர்கள் நீங்கள்?''** (உதாரணமாக என்று சொல்லி நாம் சில படங்களைச் சொல்ல...)




''நல்ல படங்களின் தயாரிப்பாளர்கள் டி. வி.யில் படம் போட்டுவிட்டால், பிறகு தியேட்டரில் வசூல் குறையும் என்று நினைத்து, படங்களைத் தர முன் வருவதில்லை. அப்படியில்லாமல், டி. வி. யில் திரையிட அவர்களாகவே முன் வந்து தருகிற படங்கள் இப்போது திரையிடுகிறோமே இவைதான். எனவே நாங்கள் ஒன்றும் செய்ய முடியாதவர்களாய் இருக்கிறோம். நல்ல படங்கள் தர வேண்டும் என்று நினைத்து, வேறு ஏதாவது செய்யப் போய், கெட்ட பெயர் சம்பாதித்துக் கொள்ள நாங்கள் தயாராக இல்லை.''

**''இப்போது கூடத்தான் சினிமா திரையிடுவது பற்றி ஏகப்பட்ட புகார்கள்?''**

''யாரைப் பற்றித்தான் புகார் சொல்லாமல் இருக்கிறார்கள்? அரசியலில் இருப்பவர்கள், ஸ்கிரீனிங்கமிட்டியால் தேர்ந்தெடுக்கப் படாத படங்கள் சம்பந்தப் பட்டவர்கள் என்று பலர் குற்றம் சொல்லிக்கொண்டுதான் இருப்பார்கள். நாங்கள் ஸின்ஸியராய் இருக்கும் போது, எதற்காக அவற்றை லட்சியம் செய்ய வேண்டும்?''

**''திறமையுள்ள தனியார் நிறுவனங்களை, பயன்படுத்தி நீங்கள் ஏன் சுவையான நிகழ்ச்சிகளை வழங்கக் கூடாது?''**

''திறமையுள்ள எவரையும் ஊக்கப்படுத்த —அவர்களைப் பயன்படுத்திக் கொள்ள நாங்கள் தயார். அவர்கள் தங்கள் ஸ்கிரிப்டுகளை அனுப்பட்டும். நன்றாக இருந்தால், அவர்களுக்கு எல்லா விதத்திலும் உதவுவதற்கு நாங்கள் ரெடி. நல்ல நிகழ்ச்சிகளைத் தருவதற்குத் தானே நாங்கள் இருக்கிறோம்.''

பேட்டி : சந்திரமௌலி
கலாமூர்த்தி

அட்டைப்படத்தில் :
டாக்டர்
**K. சத்யநாராயணன்**
**சந்திரிகா**
**ராகவேந்தர்**
**தீபக்**

வண்ணப்படம்:
**ஏ. வி. பாஸ்கர்**

---

தெய்வம், தில்லானா மோகனாம்பாள், ரிக்ஷாக்காரன் - இந்த மூன்று திரைப் படங்களுக்கும் உள்ள தொடர்பு என்ன?

விடை : சென்னை டி. வி. 1975 ஆகஸ்ட் 15—ம் தேதி ஆரம்பிக்கப்பட்டது. தெய்வம் சென்னை டி.வி. யில் திரையிடப்பட்ட முதல் தமிழ் சினிமா அடுத்தது தி. மோகனாம்பாள். மூன்றாவது ரிக்ஷாக்காரன்.

தகவல்: செளம்யா.









# இன்சாட் 1 பி பேசுகிறது

"ஹலோ... ஹலோ கேட்கிறதா? நான்தான் இன்சாட் 1—பி சாட்டிலைட் (விண்வெளி கலம்) பேசுகிறேன். நான் இப்போது பூமியிலிருந்து 36,000 கி. மீட்டர் உயரத்தில் பூமியுடன் சேர்ந்து சுற்றிக் கொண்டிருக்கிறேன். நான் இந்த வானத்தில் வந்து சஞ்சரிக்க இந்திய அரசுக்கு 70 கோடி ரூபாய் செலவாயிற்று. எனக்கு முன்னால் என் அண்ணன் (இன்சாட் 1—ஏ) இங்கு வந்தான் சரியான சத்து (மின் சக்தி) கிடைக்காததால் அவன் இறந்து போனான். சரி சரி. அந்த கதையெல்லாம் இப்போது எதற்கு: காதைக் கொண்டு வாருங்கள். அடுத்த வருடம் எனக்குத் தம்பி (இன்சாட் 1—சி) ஒருவன் பிறக்கப் போகிறான்.

''குட் ஈவினிங் வ்யூவர்ஸ் என்று ஒன்பதேகால் மணிக்குத் தேசிய நிகழ்ச்சியின் ஆரம்பத்தில் டெல்லிப் பெண்மணி டெலிவிஷனில் தோன்றும்போது 'அட அறுக்க ஆரம்பிக்கப் போறாங்க' என்று படக்கென்று டி. வியை அணைத்து விடுகிறீர்களே! இது நியாயமா? அந்தச் சமயத்தில் இருந்து தான் என் வேலை துவங்குகிறது. டெல்லி ஸ்டேஷனில் உள்ள காமிராவின் வழியாக டிரான்ஸ்மிட்டருக்குச் சென்று பிறகு சின்ன 'மைக்ரோ வேவ்' தொடர்பு மூலமாக சிக்கந்தரா (டெல்லியிலிருந்து 40 கி. மீ.) என்ற இடத்திற்கு அனுப்பிப் பின்னர் அங்கிருந்து அந்த ஒளி — ஒலி குறியீடுகள் மின்காந்த அலைகளாக மாற்றப்பட்டு நிகழ்ச்சிகள் என்னை வந்து அடைகின்றன. என்னிடம் இருக்கும் முக்கியமான ஒரு பாகமான ''டிரான்ஸ்பாண்டர்'' என்ற கருவி அந்த அலைகளைப் பெற்று இந்தியா முழுதும் உள்ள 125 குறைந்த சக்தி கொண்ட ஒளிபரப்பு நிலையங்களுக்கு என்னுடைய ''ஆண்டனா'' மூலம் தூவி விடுகிறது. பிறகு உங்கள் ஆண்டனா அதைப்பெற்று ''காச் மூச்'' என்று இந்தி நிகழ்ச்சிகளை ஒளிபரப்ப அவை பிடிக்காமல் டி.வியை நீங்கள் மூடுவது வேறு கதை.

தற்சமயம் எனது தாய் வீடு டெல்லி தான். அங்கிருந்து வரும் நிகழ்ச்சிகளைத் தான் என்னால் ஒளிபரப்ப முடியும். இன்னும் சிறிது காலத்துக்குப் பிறகு பம்பாய் சென்னை கல்கத்தா போன்ற இடங்களிலிருந்தும் என் தம்பியையோ அல்லது எனது சந்ததிகளையோ தொடர்பு கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

வானத்தில் நான் எந்த விதத்தில் சுற்றினாலும் என்னுடன் இணைக்கப்பட்டிருக்கும் 'ஆண்டனா' எப்போதும் பூமியைத் தான் பார்த்துக் கொண்டிருக்கும். என்னைப்போல இன்னும் இரண்டு பேர் இருந்தால் உலகத்தையே வளைத்துப் போட்டு விடலாம், எப்படிப்பட்ட பருவ நிலை இருந்தாலும் நான் அனுப்பும் ஒலி ஒளிகள் தெளிவாக உங்களை, அடையும்.

தற்சமயம் நான் இரண்டு பாண்டுகளில் நிகழ்ச்சிகளை அனுப்பி வருகிறேன். 'எஸ்' பாண்ட் நிகழ்ச்சிகளைத் தான் நீங்கள் பார்க்கிறீர்கள். 'சி' பாண்ட் நிகழ்ச்சிகள் பெரும்பாலும் விவசாய சம்பந்தப்பட்டவை. டி. வி. ஆர். ஓ. (TVRO) என்ற கருவியின்

கொடைக்கானலில் டி.வி. ஒளிபரப்பு நிலையம்.
மற்ற இடங்களில் குறைந்த சக்தி கொண்ட ஒளிபரப்பு நிலையங்கள்





மூலமாக ஆந்திராவிலும் கர்நாடகாவின் சில பகுதிகளிலும் என்னுடைய இந்த 'எஸ்' பாண்ட் நிகழ்ச்சிகளைக் கிராமத்து விவசாய மக்கள் நேரடியாகப் பெற்றுப் பார்த்து வருகிறார்கள்.

இந்த ஒளிபரப்போடு என் வேலை முடிந்து விடவில்லை. தபால் தந்தி இலாக்காவும் வானிலை இலாக்காவும் என்னைப் பயன் படுத்திக் கொண்டிருக்கின்றனர். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. என்னுடைய ஆயுள் ஏழு வருடங்கள் தான்.

## வாய்ப்பை இழந்த தஞ்சாவூர்

தமிழகத்தில் ஆறு இடங்களில் குறைந்த சக்தி கொண்ட ஒளிபரப்பு நிலையங்களை அமைக்கப் போகிறார்கள். 1984-ன் இறுதியில் அவை செயல்படத் துவங்கும். (தேர்தலுக்கு முன்னால் என்றும் சொல்லலாம்.) அந்த ஆறு இடங்கள்: வேலூர், சேலம், கும்பகோணம், திருச்சி, கோயம்புத்தூர், நெய்வேலி. கும்பகோணத்திற்குப் பதிலாகத் தஞ்சாவூரில்தான் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அங்கு சரியான இடவசதி கிடைக்காததால் கும்பகோணத்திற்கு அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது. இந்த இடங்களில் 90 அடி உயரத்திற்கு 'டவர்கள்' கட்டப்பட்டு அவற்றின் மேல் ஆண்டனா வைக்கப்படும். கிட்டத்தட்ட 25 கி. மீ. தொலைவு வரை ஒளிபரப்பு இருக்கும் என்று சொல்லப்படுகிறது. அரசியல்வாதிகள் திருநெல்வேலியிலும் வரும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அங்கு தற்சமயம் நிச்சயமாக இல்லை என்று சொல்லலாம். இந்த ஒவ்வொரு நிலையங்களையும் கட்ட 25 லட்ச ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்படுகிறது. ஆனால் இந்த ஒளிபரப்பு மூலம் பயன் அடையப் போகிற மக்களுக்கு ஒரு வருத்தமான செய்தி. சென்னை தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை அவர்கள் பார்க்க முடியாது. காரணம் சென்னையிலிருந்து 'மைக்ரோ வேவ்' மூலமாக இவை இணைக்கப்படப் போவதில்லை. அப்படிச் செய்வதென்றால் எக்கச்சக்கமான கோடி ரூபாய் செலவாகும் ஆதலால் டெல்லியிலிருந்து சாட்டிலைட் மூலம் வரும் நிகழ்ச்சிகளைத் தான் பார்க்க முடியும். 'ஐயோ, போர்' என்கிறீர்களா: அங்கிருந்தும் சமயத்தில் பல நல்ல நிகழ்ச்சிகள் வருகின்றனவே?

## கொடுத்து வைத்த கோடைக்கானல்

கோடைக்கானல், செயின்ட் மேரிஸ் சாலையில் 'கோக்கர்ஸ் வாக்'கையும் கடந்து முதுகும், கால்களும் வலிக்க இன்னும் சற்று உயரத்துக்குச் சென்றால் இடது பக்கத்தில் யூகலிப்டஸ் மரங்களிடையே கட்டிடம் ஒன்று எழும்பிக் கொண்டிருப்பது தெரிகிறது. அதன் பக்கத்தில் நான்கு இடங்களில் பெரிய பள்ளங்கள் தோண்டிக்கொண்டிருக்கிறார்கள். ஊசியாய் விழும் மழைத் துளிகளும், குளிரும் சேர்ந்து உடலை நடுங்க வைத்துக் கொண்டிருக்கின்றன. நிமிடத்திற்கு ஒரு முறை மேகக் கூட்டங்கள், நம்மிடம் கண்ணாமூச்சி ஆடிவிட்டுப்போகின்றன. இந்தச் சூழ்நிலைகளிலும், பரபரப்பாக, கோடைக்கானல் டீ. வி. நிலையத்துக்கான வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. 1981-ஆம் ஆண்டு முதலே, 'இதோ வரப் போகிறது' என்று சொல்லப்பட்டுக் கொண்டிருந்த இந்த 'டீ. வி. நிலையம் இன்னும் 9 மாதங்களில் செயல்படத் துவங்கும். 1983-ல் தான் இடம் தேர்வு செய்யப்பட்டதாம். கலாக்ஷேத்திரா நிறுவனத்திடமிருந்தும், எட்டயபுரம் மகாராஜாவிடமிருந்தும் நான்கு ஏக்கர் நிலம் வாங்கப்பட்டிருக்கிறது. ஏழாயிரம் அடி உயரமுள்ள கோடைக்கானல் மலையில் 450 அடி உயரத்துக்கு 'டவர்' அமைக்கப்படவிருக்கிறது. சுமார் ஒரு கோடி ரூபாய் செலவாகுமாம். கோடைக்கானலிலிருந்து 180 கி மீட்டர் சுற்றளவுக்கு ஒளிபரப்பப்படும் நிகழ்ச்சிகள் தெரியும். இங்கு வைக்கப்படவிருக்கும் டிரான்ஸ்மிட்டர்கள் இந்தியாவிலேயே தயாரானவை. சென்னையிலிருந்து 'மைக்ரோ வேவ்' தொடர்பு மூலமாக கோடைக்கானல் டீ. வி. ஒளிபரப்பு நிலையம் (Relay Centre) செயல்படும். ஆகையால் சென்னை நிகழ்ச்சிகளைப் பார்க்க, மதுரை மாவட்ட மக்களுக்கும் வாய்ப்பு உண்டு. தற்சமயம் சென்னைக்கும் மதுரைக்கும் இடையே தபால்-தந்தி மைக்ரோவேவ் தொடர்பு இருக்கிறது. ஆனால் தொலைக்காட்சிக்கென்று தனியாக ஒரு மைக்ரோவேவ் தொடர்பு ஏற்படப் போகிறதாம். இதற்காகச் சென்னைக்கும், கோடைக்கானலுக்கும் இடையே 12 மைக்ரோ வேவ் டவர்கள் கட்டப்பட இருக்கின்றன' இதற்கு 47 லட்ச ரூபாய் செலவாகும்.

## கோவையில் தெரியுமா?

கோடைக்கானல் டவரிலிருந்து ஒளி பரப்பப்படும் நிகழ்ச்சிகள் கோவையில் தெரியுமா என்று கேட்டுள்ளார்கள் திருப்பூரிலுள்ள வியாபாரிகள் சங்கத்தினர். இது பற்றிச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் விசாரித்தோம். கோடைக்கானலுக்கும்



கோவைக்கும் இடையே பழனி மலை இருப்பதால் அதைக் கடந்து ஒளிபரப்பு கோவையை அடைவது சாத்தியம் இல்லை என்கிறார்கள். கோவையில் இயங்கப் போகும் குறைந்த சக்தி கொண்ட (Low Power) ஒளிபரப்பு நிலையம் டில்லி தேசிய நிகழ்ச்சிகளை அளிக்கும். அத்துடன் திருப்தி அடையவேண்டியதுதான்.

நீலகிரி மாவட்டத்திலும், கன்னியாகுமரி மாவட்டத்திலும், திருநெல்வேலியின் ஒரு பகுதியிலும், (தூத்துக்குடி திருச்செந்தூர் போன்றவை.) ராமநாதபுரம் மாவட்டத்தில் பெரும் பகுதியிலும் (விருதுநகர் அருப்புக் கோட்டை நீங்கலாக) கோடைக்கானல் ஒளிபரப்பு தெரிவதற்கு வாய்ப்புக்கள் இல்லை. முழுக்க முழுக்கப் பயன் பெறப் போவது மதுரை மாவட்டமும், திருச்சியின் ஒரு பகுதியும் மட்டுமே. இந்த ஒளிபரப்பு நிலையத்துக்கான இடத்தை இரண்டு லட்சம் ரூபாய் கொடுத்து மத்திய அரசுக்காக, மாநிலஅரசு வாங்கிக் கொடுத்திருக்கிறதாம். இதற்கு வேண்டிய மின்வசதி வத்தலகுண்டிலிருந்தும், தேனியிலிருந்தும் கிடைக்கும்.

## தாமதம் ஆகுமா?

சென்னைக்கும் கோடைக்கானலுக்கும் இடையே 12 மைக்ரோவேவ் டவர்கள் அமைப்பதற்குத் தாமதம் ஆனால், சாட்டிலைட்டிலிருந்து நிகழ்ச்சிகளைப் பெற்றுக் கோடைக்கானல் டி.வி. நிலையம் இயங்க ஆரம்பிக்கும்.

## ஸ்டுடியோ வருமா?

கோடைக்கானலில் நிகழ்ச்சிகள் தயாரிக்கும் ஸ்டுடியோவும் கட்டப்படுமா என்று விசாரித்ததற்கு, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கூறியதாவது:

'எந்தக் காலத்திலும், கோடைக்கானலில் ஸ்டுடியோ கட்டும் திட்டம் இல்லை. சென்னை ஸ்டுடியோவில் தயாரிக்கப்படும் நிகழ்ச்சிகள் அல்லது, சென்னையிலிருந்து ஒளிபரப்பப்படும் நிகழ்ச்சிகள் தான் கோடைக்கானல் டவரிலிருந்தும் ஒளிபரப்பப்படும்.

## கோடைக்கானலில் தற்போது...!

டவரின் நான்கு கால்களையும் ஏற்றுக் கொள்ளப் பெரும் பள்ளங்கள் தோண்டப்பட்டிருக்கின்றன) டிராஸ்மிட்டர் வைக்கும் கட்டிடம் கட்டப்பட்டு முடியும் தருவாயில் இருக்கிறது. ஒன்பது மாதங்களுக்குள் நிச்சயமாக முடித்து விடுவோம் என்கிறார்கள் சம்பந்தப்பட்ட அதிகாரிகள்.

-பிரியன்

### சில உதிரித் தகவல்கள்

- டெலிவிஷன் டவர் உயர்ந்த இடத்தில் அமைக்கப்பட்டால் மிக அதிக சுற்றளவில் தெரியும். உதாரணமாக, சென்னையில் உள்ள டி.வி. டவரை ஏலகிரி மலையில் அமைத்திருந்தால், தென் ஆற்காடு, வட ஆற்காடு மக்களுக்கும் டி.வி. பார்க்க வாய்ப்பு கிடைத்திருக்கும். ஸ்டுடியோவைச் சென்னையிலேயே வைத்திருக்கலாம். டவருக்கும், ஸ்டுடியோவிற்கும் இடையே ஒரு மைக்ரோவேவ் தொடர்பு தான் தேவை.
- ஆந்திரா, கேரளா, கர்நாடகா அரசு கொடுக்கும் ஆதரவு தமிழ்நாடு அரசிடம் இருந்து கிடைக்கவில்லை என்கிறார்கள். தஞ்சாவூரில் குறைந்த சக்தி கொண்ட நிலையம் அமைக்கத் தமிழக அரசு முயன்றிருந்தால் இடம் பார்த்துக் கொடுத்திருக்கலாம்.
- சென்னையில் உள்ள டி.வி. டவர் கடற்கரை ஓரமாக இருப்பதால் கடற்பகுதியில் ஒளிபரப்பு வீணாகப் போவதாகச் சிலர் சொல்கிறார்கள். அது தவறு. டவரின் மேலிருக்கும் ஆன்டனா மூன்று பக்கம் தான் வைக்கப்பட்டிருக்கிறது. கடற்கரைப் பக்கம் ஒளிபரப்பு செல்வதற்கு வாய்ப்புக்கள் கிடையாது.
- சென்னைக்கும் டெல்லிக்கும் இடையே 'மைக்ரோ வேவ்' மூலமாகத்தான் தொலைக்காட்சி தொடர்பு நடைபெறுகிறது.
- சென்னை டி.வி. ஒளிபரப்பு நிகழ்ச்சிகள் 65—லிருந்து 70 மெகாவாட் வேகத்தில் மின்காந்த அலைகள் மூலம் வானத்தில் பயணப்பட்டு நம் வீட்டு டி.வியை அடைகின்றன.
- உங்கள் வீட்டு டி.வி. திரையில் நிகழ்ச்சிகள் இல்லாத போதுகோடுகளாக ஓடிக் கொண்டிருக்கும். 625 கோடுகள் தெரிந்தால், நிகழ்ச்சிகள் முழுதாக அழகாகத் தெரியும். (எண்ணிப் பார்க்க முடியுமா?)
- சென்னை டவரின் உயரம் 390 அடி.



# மனவளர்ச்சிப் பஞ்சம் + கற்பனை வறட்சி = டி.வி.

எழுத்தாளர் தீபம் நா. பார்த்தசாரதி சொன்னார்:

"டெலிவிஷனில் திரையிடப்படும் படங்களைத் தணிக்கை செய்யும் குழுவில் இருந்த போது, நான் புரிந்து கொண்ட பல விஷயங்கள் மிகவும் சுவாரசியமானவை. அங்கே பரந்த மனப்பான்மைக்குப் பஞ்சம். கற்பனை' உணர்வு பூஜ்யம். அங்கே, ஒவ்வொரு தயாரிப்பாளருக்கும், முக்கிய நடிகர்களுக்கும், ஒரு 'லாபி' இருப்பது போலத் தோன்றும். படங்களைத் திரையிட அனுமதிக்க, காப்பி, சிற்றுண்டி கொடுத்து, அவசர அவசரமாக மூன்று பேரிடம் கையொப்பம் வாங்குவதில் தான் குறியாய் இருப்பார்கள். 'ரிமார்க்ஸ்' என்ற பேரில் காரசாரமாக ஏதும் எழுதினால் இவர்களுக்குப் பிடிக்காது. தவிர்க்க முயலுவார்கள். ஒருமுறை ஓர் அரசியல் கட்சியின் சின்னமே திரும்பத் திரும்ப வருகிற மாதிரி எடுக்கப்பட்ட ஒரு திரைப் படத்தை, தேர்தல் சமயத்தில் திரையிட அனுமதிக்கு வைத்தார்கள். தேர்தல் சின்ன வர்ணனை அந்தப்



படத்தின் டைட்டில் பாடலிலேயே இருந்தது. "சின்னம் வருகிற பகுதிகளை நீக்கி விட்டுத்தான் திரையிடுவது நியாயம் என்று தைரியமாக 'குறிப்பு' எழுதினேன். அதற்குப் பின் என்னைக் கூப்பிடுவதையே நிறுத்தி விட்டார்கள்.

பொதுவாக நம் டி. வி.யில் பிரமாதமான படங்களைக் காண முடிவதில்லை. நல்ல கதை அம்சமும், தரமும் உள்ள படங்களை இவர்கள் ஏன் காட்டக் கூடாது? ஒருவேளை 'லாபி'க்கு அதனால் லாபம் குறையலாம். ஏதோ 36, செளரிங்கி லேன் போட்டு, டெல்லி தூர்தர்ஷன் புண்ணியம் கட்டிக் கொண்டது. அரசியல் பிரமுகர்களையும், பிரபலஸ்தர்களையும் திருப்திப்படுத்தவே டி.வி. இயங்குகிறதோ என்ற சந்தேகம் வரும்படி நிகழ்ச்சிகளில் ஒரே வறட்சி! திறமைசாலிகளை டி.வி. நிலையத்தின் பக்கமே வரவிடாமல் செய்யும் முயற்சி சென்னையில் பிரமாதமான ஏற்பாட்டுடன் நடக்கிறதோ என எண்ணுவதற்கே ஆதாரங்கள் அதிகம்.

பேட்டி: நமது நிருபர்

---

## முதன் முதலில்

1936–ஆம் ஆண்டில் வெளிப்புறக் காட்சிகள் ஒரு மைல் தூரம் வரை ஒளிபரப்பப்பட்டது. 1939–ஆம் ஆண்டில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் பதவியேற்றது ஒளிபரப்பப்பட்டது.

1937–ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் நடைபெற்ற ஆறும் ஜார்ஜ்மன்னரின் முடிசூட்டு விழா நிகழ்ச்சிகளை பி. பி. ஸி. ஒளி பரப்பியது.

1947–ஆம் ஆண்டில் பிலடெல்பியாவில் கலர் டெலிவிஷன் காட்டப்பட்டது. இதே ஆண்டில் நியூயார்க் ஆஸ்பத்திரி ஒன்றில் நடைபெற்ற ஸர்ஜரி ஒன்றை அமெரிக்க டாக்டர்களும் மாணவர்களும் பார்த்தார்கள்.

ஆதாரம்: 1958–லேயே எஸ். எஸ். இராமசாமி எழுதிய 'டெலிவிஷன்' தமிழ் நூல்.







# ஒரு கற்பனை எதிரொலி



**வணக்கம்** நேயர்களே! இந்த வார எதிரொலி நிகழ்ச்சியை நேயர்களுக்கு ஒரு நல்ல செய்தியைச் சொல்லி ஆரம்பிக்கலாம். அடுத்த வாரம் தமிழ் நாடகம் கிடையாது.

சரி, முதல்ல 'டெக்னிகல் கேள்விகளைப் பார்க்கலாமா?

மாம்பலத்தைச் சேர்ந்த முரளி இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறார். ''எங்கள் வீட்டு டி.வி.யில் படங்களெல்லாம் தலைகீழாகத் தெரிகின்றன. இதற்கு என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கிறார்.

இதுபோன்ற தவறுகள் சில செட்டுகள்ல ஏற்படலாம். இதுக்கு என்ன வழின்னு, ஒண்ணு டி.வி.யைத் தலைகீழா வச்சிப்பார்க்கணும். இல்ல, நீங்க தலைகீழா நின்னு பார்க்கலாம்.

அடுத்தது, ட்ரிப்ளிகேனைச் சேர்ந்த திரு. ஹரி எழுதியிருக்கிறார். அவர் டி.வி. செட்டில், அலை அலையா தெரியுதுன்னு சொல்றார்.

அவர் ட்ரிப்ளிகேன்ல இருப்பதால் தான் இது ஏற்படுதுன்னு நெனைக்கிறேன். அவர் பீச் இல்லாத வேறு பகுதிக்கு வீட்டை மாற்றிக் கொள்வது நல்லது. சரி... சென்ற வார நிகழ்ச்சிகளைப் பார்க்கலாமா?

சென்ற வார இளந்தென்றல் நிகழ்ச்சியைப் பற்றிய கடிதம். ''சென்ற வாரம் இளந்தென்றல் நிகழ்ச்சியில் திரு. கு. அ. பெரியசாமி வழங்கிய பல்சுவை நிகழ்ச்சி மிகவும் அற்புதமாக இருந்தது. அந்த நிகழ்ச்சியை மறு ஒளிபரப்பு செய்யவும்.'' இதைச் சொல்றவங்க கு. அ. பெ. கோபால், கு. அ. பெ. வனிதா, கு. அ. பெ. கனிதா, கு. அ. பெ. தனபால் ஆகியோர்.

அடுத்து சென்ற வாரம் கொஞ்சம் நில்லுங்கள் பற்றி. ''சென்ற வாரம், ''துன்பத்தைக் கண்டு சிரிப்பது எப்படி?'' என்பதைப் பற்றி வழங்கப்பட்ட கலந்துரையாடல் மிகவும் நன்றாக இருந்தது. இனி தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்துச் சிரிக்கப் பழகிக் கொள்வோம்.''

சென்ற வாரத் தமிழ்த் திரைப்படம் பற்றிய கடிதம். ''சென்ற வாரம் நீங்கள் ஒளிபரப்பிய 'காளிதாஸ்' தமிழ்த் திரைப்படம் பார்த்தோம். அது 1935—ல் வெளிவந்த படம் என்பதை அறிந்தோம். அதற்கு முன்னால் வந்த படங்களையும் ஒளிபரப்பவும்'' என்று கேட்டிருக்கிறார்.

இந்த நேயரின் கடிதத்துக்கு மிக்க நன்றி. ஆனால் இவரது ஆசையை நிறைவேற்ற முடியாததற்கு மன்னிக்கவும். ஏனென்றால் தமிழில் வெளியான முதல் பேசும் படமே காளிதாஸ்தான். சரி...இந்த நேரத்தில் அடுத்த வாரத் திரைப்படத்தைப் பற்றிச் சொல்லி விடுவோம். அடுத்த வாரம் மிஸ்டர் டைட் அண்ட் லூஸ்.

நன்றி நேயர்களே, மீண்டும் அடுத்த வாரம் சந்திப்போம். வணக்கம்!

-உஷா மூர்த்தி

---

**எச்சரிக்கை**

ரசிகப் பெருமக்களுக்கு ஒரு எச்சரிக்கை. நமது நிருபர் துப்பறிந்து, டி.வி.யில் திரையிடப்படவிருக்கும் சில தமிழ்ப் படங்கள் லிஸ்ட் தருகிறார். நீங்கள் கொஞ்சம் நஞ்சம் நல்லது செய்திருந்தால், இவற்றில் ஒரு சிலவற்றைப் பார்க்காமல் தப்பிக்க வாய்ப்பு உண்டு.



- சொந்தங்கள்
- காலம் ஒரு நாள் மாறும்
- சிரிசிரி மாமா
- காலமடி காலம்
- சூலம்
- திருப்பங்கள்
- கடவுளின் தீர்ப்பு
- அவர் எனக்கே சொந்தம்
- நீதிக்கு முன் நீயா? நானா?
- நிலவே நீ சாட்சி
- கஸ்தூரி விஜயம்
- சபதம்

# இப்பொழுது உங்களுக்காகவே சாலிடெரின் அருமை மிக்க உலக தரம் பொருந்திய கலர் டிவி: சாலிடெர் CTS 603!

கலர் டிவியின் முக்கியமான அம்சம் அதன் படத்தோற்றம். படத்தோற்றத்தை நிறைவு படுத்த நல்லதொரு பிக்சர் டியூப் மட்டுமின்றி, கேடுகளில்லாத உதிரிபாகங்களைக் கொண்டு அதிநவீன தொழில் நுணுக்கத்துடன் தயாரிப்பது மிகவும் அவசியம் எல்லாவற்றுக்கும் மேலாக, ஒரு கலர் டிவியில் கூடுதலான சிறப்பு அம்சங்களும், கண்கவர் தோற்றமும் இருத்தல் வேண்டும். இப்போது, உலகத்தரம் பொருந்திய அருமை மிக்க சாலிடெர் கலர் டிவி CTS 603 எவ்வகையில் ஒரு சிறப்புமிக்க டிவியை வழங்க உறுதியளிக்கிறது என்பதைக் காண்போம் :

**1** சாலிடெர் எவ்வாறு உலகத் தரத்தை உறுதியளிக்கிறது ?

உலகெங்கும் புகழ்பெற்ற கலர் டி.வி.களில் உபயோகப்படுத்தப்படும் கேடில்லா உதிரிப் பாகங்களைக் கொண்டு சாலிடெர் கலர் டி.வி. யும் தயாரிக்கப்படுவதன் மூலம், இந்திய கலர் டி. வி. தயாரிப்பில் ஒரு புதிய வரையறையை சாலிடெர் வகுக்கின்றது. உதாரணமாக, சாலிடெர் கலர் டி. வி., அதி நவீன உதிரிபாகங்களான லைன் புட் ட்ரான்ஸ்ஃபார்மர் (LOT), ஸ்விட்ச் மோட் பவர் சப்ளை (SMPS), கலர் IC கள், பிரா அவுட்தெற்கு ஜெர்மனியின் மாட்யூல் மற்றும் பிலிப்ஸ் உதிரி பாகங்கள் போன்ற சிறந்த பாகங்களைக் கொண்டு தயாரிக்கப் படும். இதனால், நீங்கள் சாலிடெர் ஒரு உலகின் தலைசிறந்த கலர் டி.விகளுக்கு நிகரான - கலர் டி. வியை அளிக்குமென உறுதி கொள்ளலாம்.

**2** சாலிடெர் எவ்வாறு துல்லியமான, தெளிவான படத் தோற்றத்திற்கு உறுதியளிக்கிறது ?

சாலிடெர் எப்போதுமே அதன் துல்லியமான படத்தோற்றத்திற்குப் பிரசித்தி பெற்றது. இப்போதும், சாலிடெர் புதிய கலர் டி. வி. வாங்கிய பெயருக்கேற்றாற்போல் அதன் அதி நுண்மை கொண்ட (High resolution). உடன் இயங்கும் (Quick start). பிளாக் ஸ்ட்ரைப் (Black stripe). இன்லைன் (In–line), பிக்சர் டியூப்பின் உதவியால், துல்லியமான. தெளிவான இயற்கை

**4** சாலிடெர் எவ்வாறு மாசற்ற ஒலித்திறனுக்கு உறுதியளிக்கிறது?

எப்போதுமே, சாலிடெரில் அதன் ஒலித்திறன் ஒரு மேலான அம்சமாகும். அதே மாதிரி சாலிடெரின் புதிய கலர் டி.வி.யிலும் மாசற்ற ஒலித்திறனை நீங்கள் உறுதியாகக் கேட்கலாம். மேலும், அநாவசியச் சப்தங்களை உள்ளே புகாதவாறு, இதில் அடங்கியுள்ள செராமிக் ஃபில்டர் கொண்ட சப்த அலை சீர்படுத்தும் கருவி (Sound Processing unit) தடுத்து நிறுத்தி, ஒலிபரப்பப்படும் ஒலியை மட்டுமே சேர்த்து அளிக்கும். இவையெல்லாம் மிகச் சிறிய விஷயங்களாகத் தோன்றலாம். ஆனால், இம்மாதிரி ஒவ்வோர் சிறிய விவரங்களை நிறைவு செய்வதால் தான் சாலிடெர் இவ்வளவு முன்னேற்றம் அடைந்துள்ளது.

**5** சாலிடெர் எவ்வாறு ஒரு வருங்கால வளர்நிலையுள்ள டிவியை உறுதியளிக்கிறது ?

உங்களுடைய கலர் டி. வி., இன்றைய நிலைகளுக்கு மற்றுமில்லாமல் நாளையத் தேவைகளையும் பூர்த்தி செய்ய வேண்டும். ஏனெனில், நாளை, பன்னலை ஒளிபரப்பு (Multi Channel) ஏற்படுத்தப்படும்போது, உங்களுடைய கலர் டி.வியை அதற்காக மாற்றிக் கொண்டிருக்க முடியாது. அதனால்தான் சாலிடெர் கலர் டி. வி. உலகம் முழுவதும் ஒளிபரப்பப்படும் VHF & UHF ரேஞ்சுகளில் கிடைக்கும் அலைகளையெல்லாம் சேர்க்கக் கூடிய ஆற்றலுடன் அமைக்கப்பட்டுள்ளது. அதன் முன் கூட்டியே நிச்சயிக்கப்பட்டுள்ள 8 அலை தேர்ந்தெடுக்கும்

**7** சாலிடெர் எவ்வாறு சீரான மின்சார சக்தியை உறுதியளிக்கிறது?

சாலிடெர் கலர் டி.வி. அதிகமான அல்லது குறைந்த மின்சார அழுத்தங்களிலும் (Low & high Voltage Fluctuations)– வோல்டேஜ் ஸ்டெபிலைசரே இல்லாமல் வேலை செய்யும். நம்ப முடியாமல் இருக்கலாம். ஆனால் உண்மை! ஏனெனில் சாலிடெர் கலர் டி.வி.யில் உள்ள ஸ்விட்ச் மோட் பவர் சப்ளை (SMPS) சீரான, தடங்கலில்லா மின்சக்தியை அளிக்கும். மேலும், எல்லாவிதமான மின்சார குறைபாடுகளுக்கும் ஏற்றவாறு சாலிடெர் கலர் டி.வி. வடிவமைக்கப்பட்டுள்ளது.

**8** சாலிடெர் எவ்வாறு நேர்த்தியான வடிவமைப்பிற்கு உறுதியளிக்கிறது?

சாலிடெர் கலர் டி. வி. நயத்துடன் கலைமாக இயக்கக்கூடிய உறுப்புக்களைத் திறம்படச் சேர்த்து உருவாக்கப்பட்டுள்ளது. இதற்கு நேர்த்தியான பலமான ஹை இம்பாக்ட் பாலிஸ்டைரீன் முகவமைப்பு, நவீனமான புஷ் பட்டன், செலக்டார் போன்ற பாகங்கள் உதாரணமாகும். சாலிடெரின் முழுத்தோற்றமைப்பு உங்கள் ரசனையை வெளிப்படுத்தும் வகையில் மிக நவீனமாகவும், நேர்த்தியாகவும் உருவாக்கப்பட்டுள்ளது.

**9** சாலிடெர் எவ்வாறு அருமை பொருந்திய கலர் டிவிக்கு உறுதியளிக்கிறது?

நீங்கள் சாலிடெர் கலர் டி. வி. எவ்வாறு ஒரு அருமை பொருந்திய டி. வி. என்று அறிய

வண்ணங்கொண்ட படங்களை அளிக்கும். மேலும் சாலிடேர் கலர் டி.வி.யில் நடுக்கமில்லாத, தெள்ளத் தெளிவான படத்தையளிக்க இதில் அலை கட்டுப்படுத்தும் தானியங்கும் கருவி (AFC) பொருத்தப்பட்டுள்ளது. ஒரு சேனலை (Channel) தேர்ந்தெடுத்து ட்யூன் செய்தபின், இக்கருவியின் உதவியால் படத்தோற்றத்தை அதன் உச்ச நிலையில் பூட்டி வைக்கலாம். இவ்வாறுதான் சாலிடேர் துல்லியமான, தெளிவான, காலவேளையிலும் நன்கு தெரியக்கூடிய படத்தோற்றத்தை உறுதி செய்கிறது.

## 3 சாலிடேர் எவ்வாறு ஒரு ஹைஃபை கலர் டிவியைத் தருவதற்கு உறுதியளிக்கிறது ?

புதிய சாலிடேர் கலர் டி.வி. பலவீனமான அலைகளையும் ஈர்க்கக் கூடிய தன்மையுடன் உருவாக்கப்பட்டுள்ளது. சாலிடேர் கலர் டி.வி.யில் குறைந்த சப்த கருவி (low-noise MOSFET devices) ஒன்று பொருத்தப்பட்டுள்ளதால், அது குறைந்த நிலை அலைகளையும் ஈர்த்து ஒளிபரப்பும். மேலும், உங்கள் பார்வைக்குத் தகுந்த வகையில் துல்லியம், பிரகாசம், வண்ணம் போன்றவற்றைச் சரிசெய்து கொள்ளப் பிரத்தியேகமான கண்ட்ரோல்கள் (Rotary controls) அமைக்கப்பட்டுள்ளன. சுருக்கமாகச் சொன்னால்; உங்கள் சாலிடேர் கலர் டி. வி. ஒரு சக்தி வாய்ந்த, முழுநிறைவான கலர் டி.வி.யாக இருக்கும்.

(Channel Selector) கருவியின் உதவியால் பின்வரும் அலைகளை அதன் பேண்டுகளில் தேர்ந்தெடுக்க முடியும். VHF பேண்ட் I அலைகள் 2 முதல் 4 வரை VHF பேண்ட் III அலைகள் 5 முதல் 12 வரை VHF பேண்ட்– அலைகள் 21 முதல் 69 வரை. மேலும் உங்கள் வி.சி.ஆர். (VCR) நிகழ்ச்சிகளை சாலிடேர் கலர் டி.வி. திரையிட எடுத்துக்காட்ட தனி ஸ்விட்ச் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

## 6 சாலிடேர் எவ்வாறு தடங்கலில்லா டிவியை தர உறுதியளிக்கிறது?

கலர் டி.வி.க்களில் நெருப்பு, புகை போன்ற இடர் விபத்துக்கள் ஏற்படுவதின் முக்கிய காரணம் அவைகளின் தரமற்ற உதிரிபாகங்களாகும். ஒரு கலர் டி. வி. வெகு நல்ல முறையில் எல்லா மாறுபட்ட தட்பவெப்ப நிலையிலும், தடங்கலில்லாமல் வேலை செய்ய வேண்டுமானால் அது வெப்ப மண்டலத்திற்கேற்பப் பதப்படுத்தப்பட்டு (Tropicalised) இருக்க வேண்டும். இதற்காகவே சாலிடேர் டி. வி.யை அதன் ஆராய்ச்சி மற்றும் மேம்பாட்டுத் துறையினர் (R & D) கடந்த ஒரு வருடகாலமாக சாலிடேர் கலர் டி.வி.யின் அமைப்பைப் பல்வேறு தட்பவெப்ப நிலைகளில் பரிசோதனை செய்து நிறைவு செய்துள்ளனர். இதன் விளைவால், சாலிடேர் கலர் டி.வி. தடங்கலில்லாமல் எல்லா தட்பவெப்ப நிலைகளிலும், முக்கியமாக ஈரப்பதம் சார்ந்த இடங்களிலும் இயங்கும்.

தற்கு முன் நாங்கள் அதை ஏன் ஒரு அருமை பொருந்திய கலர் டி. வி. என்று அழைக்கிறோம் என்பதை அறிய வேண்டும். இதன் முக்கியக் காரணம், சாலிடேர் கலர் டி.வி., அதி நூதன தொழில் நுணுக்கம் கொண்டும், தேர்ந்தெடுத்த வடிவத்துடனும், மாசற்ற உதிரி பாகங்களை (Zero – defect components) உலகப் பிரசித்தி பெற்ற ITT, Preh West Germany மற்றும் பிலிப்ஸ் (Philips) போன்ற நிர்வாகங்களிலிருந்து வரவழைத்து உங்களுக்காகவே ஒரு உத்திரவாதமான, நெடுநாள் உழைக்கக்கூடிய சாலிடேர் கலர் டி. வியை உருவாக்கியுள்ளது. அதுமட்டுமல்லாமல் சாலிடேர் கலர் டி. வி. நியாயமான உங்களுக்குத் தகுந்த விலையில் தரமான எல்லா வித முன்னேற்றமான அம்சங்களுடன் மேலை நாடுகளில் உருவாக்கப்படும் கலர் டி.விக்கு ஒப்பிடத்தக்க வகையில் உங்களுக்காகவே உருவாக்கப்பட்டுள்ளது.

**எல்லாவற்றிற்கும் மேலாக, சாலிடேர் கலர் டிவி இங்கேயே, அதி நூதன தொழில் நுணுக்கம் கொண்டும், மாசற்ற உதிரி பாகங்களை தானியங்கும் கம்ப்யூட்டர் அசெம்ப்ளியைக் கொண்டும் சேர்த்துத் தயாரித்து அளிக்கும். சாலிடேரின் இவ்வளவு கவனிப்புக்கும் கண்காணிப்புக்கும் முக்கிய காரணமே, தரமான கலர் டிவியை அளிப்பதுதான்.**

**அருமை பொருந்திய கலர் டிவி (51 cm)**
**மேற்கு ஜெர்மானிய தொழில் நுணுக்கத்தைத் தழுவியது.**
**எலக்ட்ரானிக் ட்யூனர் இணைந்தது.**



**காலத்தில் கிடைக்க உடனடியாக பதிவு செய்யுங்கள் ரூ. 500 மட்டும்**
**மேலும் விவரங்களுக்கு உங்கள் டீலரை அணுகுங்கள்.**

தயாரிப்போர் :
ஜெம்-பீம் எலக்ட்ரானிக்ஸ் (பி) லிட்.
சென்னை 600 020

# கலர் சாலிடேர்

**-தொல்லையில்லாத் தொலைக்காட்சி**

# டி.வியில் தோன்றுவதற்குத் தகுதிகள்



○ ஷோபனா ரவி

தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பங்கு பெறக் குறைந்த பட்சம் என்னென்ன தகுதிகள் தேவை?

- **செய்தி வாசிப்பவர், அறிவிப்பாளர்:** கல்வித் தகுதி – பட்டப்படிப்பு; தங்கு தடையின்றித் தமிழ் பேச, படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். 'ல'கர, 'ழ'கரத் திருத்தமாய்ப் பேச வர வேண்டும். ரொம்ப அழகாய் இல்லாவிட்டாலும், முகம் பார்க்கும்படியாக இருக்கவேண்டும்.

- **நாடகங்களில்** நடிக்க விருப்பமுள்ளவர்கள் அதற்குரிய படிவத்தைப் பூர்த்திசெய்து, ரூ. 5 கட்டணம் செலுத்த வேண்டும். இதற்குப் பிறகு ஒரு டெஸ்ட். அப்போது தானாகவே வசனம் பேசி, நடித்துக் காட்ட வேண்டும். பிறகு அவர்கள் தருகிற வசனத்தைப் பேசி, நடித்துக் காட்ட வேண்டும். இதில் தேறினால் நாடகங்களில் நடிக்க வாய்ப்புக்கிடைக்கும்.

- **இசையரங்கம்** நிகழ்ச்சியில் ஆல் இந்தியா ரேடியோவினால் அங்கீகரிக்கப்பட்ட கலைஞர்கள் மட்டுமே பங்கு பெற முடியும்.

- **க்விஸ்:** நிகழ்ச்சியில் பங்கேற்க, தனி விண்ணப்பம் உண்டு. பூர்த்தி செய்து தந்தால் 'பொது அறிவு' டெஸ்ட் வைப்பார்கள். தேறினால் க்விஸ்ஸில் பங்கேற்கலாம்.

- **மனைமாட்சி:** புதிய கைவினைப் பொருள் தயாரிப்பு, சமையல் குறிப்பு, பெண்கள் சம்பந்தமான மற்ற கலையான விஷயங்களுடன் சம்பந்தப்பட்ட தயாரிப்பாளரை அணுகினால், நிகழ்ச்சியில் இடம் பெறலாம்.

- **கண்மணிப் பூங்கா:** பாட, நடிக்க, கதை சொல்ல, மற்றெந்த திறமையும் உள்ள சிறுவர் சிறுமியர், சம்பந்தப்பட்ட தயாரிப்பாளரை அணுகி, செய்து காட்டினால் க. ம. பூங்காவில் பங்கு பெறலாம்.

- **இளந்தென்றல்:** இந்த இளைஞர் நிகழ்ச்சியில் நடிக்க, பாட, கவிதை எழுதத் தெரிந்தோர்க்கு வாய்ப்பு உண்டு. இதற்கென உள்ள தேர்வுக் குழுவினரிடம் திறமையை எடுத்துக் காட்டி, நிகழ்ச்சியினை வழங்கலாம்.
பொதுவாக நிகழ்ச்சியினைத் தொகுத்து வழங்க விரும்புபவர்கள், பார்க்கச் சுமாராக இருந்தால் போதும். உச்சரிப்புச் சுத்தம் ரொம்ப அவசியம். சரளமாய்ப் பேசத் தெரிந்திருக்க வேண்டும்.

தொகுப்பு: **சந்திரமௌலி**

---

# பளிச் செய்திகள்

- சென்னைத் தொலைக்காட்சி தொடங்கிய போது முதலில் தெரிந்த முகத்துக்குரியவர் அறிவிப்பாளர் யு. எம். கண்ணன்.

- பேராசிரியர் நன்னன் முதியோர் கல்விக்காக நடத்தும் பாடங்களைக் கவனித்துக் கவனித்து, தமிழ் எழுத்துக்கள், வார்த்தைகளை எழுதப் பழகிக் கொண்ட ஆங்கில மீடியம் குழந்தைகள் உண்டு.

- ஒருமுறை தொலைக்காட்சி வானிலை அறிவிப்பில் 'இன்றோ, நாளையோ பலமானது முதல் மிதமானது வரை மழை பெய்யலாம்' என்று செய்தி படித்த வரதராஜன் சிரிப்புடன் முடித்த போது ஒரு 'கொசுறுச் செய்தியும்' சொன்னார். ''பெய்யலாம் என்ன.. இதோ வெளியே மழை கொட்டிக் கொண்டிருக்கிறது... இப்போதே....''

- டி. வி. ஒளிபரப்புகள் தொடங்குவதற்கு முன்னால் வட்டமாக, சதுரமாக, கோடு



கோடாக, பட்டைகளாக என்று என்னென்னமோ காட்டுவார்கள். இது உங்களுக்காக அல்ல. டி. வி. சர்வீஸ் செய்கிறவர்களுக்காக. இதை வைத்து அவர்கள் பல சோதனைகளைச் செய்து விடுவார்கள். ஆனாலும் நீங்களும் சில முக்கியமான விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம். படத்திலுள்ள சார்ட்டின் நான்கு பார்டர்களும் திரைக்குள் விழ வேண்டும். நடுவில் உள்ள வெள்ளை வட்டம் தெளிவில்லாமல் குழம்பிப் போய் விடக் கூடாது. வட்டத்துக்குள் உள்ள நான்கு பட்டைகள் 'கான்ட்ராஸ்ட்' மாறுபாடுகளைக் காட்டும். 'ரெட்மாசார்ட்' என்பது இதன் பெயர்.

- டி வி சம்பந்தமாக இந்த ஆண்டில் ஒரு சாதனை நூற்றாண்டு கொண்டாட வேண்டும். 'ஸ்கானிங் டிஸ்க்' என்னும் துருவிப் பார்க்கும் வட்டத் தகடு பால் நிப்காவ் என்பவரால் 1884-இல்தான் கண்டுபிடிக்கப்பட்டது. டி. வி. கண்டுபிடிப்பில் இந்தக் கருவி உருவானது ஒரு முக்கியமான கட்டம்.

- சென்னையிலும் புறநகர்ப் பகுதியிலும் முகமூடிக் கொள்ளைக்காரர்கள் பாதி ராத்திரிக்கு மேல் தான் வர வேண்டுமென்பதில்லை. சனி ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை ஆறு மணிக்கே 'விஜயம்' செய்யலாம். ஒவ்வொரு வீடும் மினி சினிமாத் தியேட்டராக மாறிவிடும். ஏராளமான வால்யூமில் டி. வி. இரைச்சல். கொள்ளையடிக்கிற ஆள் கண்ணில் பட்டால் கூடத் தப்பாக எண்ணமாட்டார்கள். 'உட்கார்ந்து படம் பார்' என்பார்கள். அந்த அளவுக்குப் பலர் (குறிப்பாக வயதான தாய்மார்கள்) பைத்தியமாகவே ஆகிவிட்டார்கள்.

தொகுப்பு: **வெஸ்பால்**

---

# நேயர்களுடன் நேரடித் தொடர்பு



○ சித்திரா கிருஷ்ணசாமி

சென்னைத் தொலைக்காட்சி நிலையத்தில் 'நேயர் ஆராய்ச்சிப் பிரிவு' (Audience Research wing) என்று ஒரு பகுதி உள்ளது. இதன் பணி என்ன?

இந்தப் பகுதியின் தலைமைப் பொறுப்பிலிருக்கும் மிஸ். **சித்ரா கிருஷ்ணசுவாமி** தம் பணிகள் பற்றிச் சொல்கிறார்:

''நேயர்களிடமிருந்து பல்வேறு நிகழ்ச்சிகளையும் பற்றி வருகிற கடிதங்கள் ஒவ்வொன்றையும் படித்து, புள்ளி விவரம் சேகரிப்பது. வாராவாரம் சராசரியாக 300 முதல் 400 கடிதங்கள் வருகின்றன. பொதுவாக நாடகம், சினிமா சம்பந்தமான நிகழ்ச்சிகளுக்கு அதிக அளவில் கடிதங்கள் வருகின்றன. நல்ல நிகழ்ச்சிகள் எது ஒளிபரப்பினாலும், நல்ல வரவேற்பு இருக்கிறது. ஒரு சிறு உதாரணம்: மாண்டலின் சீனிவாசனின் நிகழ்ச்சி ஒளிபரப்பானதும் பாராட்டுக் கடிதங்கள் குவிந்து விட்டன. போனில் வேறு பாராட்டுக்கள். ரொம்ப ஆச்சரியப்பட்டுப் போய் விட்டோம்.

பகுதி நேரமாகவும் முழு நேரமாகவும் பலரை நியமித்து, அவர்கள் மூலமாக, பொது மக்கள் பலரைச் சந்தித்து, எந்த மாதிரியான நிகழ்ச்சிகளை விரும்பிப் பார்க்கிறார்கள். இன்னும் என்ன மாதிரியான நிகழ்ச்சிகளை எதிர்பார்க்கிறார்கள் என்றெல்லாம் ஆய்வு நடத்தி, அதன் மூலம் நல்ல நிகழ்ச்சிகளை வழங்குவதே இப்பிரிவின் நோக்கம்.

மேலும் எங்களிடம் டி. வி. நிகழ்ச்சிகளைப் பார்த்து விமர்சிக்கிறவர்கள் விலாசம், போன் நம்பர் எல்லாம் இருக்கிறது. சில நிகழ்ச்சிகள் முடிந்ததும், டெலிபோன் மூலமாக நகரின் பல்வேறு பகுதிகளிலும் உள்ளவர்கள் ஒரு சிலருடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு, நிகழ்ச்சியைப் பற்றிய கருத்துக்களை உடனடியாகக் கேட்டு அறிந்து கொள்ளுவோம்.

தவிர, 'டெலி கிளப்' போன்ற நேயர்களின் சங்கங்களுடன் தொடர்பு கொண்டு, அவ்வப்போது இவர்கள் கருத்துக்களை அறிந்து கொள்வோம்'' என்று விவரிக்கும் ஆடியன்ஸ் ரிஸர்ச் ஆபீஸர் குமாரி. சித்ரா எம்.ஏ.சோஷியல் சயன்ஸ் பட்டம் பெற்றவர். 1979-ம் ஆண்டு முதல் இந்தப் பொறுப்பில் இருக்கிறார்.

-சின்ன கொலம்பஸ்

# டி வி/வீடியோ சொந்தக்காரர்களுக்கென

### இந்தியாவிலேயே முதன் முதலாக

### (ஜப்பான் தொழில் நுட்பத்துடன் கூடிய)

# DeePee டி வி புரொஜக்டர்

## அதோடு ஹை கெய்ன் ஸ்கிரீன்

டி வி மூலமாக வரும் நேரடி கதிர் வீச்சுக்குப் பதிலாக எமது புரொஜக்ஷன் சிஸ்டத்தைப் பயன்படுத்தி உங்களது கண் பார்வையைக் காத்திடுவீர்.



வீடியோ தியேட்டர்களில் அவசியம் இருக்க வேண்டியவை.

இதற்கு முற்றிலும் இருட்டான சூழ்நிலை தேவைப்படுகிறது.

சிறப்பு அம்சங்கள் :

1. கூடுதலாக மின்சாரம் வேண்டியதில்லை.
2. 20" டி வி ஸ்டாண்டர்டு அளவு படத்தை விட நான்கு மடங்கு பெரியதாகத் தோற்றமளிக்கும்.

(யாதொரு தயாரிப்பிலான கறுப்பு வெள்ளை மற்றும் கலர் டி வி — வீடியோ செட்டுக்கும் பொருந்தும்)

3. 30 செ.மீ. அல்லது 35 செ.மீ. மற்றும் 45 செ.மீ. அல்லது 50 செ.மீ. டிவிக்காக ஆயத்தமாகக் கிடைக்கிறது.

தயாரிப்பாளர்கள் :

# R. D. எண்டர்பிரைஸ்

மொத்த விற்பனை ஏஜெண்ட் :

## இம்போர்ட் டிரேட் ஏஜென்சீஸ்



சிங்கபுரி பில்டிங், கிரவுண்டு ஃப்ளோர்,
609, கிர்காவ்ம் ரோடு, பிரின்சஸ் வீதி சிக்னல் அருகில்,
பம்பாய் - 400 002 தொலைபேசி எண் : 254852

சற்றே நெருங்கி உற்றுப் பாருங்கள்

# ஸுப்பர் ரின்
# அதிக வெளுப்பொளி பாய்ச்சுது...

**இதற்கு ஈடுநிற்க டிட்டர்ஜெண்ட் வில்லை எதுவுமே இல்லை.**

**உற்றுப் பாருங்கள்**
**இப்போது ஸுப்பர்**
**ரின் வில்லையை—**
கண்கவரும் புதிய
மேலுறை, புதுமை
கமழும் நறுமணம்.




இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RIN 69 2013 TM

Sharp.
Clear.
Bright.



Spectra Super (51 cm)

ASP/ECIL/848

And has the colours to prove it.

ECtv SPECTRA




Electronics Corporation of India Limited
Hyderabad-500 762

# நாட்டுச் சிறப்பு நமட்டுச் சிரிப்பு















# நவீன நகரம்

## 21

Aids ஸைப் பற்றி நான் இந்தியாவிலேயே படித்திருந்தேன். ஹோமோ செக்சுவல் புணர்வினால் பரவும் பயங்கர ஒட்டுவாரொட்டி நோய் இது என்றும், வந்து விட்டால் அதற்கு விமோசனமே கிடையாது என்றும் கட்டுரை தெரிவித்தது. 'America in turning moralistic' என்று எழுதியிருந்தது.

'அது உண்மையா?' என்று ஸ்ரீராம் சீதாவைக் கேட்டேன்.

''ஓரளவுக்கு உண்மைதான்'' என்றார் சீதா. ''இந்த வியாதி ரொம்பப் பயங்கரம். அதில் படுத்தவர்களை டி. வி. யில் காண்பித்து, பேட்டி கண்டார்கள். கட்டுப்பாடில்லாமல் வாழும் வாழ்க்கையின் விளைவுகளைப் பற்றிய பிரக்ஞையை ஜனங்களுக்குள் ஏற்படுத்தப் பெரிய முயற்சி நடக்கிறது இப்போது. இந்த வியாதிக்குத் திட்டவட்டமான காரணம் தெரியவில்லை. ஆனால் ஹோமோ செக்சுவலினால் பரவுவதாக அபிப்பிராயம் இருக்கிறது. இந்த வியாதி ஒட்டுவாரொட்டியானதால் உடலுறவு அல்லாத வெறும் தொடர்பினால் கூட வெகு விரைவாகப் பரவி விடுகிறதாம். சின்னக் குழந்தைகளுக்குக் கர்ப்பத்தில் பரவுவது ரொம்பப் பரிதாபம். எந்த மருந்தும் பலனளிப்பதில்லை. ஏனென்றால் இந்த நோய் உடம்பில் எந்த ஆண்டி பயாடிக்குக்கும் பணியாத ஆன்டிபாடிகளை உற்பத்தி செய்கின்றது. இதனால் உடல் எந்த நோயையும் தாங்கிக் கொள்ளும் சக்தியை இழந்து விடுகிறது. ஆஸ்பத்திரியில் எயிட்ஸ் நோயாளிகளை நெருங்கவே நர்ஸ்கள் பயப்படுகிறார்கள். மயிரெல்லாம் கொட்டி உருவமும், உறுப்புக்களும் பயங்கரமாக மாறி — எனக்கு டி. வி. யில் பார்த்தே இரண்டு நாட்களுக்குச் சாப்பாடு வேண்டியிருக்கவில்லை.'

''செக்ஸ் விஷயத்தில் அமெரிக்க சமூகத்தில் இருக்கும் கட்டுப்பாடற்ற சுதந்திரத்தின் விளைவுகளைப்பற்றி இப்பொழுது அமெரிக்கர்களே கவலைப்பட ஆரம்பித்திருக்கிறார்கள்'' என்றார் ஸ்ரீராம்.

நான் ஃப்ரான்ஸில் சந்தித்த ஓர் அமெரிக்கர் சொன்னது எனக்கு நினைவுக்கு வந்தது.

''அமெரிக்காவின் மிகப் பெரிய பிரச்னை போதைப் பொருள். பைசாசமாய் வளர்ந்து விட்ட இந்தப் பிரச்னையைச் சமாளிக்கும் வழி தெரியவில்லை.''

''குடும்ப வாழ்வு என்பது அமெரிக்க சமூகத்தில் நிலையான அங்கமாக இல்லாமல் வலுவிழந்து விட்டது. கணவனை மனைவி சந்தேகிப்பதும் மனைவியைக் கணவன் சந்தேகிப்பதும், இருவரும் எப்பொழுது பிரிவார்களோ என்கிற அச்ச எதிர்பார்ப்பில் தத்தளிக்கும் குழந்தைகளும் கொண்ட சமூகத்தில் பிரச்னைகளுக்கு என்ன குறைவு?'' என்றார் நீஸில் நான் சந்தித்த ரூடா டாஃபின். ''அமெரிக்க ஆண் நம்பகமானவன் இல்லை. மனைவி அவனுக்கு வெகு சீக்கிரம் அலுத்துப் போவாள். சராசரி அமெரிக்கன் நல்ல கணவன் இல்லை'' என்று காரசாரமாகத் தாக்கினார் ரூடா.

''இது ஓரளவுக்கு உண்மைதான்'' என்றார் ஸ்ரீராம். ''அதனால்தான், அமெரிக்கப் பெண்கள் இந்திய ஆண்களை விரும்புகிறார்கள். 'நல்ல கணவனாக





இருப்பார்கள்' என்ற நம்பிக்கையில். சில பெண்கள் வெகு தீவிரமாக இந்தியர்களை வளைக்கப் பார்ப்பார்கள். அமெரிக்க இந்திய திருமணங்கள் அநேகமாய் இப்படி நடந்தவைதான்.''

''இங்கு வரும் இந்திய வாலிபர்களும் எவ்வளவோ பேர்கள் மோசமாக நடந்து கொள்கிறார்கள். அமெரிக்காவில் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம் என்கிற நினைப்பில். இஷ்டத்திற்கு அமெரிக்கப் பெண்களுடன் உறவு வைத்துக் கொள்கிறார்கள். கிடைத்தது லாபம் என்கிற திமிரில். கடைசியில் இந்தியாவுக்குத் திரும்பி நிறைய வரதட்சிணை வாங்கிக் கொண்டு வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்கிறார்கள்!'' என்றார் தோ.

விமான நிலையம் வந்துவிட்டது. வெயிட்டிங்லிஸ்ட்டில் இருந்த என் பெயருக்கு விமானம் கிளம்ப ஐந்து நிமிடங்களுக்கு முன்தான் இடம் கிடைத்தது. கடைசிவரை உடன் இருந்த அவர்களுக்கு நன்றியைத் தெரிவிக்கக் கூட நேரமில்லாமல் நான் விரைந்தேன்.

Newark விமான நிலையத்திற்கு என் சிநேகிதியின் மகள் மாலாவும் அவள் கணவர் ரவியும் வந்திருந்தார்கள். வெகு சமீபத்தில் திருமணமாகி நியூயார்க்கிற்கு வந்தவர்கள். ஏக உற்சாகத்துடன் என்னை வரவேற்று ஆளுக்கொரு பெட்டியைத் தூக்கிக் கொண்டு நடந்தார்கள்.

பஸ்ஸைப் பிடித்து, ஸப்வே ரயிலைப் பிடித்து க்வீன்ஸில்இருக்கும்அவர்கள் வீட்டிற்குப் போய்ச் சேர்வதற்குள் இருட்டி விட்டது. சாப்பிட்டு, டி.வி. ஷோ இரண்டைப் பார்த்துப் படுத்துக் கொள்ளத்தான் நேரம் சரியாக இருந்தது.

மறுநாள் காலை நியூயார்க் நகரத்தைச் சுற்றிப் பார்க்கும் டூரிஸ்ட் கோச்சில் மாலாவும், நானும் புறப்பட்டோம்.

நான் அமெரிக்காவில் பார்த்த சொற்ப இடங்களுள் நியூயார்க் மிக சுவாரஸ்யமான இடம் என்று பார்த்தவுடன் புரிந்தது. லண்டனுக்கு இருப்பது போல் இந்த ஊருக்கென்று பிரத்தியேகப் பாத்திரத் தன்மை தெரிந்தது. லண்டனுக்கு பலமான, புராதனப் பின்னணி இருப்பதுபோல் இங்கு அழுத்தமான நவீனப் பின்னணி தெரிகிறது. 19—ம் நூற்றாண்டில் அமெரிக்கக் கலாச்சார இயக்கம் இங்கு தான் ஆரம்பித்தது. இன்னும் இங்கு தான் வளர்ந்து வருகிறது. புகழ் பெற்ற எழுத்தாளர்களை—வாஷிங்டன் இர்விங், எட்கர் ஆலன்போ, யூஜீன் ஓநீல் லிருந்து இன்றைய எழுத்தாளர்கள் நாடகாசிரியர்கள் வரை. — நியூயார்க்கும் அதில் பிரத்தியேகமாக 'க்ரீன்விச் வில்லே'ஜும் கவர்ந்திழுத்திருக்கிறது. தற்கால மிகச்சிறந்த சிற்பங்கள், கட்டிட அமைப்புகள் இங்கு தான் உள்ளன. நாடகங்களுக்கு லண்டனில் இருக்கும் பிக்காடில்லியைப் போல் இங்கு அகில உலகம் போற்றும் ப்ராட்வே நாடகத் துறையில்புதிய புதிய முயற்சிகள் ஜனிப்பது இங்கே. ஜாஸ் (Jazz) பிறந்ததும் இங்கே.

பல தேசத்துக் கலாச்சாரங்களும் மிகச் சிறந்த பல இனத்து அறிவுகளும் இங்கு சங்கமித்திருப்பது இதற்குக் காரணமாயிருக்க வேண்டும்.

வாஸந்தி

✖ சைனா டவுன் கடை வீதி




✖ நியூயார்க்கில் ஸெயிண்ட் பாட்ரிக் ஆலயம்



பெரிய அளவில் இத்தாலியர்கள், யூதர்கள், கறுப்பர்கள், போர்ட்டோரிக்கன், ஜெர்மன், ஐரிஷ், சீனர்கள் இங்கு குடிபுகுந்து அமெரிக்க வாழ்வுடன் கலந்திருக்கிறார்கள். அமெரிக்கக் கலாச்சார வளர்ச்சியில் கறுப்பர்களின் பங்கு மகத்தானது. வெள்ளையரின் நிறவெறியையெல்லாம் மீறிக்கொண்டு கறுப்பர்கள் தங்களது தகுதியை வெளிப்படுத்துவது மிகப் பெரிய விஷயம் என்று தோன்றிற்று.

நியூயார்க் பாதுகாப்பான இடமில்லையென்றும் இரவு நேரத்தில் பெண்கள் தனியாக வெளியில் போவது நல்லதில்லை என்றும் உறவினர்கள் என்னை எச்சரித்திருந்தார்கள். ஒரு பக்கம் வானைத் தொடும் ஸ்கைஸ்கிரேப்பர்களும் மறுபுறம் பயங்கர ஏழைமையின் இருப்பிடமாகக் கறுப்பர்களின் தொகுதிகளும் இருப்பது இங்கும் நிதர்சனம். கறுப்பர்கள் வெளியிடும் சில பத்திரிகைகளை என் பயணங்களின் போது பார்வையிட்டேன். வெள்ளை அரசின் பாரபட்சத்தையும், எந்தத் துறையிலும் கறுப்பர்களுக்கு சமமான வாய்ப்புக்கள் கிடைக்காததையும், அமெரிக்கா முழுவதுக்கும் இரண்டு மூன்று பெண் (கறுப்பு) டாக்டர்களே முன்னணியில் இருப்பதையும் கட்டுரைகள் எடுத்துச் சொல்லிப் பொருமின.

கறுப்பர்களின் பிரச்னைகள் அவர்களை மட்டும் பாதிக்கக் கூடியதில்லை, தேசத்தையே பாதிப்பது என்கிற பிரக்ஞை பரவலாக இப்பொழுது ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. கறுப்பர் பிரச்னை அமெரிக்க அரசாங்கத்துக்கு ஒரு மிகப் பெரிய சவால். வரப் போகும் பொதுத் தேர்தலில் ஜனாதிபதி பதவிக்கு ஒரு கறுப்பரும் நிற்கிறார். இப்பொழுதிலிருந்தே அசுரத் தேர்தல் பிரசாரம் அங்கு ஆரம்பித்து விட்டது!

நியூயார்க் நகரத்தை ஐந்து பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அதில் மிகச் சிறியதும் மிகச் 'சுறுசுறுப்பானதும் ஆனது மன்ஹாட்டன் பகுதி. ப்ராட்வே என்கிற இதன் பிரதான நீண்ட சாலையில் டூரிஸ்ட் கோச் செல்கையில் இருபுறமும் இருந்த கட்டிடங்களின் அழகு பிரமிப்பை ஊட்டிற்று. சாதாரணக் கட்டிடங்கள்என்கிற பேச்சே இல்லை. எல்லாம் பிரும்மாண்டம். வங்கிகள், அலுவலகங்கள் எல்லாம் எங்களுக்கு நிகராக எங்கே காணப் போகிறீர்கள் என்று மார்பைத் தட்டுகிற மாதிரி. வோர்ல்ட் டிரேட் சென்டர், பான் அம் கட்டிடம், ஐ.நா. சபைக் கட்டிடம் எம்பையர் ஸ்டேட் கட்டிடம், டைம்ஸ் கட்டிடம் எல்லாம் இப்பொழுது தற்காலச் சரித்திரப் பிரசித்தமடைந்து விட்டன. இந்தக் கட்டிடங்களில் கலை அழகும்சேர்ந்திருப்பது கண்ணைக் கவர்கிறது.

பயணத்தின் ஆரம்பத்திலேயே சைனா டவுனுக்கு, அது ஒரு விசேஷ டூரிஸ்ட் அட்ராக்ஷன் என்கிற கணிப்பில், அழைத்துச் சென்றார்கள். அங்கு சீனர்கள் கட்டியிருக்கும் ஒரு சிறிய புத்தராலயத்தையும் காண்பித்து, 'சற்று நடந்து விட்டு வாருங்கள்' என்று கடைத் தெருவைக் காண்பித்தார்கள்.

கடைகளின் பெயர்களெல்லாம் சீன எழுத்துக்களில், சீன சாமான்கள், எங்கும் சீன முகங்கள். சைனாவில் ஒரு பகுதியில் நிற்கிறாற் போல் பிரமையேற்படுகிறது.

பஸ் மறுபடியும் கிளம்பி புகழ்பெற்ற எழுத்தாளர்களின் பிரிய வாசஸ்தலமான கிரீன்விச் வில்லேஜைத் தாண்டிப் பிரபல ஐந்தாவது அவென்யூ சாலையில் சென்றது. மாடிஸன் சதுக்கத்தைத் தாண்டியதும், 'அதோ பாருங்கள் எம்பயர் ஸ்டேட் பில்டிங்' என்றார் கைட். கழுத்தை வளைத்தும் உடம்பைவளைத்துப் பார்த்தும் கட்டிடத்தின் உச்சி தெரியவில்லை.

மன்ஹாட்டனின் நடுமையத்தில் ஐந்தாவது, ஏழாவது அவென்யூக்களுக்கு நடுவில் ராக்ஃபெல்லர் சென்டர் என்னும் ஓர் ஸ்கைஸ்க்ரேப்பர்சங்கிலி அமைப்பு பிரமிப்பை ஊட்டுகிறது. ஒன்றுக்கொன்று ஒத்துப் போகும்படியான வடிவத்தைக் கொண்டவை இந்தக் கட்டிடங்கள். இரண்டாம் உலக மகாயுத்தத்திற்கு முன்பு அநேகமாய்க் கட்டப்பட்டவை. இவையனைத்தையும் ConCourse எனப்படும் பாதாளச் சாலைகள் இணைக்கின்றன. இந்தச் சாலைகள் நெடுகிலும் கடைகள். வடக்கிலிருந்து தெற்குவரை இந்த வட்டாரத்தில் ஓடும் ராக்ஃபெல்லர் ப்ளாஸா எனும் தெரு தனியார் தெருவாம். இது பொதுச் சொத்தில்லை என்பதற்கறிகுறியாக ஆண்டுக்கு ஒரு முறை ஒருநாள் இது மூடப்படுமாம்.

22 ஏக்கரா நிலப்பரப்பில் இங்கு பத்தொன்பது வானளாவும் கட்டிடங்கள் நிற்கின்றன. அநேகமாய்

---

**டி. வியில் எதை ரசிக்கிறார்?**



பிரதமர் இந்திராகாந்தி டெலிவிஷனில் எந்தப் பகுதியை ரசித்துப் பார்க்கிறார்?

''யெஸ் மினிஸ்டர்'' தொடர் பகுதியைத்தான்!

சொன்னவர்: மத்திய ஒலிபரப்புத்துறை அமைச்சர் திரு. பகத்.

—திரைஞானி.




கொஞ்சம் ஸ்பேனர் தர்றீங்களா... நட்டு டைட் பண்ணிக் கொண்டு தர்றேன்!

டாக்டர்: வேற ஒண்ணுமில்லே. ஆயிலிங் செய்துக்கிட்டா சரியாப் போயிடும்!




எல்லாமே வர்த்தக அலுவலகங்கள். 60,000பேர்கள் இங்கு வேலை செய்கிறார்களாம்!

இந்தக் கட்டிடங்களைச் சுற்றிப் பார்க்கவே தனியான சுற்றுலாப் பயணங்களை ஏற்பாடுசெய்கிறார்கள். அபரிமிதமான செல்வத்துடன் கலா ரசனையும் மிக்கவர்கள் எண்ணெய் மன்னன் ராக்ஃபெல்லரின் சந்ததியர் என்றுஇங்கிருக்கும் அற்புதச் சிற்பங்களும் சுவர்ச் சித்திரங்களும் நிரூபிக்கின்றன. சினிமா நாடகக் கொட்டகைகள் நிரம்பிய பிராட்வே பகுதியைத் தாண்டும் போது ஒரு நாடகம் கூட எனக்குப் பார்க்க நேரமில்லாததை நினைத்து மிகமிக வருத்தமாக இருந்தது. இங்கு நாடகங்களுக்கும் musical–களுக்கும் எப்பவும் கூட்டம் என்றார்கள். டிக்கெட்டுகளை விற்கப் பிரத்யேகமான ஏஜெண்டுகள் இருக்கிறார்கள். 'ஜே, ஜே' என்று இந்த இடம் மிகக்கலகலப்பாக இருக்கிறது.இங்கு ஆசைதீர நடக்க வேண்டும் போல எனக்குப் படபடத்தது. நியூயார்க் நகரம் நிச்சயம் ஒரு வித்தியாசமான சுவாரஸ்யமானநகரம் என்று எனக்குத் தோன்றிற்று. 'அம்போ' என்ற வெட்டவெளிகள் அதிகமில்லாத நெருக்கமான அழகிய கட்டிடங்களில் ஒரு ஜீவன் தெரிந்தது. கைட் பேசிய ஆங்கிலம்தான் எனக்குப் பாதி நேரம் புரியாமல் உயிரை வாங்கிற்று. பாதசாரிகளும், பஸ் பயணிகளும் தனித்தனித் தீவுகளில் இருப்பது போல் தங்களுக்குள் மூழ்கிப் போன யோசனைகளுடன் ஐக்கியமாகித் தெரிந்தார்கள். ரோமிலும், பாரிஸ்ஸிலும், ஆம்ஸ்டர்டாமிலுமம் ஜனங்கள் காட்டும் சினேகபாவமும் பிரசன்னமும் இங்கில்லை. இவர்களுடைய வாழ்க்கை அதிக டென்ஷனுடையதாக இருக்கவேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் கட்டி முடிக்கப் பட்ட புனிதப் பாட்ரிக் ஆலயத்திற்கு டூரிஸ்ட்கோச் அழைத்துச் சென்றது. கோத்திக் பாணியில்கட்டப்பட்டிருக்கும் இதில் ஃப்ரெஞ்ச் ஆலயங்களின் பாதிப்பு அதிகமாகத்தெரிந்தது. பல ஸ்டெயின்ட் கிளாஸ் ஜன்னல்கள் ஃப்ரான்ஸில் செய்யப்பட்டு வந்தவையாம்.பணத்தட்டுப்பாட்டினால் உத்திரத்தில் நினைத்தபடி சித்திரங்களைச் சில பாகங்களில் முடிக்க முடியவில்லை என்றபோது எனக்கு வேடிக்கையாக இருந்தது. Rockefeller Center (Centre 'ஸெண்டர்'ரை இப்படித்தான் 'Center' என்று எழுதுகிறார்கள்) –ஐ சற்று முன் பார்த்திருந்த பிரமிப்பில் நான் இன்னமும் ஆழ்ந்திருந்தேன்.

நியூயார்க் என்றதும் நினைவுக்கு வரும் சுதந்திர தேவி சிலையைப் பார்க்கக் கிளம்பினோம். நியூயார்க் துறைமுகத்தின் நுழைவாயிலில் ஒரு சின்னத் தீவின் மத்தியில் கம்பீரமாக ஒருகையில் தீப்பந்தத்தையும் இன்னொரு கையில் அமெரிக்க சுதந்திர பிரகடன சாஸனத்தையும் ஏந்திக் கொண்டு 305 அடி கீழிருந்து மேல் வரை நிற்கும் அந்தச் சிலை சுதந்திர உணர்வு கொண்ட மானுடனுக்கு ஒரு கலங்கரை விளக்கமாகக் கருதப்படுகிறது. அந்தச் சிலையை வெகு சமீபத்திலிருந்து பார்க்க உதவியாகப் படகு சவாரி எப்பொழுதும் உண்டாம். என்னுடைய அதிர்ஷ்டம் நான் சென்ற சமயத்தில் சிலையில் ஏதோ பழுது பார்க்கும் வேலை நடந்து கொண்டிருந்ததால் படகு சவாரிகளை ரத்து செய்திருந்தார்கள். எனக்கு மிகப்பெரிய ஏமாற்றம் ஏற்பட்டது.

அந்தத் தீவை ஒட்டினாற் போல் இருந்த பூங்காவில் எங்களை பஸ் இறக்கி விட்டிருந்தது. அங்கிருந்த ரெஸ்டாரெண்டில் நானும் மாலாவும் எளிமையாக எங்கள் பகல்சாப்பாட்டை முடித்துக் கொண்டு, பார்க்கில் பொருத்தியிருந்த தூரதிருஷ்டிக் குழாய்களில் பத்துஸெண்ட்டைப்போட்டு சிலையைக் கண்ணாடி வழியாகப் பார்த்தோம். சிலையின் ஒவ்வொரு உறுப்பும் வெகு துல்லியமாகத்தெரிந்ததில், 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்கிற வியப்பில் நான் அயர்ந்து போனேன்! (தொடரும்)



# புடவைக்குப் பின்னால் ஒளிபவர்கள்

ஜெரா

காலடி ஓசை கேட்டதுமே அவளுக்குப் புரிந்து போயிற்று... வருவது குருமூர்த்தி தான் என்று. அவன்தான் இப்படி 'வர்ரக்... வர்ரக்' என்று செருப்பைத் தேய்த்துக் கொண்டு நடப்பான். தப்பித் தவறி அவன் நடையில் ஏதேனும் லாவண்யம் தென்பட்டாலும் அதன் மென்மையைக் குதறி எறிந்துவிடும் குரூரமான இந்த அழுத்தத்தை, பல சமயங்களில் அவள் அறவே வெறுத்திருக்கிறாள்!

இவளுக்கு எதையும் பொறுப்போடும், அக்கறையோடும் கையாளும் கவனம் பிசகிப் போய் விட்ட இந்தத் துர்ப்பாக்கியமான நிலைமைக்காகக் கலங்கி இருக்கிறாள். ஆனால்..

அதைப் போன்ற கலக்கத்தையும், கவலையையும் எல்லாவற்றையும் விட வெறுப்பையும் சட்டென்று வெளியேற்ற இது சமயமல்ல என்று தன்னைச் சுயக்கட்டுப்பாட்டுக்குள்ளாக்கிக் கொண்டு, படபடவென்று அடித்துக் கொள்ளும் இதயத்தை ஆசுவாசப் படுத்தும் போலி முயற்சியாக எச்சிலைக் கூட்டி விழுங்கி விட்டுக் கொஞ்சம் நிதானித்தாள். அதற்குள் அவன் இரண்டொருமுறை கதவைத் தட்டிவிட்டான்.

இப்போது உடனே எழுந்து திறந்து விட்டால், இவளுக்காக இந்நேரம் வரை தூங்காமல் காத்திருப்பது ஒருவேளை புலப்பட்டு விடலாம். வாஸ்தவத்தில் இன்றைய தினம் அவன் வரவுக்காகக் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிருப்பது தான் உண்மைநிலை! என்றாலும், அதை எல்லாம் அவன் தெரிந்து கொள்ளக்கூடாது என்பதில் அவள் மிகவும் எச்சரிக்கையாக இருந்தாள்!

'கல்யாணி.'

கரகரப்பான அவன் குரல் இரவின் நிசப்தத்தைக் கிழித்துப் போட, அவள் அப்போது தான் விழித்துக் கொண்டவள்போல் செயற்கைப் பரபரப்போடு ''ம்'' என்று திடுக்கிட்ட குரலில் பதில் கொடுத்துவிட்டு எழுந்தாள்.

விளக்கைப் போட்டு விட்டுத் தாழ்ப்பாளை அகற்றும் முன்பு எச்சரிக்கையாகத் தூக்கத்

தின் கனத்தை இமைகளில் ஜோடித்துக் கொண்டாள். கதவைத் திறக்க, மாத்திரத்தில் அவன் சரேலென்று குளிர்ந்த காற்றைக் கூட்டிக் கொண்டு உள்ளே வந்தான். கப்பென்று சாராய வாடை அவள் மூக்கை விசாரித்துவிட்டு அகன்றது.

இன்னதென்று விளக்க முடியாத வெறுப்புணர்ச்சி அந்தக் கணத்தில் அவளுக்குள் ஊற்றெடுத்து இயக்கத்தை ஸ்தம்பிக்கச் செய்தது. அவள் கதவைச் சாத்தாமலும், தன்னைத் தொடர்ந்து வராமலும் நிற்பதைப் பார்த்தபடி சட்டையைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டிய அவன் ''என்ன நின்னுக்கிட்டே தூங்கறியா?'' என்று நக்கலாகக் கேட்டான்.

உஷ்ணமாகப் பிறப்பெடுக்க எத்தனித்த வார்த்தைகளை அவள் மிகவும சாமார்த்தியமாகத் தொண்டைக் குழிக்குள் அமுக்கிக் கொண்டாள்.

மௌனமாகக் கதவைச் சாத்தித்தாழ்ப்பாள் போட்டாள். அவள் கொடுத்திருந்த வாரிசுகள் தூக்கத்தின் கனத்தால் ஆடைகளின் பிரக்ஞை இன்றி மிகவும் கலைந்துப் போயிருந்தார்கள். அவர்களைச் சீர்ப்படுத்தி, போர்வையை இழுத்துப் போர்த்தி விட்டு வருவதற்குள் அவன் கை, கால்களைக் கழுவிக் கொண்டு மணையைப் போட்டு உட்கார்ந்திருந்தான்.

கல்யாணி தட்டைக் கழுவி, பதமான சூட்டில் பத்திரப்படுத்தி வைத்திருந்த பதார்த்தங்களைப் பரிமாறினாள். கூடவே குழந்தைகளுக்குத் தெரியாமல் அவனுக்கென்றே பிரத்தியேகமாகச் செய்து வைத்திருந்தவைகளையும் எடுத்து வைத்தாள். அவன் மிகவும் சுவாரஸ்யமாக நொட்டை விட்டுக் கொண்டு சாப்பிட்டானே ஒழிய,

---

தென் ஆப்பிரிக்காவில் ப்ரிடோரியாவில், ஜனாதிபதி க்ருகருக்கு ஒரு சிலை நிறுவப்பட்டிருக்கிறது. க்ருகரின்மனைவி கேட்டுக் கொண்டபடி சிலையின் தலையிலுள்ள தொப்பியில், மேல்புறத்தைப் பள்ளமாக விட்டு வைத்திருக்கிறார் சிற்பி. அந்தப் பள்ளத்தில் மழைநீர் தேங்கி, பறவைகள் குடிப்பதற்குப் பயன்பட வேண்டும் என்பது திருமதி க்ருகரின் நோக்கம்!

—'அனெக்டோட்ஸ் ஆஃப் தி கிரேட்' என்ற புத்தகத்திலிருந்து. —ஏ.கே.நாசர்



மாதக் கடைசியில் இத்தனை அயிட்டங்களை அவளால் எப்படிச் செய்ய முடிந்தது என்று குறைந்தபட்சம் ஓர் அதிசயப் பார்வை கூடப் பார்க்கவில்லை. அலட்டிக் கொள்ளவில்லை. எல்லாவற்றையும் விட ''நீ சாப்பிட்டாச்சா கல்யாணி'' என்று பேருக்குக் கூடக் கேட்கவில்லை.

அவன் பாத்ரூம் போய்விட்டுத் திரும்பும் சொற்பகால இடைவெளியில் ''நாமே கேட்டு விட்டால் என்ன?'' என்று அவசர முடிவெடுத்தவள், சட்டென்று அவன் ஆத்திரப்பட்டுத் தொலைத்து விட்டால் காரியம் குட்டிச்சுவராகி விடும் என்ற பயத்தில் வாயடைத்துப் போனாள்.

பாலை ஸ்டவ்வில் வைத்து இளஞ் சூடாக்கி டம்ளரில் கவிழ்த்துக் கொண்டு அவள் படுக்கைக்குப் போகும்போது அவன் அப்போது தான் கொட்டாவி விட ஆரம்பித்திருந்தான்.

''இன்றைக்கு மட்டும் என்ன விசேஷமாகப் பால்?'' என்று அவன் கேட்டு விடப்போகிறானே என்ற பயத்தில் அவளாகவே முந்திக் கொண்டு, ''மீனுக் குட்டி பால் குடிக்காமலே தூங்கிட்டா — அதான் மீந்து போச்சு'' என்று பொய்யைச் சொல்லிவைத்தாள். அவன் அதைப் பற்றி அலட்டிக் கொள்ளாமல் சர்வ அலட்சியமாக டம்ளர் முழுவதையும் வாய்க்குள் திணித்துக் கொள்பவன் போல அசிங்கமாகக் கவ்விக் குடித்தான்.

அவன் படுக்கையில் வந்து உட்கார்ந்த பின்பும் கூட, அவன் எந்தவிதமான உணர்ச்சியையும் காட்டாமல் மிகவும் இறுக்கமாக இருக்கவே அவளுக்கு மனத்துக்குள், ''திக்... திக்...'' என்று இடித்தது. அசிரத்தையோடு டைம்பீஸைப் பார்த்தாள். மணி இரவு பதினொன்றைத் தொட எத்தனித்துக் கொண்டிருந்தது.

அவன் கண்களை இறுக மூடி மல்லாந்து படுத்தபடி பாதங்களைப் பெண்டுலம் போல் பக்கவாட்டில் ஆட்டிக் கொண்டிருந்தான். இனியும் தாமதித்தால் அவன் தூங்கி விடும் அபாயம் தெரிய, கல்யாணி மிகவும் பிரயத்தனப்பட்டுப் பேச ஆரம்பித்தாள். எதையோ கேட்க நினைத்து, ''இன்னிக்கு ஏன் இவ்வளவு லேட்டு?'' என்று ஏதோ கேட்டு வைத்தாள். அவன் இமைகளைப் பிரித்து அவளைப் பார்த்தான்.

விடிவிளக்கின் மங்கிய வெளிச்சத்தில் அவள் தோற்றம் அவனுக்குள் எந்த க்ரியை புரிந்ததோ, சுவாதீனமாகத் தன் இடக்கையால் அவள் தோளை அணைத்துப் பிடித்து, தன் பக்கம் இழுத்தான். ஏற்கெனவே ஏகப்பட்ட வேலைப்பளு, மனஉளைச்சல், அவனுடைய மெத்தனத்தால் ஏற்பட்ட எரிச்சல், எதிர்பார்ப்பின் கனம், எல்லாமாகச் சேர்ந்து தாக்கியதில் மிகவும் தளர்ந்து போயிருந்த அவள் புடவைத் தலைப்பு சரிந்து போக, எறியப்பட்ட பந்தாக அவன் மார்பில் விழுந்தாள்.

சாராய நெடி குமட்டியது. அவள் ஓர் ஊமைச் சோகத்தோடு அவன் அணைப்பை அங்கீகரித்தாள். மனம் இலயிக்காமல்

கட்டாயத்துக்காக ஏற்றுக் கொள்ளும் இந்த அணைப்பு நெருப்பாகத் தகித்தது. மௌனமாகத் தாங்கிக் கொண்டாள். அவன் சோர்ந்து போய்த் திரும்பிக் கொண்டதும், மெல்ல எழுந்து அவன் தோளைப்பற்றி, ''என்னங்க'', என்று மெதுவாக ஆரம்பித்தாள். அவன் சிரத்தையின்றி 'ம்' கொட்டினான்.

'நாளைக்கு அரிசி இல்...' அவள் முடிக்கும் முன்பே, ''சரி, சரி — தொணதொணக்காதே'' என்று இடைமறித்தவன், சற்று நிதானித்து, ''என் சட்டையை எடு'' என்றான். அவளுக்குக் குபீரென்று ஒரு நீரூற்று கிளம்பியதைப் போல் மனத்தில் உற்சாகம் பாய்ந்தது.

வேகமாக எழுந்து சட்டையை எடுத்துக் கொடுத்தாள். அவன் படுத்தவாறே சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டு, அவள் இந்நேரம் வரை எதிர்பார்த்துக் காத்திருந்த தன் 'சம்பளக் கவரை' எடுத்து அவளிடம் நீட்டினான். அவள் அவசர அவசரமாகக் கவரைப் பிரித்து ரூபாய் நோட்டுக்களை விடுவித்து ஒவ்வொன்றாக எண்ணிப்...

'பொசுக்'கென்று விளக்கணைந்ததைப் போல இந்நேரம் வரை அவள் முகத்தில் ஒளி வீசிய சந்தோஷம் சமாதியடைந்தது. வழக்கமாக அவன் கொடுக்கும் தொகையை விட நூறு ரூபாய் குறைச்சலாக இருந்தது.

அப்படியே அவன் தலைமயிரைப் பிடித்து உலுக்கி, சுவரில் அறைய வேண்டும்போல் ரௌத்ரம் பீறிட்டது.

''ஏங்க — ஒவ்வொரு மாசமும் இப்படியே பண்றீ கொழந்தைகளை வச்சுக்கிட்டு நான் எப்படிக் காலம் தள்ளுவேன்.''

அவன் விசுக்கென்று எழுந்து அவளை முறைத்தான்.

''இத பாருடி — மனுஷனைத் தூங்கவிடப் போறியா இல்லியா? இந்த எழவுக்குத்தான் நான் வீட்டுக்கே வர்றதில்லே — வர்ற சம்பளப் பணம் அத்தனையும் உங்கிட்டே தூக்கிக் கொடுத்துட்டா அப்புறம் வேலைக்குப் போற ஆம்புளை என்னடி பண்றது? நாக்கை வளிக்கறதா? குடுக்கற காசிலே 'செட்டா' குடும்பம் நடத்தறவ தாண்டி பொம்புளை.''

அவன் போட்ட சப்தத்தில் குழந்தைகள் புரண்டு படுத்தன. அக்கம்பக்கத்தில் யாரும் விழித்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமானால் பேசாமல் இருப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதை அனுபவம் அவளிடம் எச்சரித்தது.

அவன் அவளுடைய 'பேசாத்தனமே' தனக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாக எடுத்துக் கொண்டு படுக்கையில் சாய்ந்தான். சற்றைக்கெல்லாம் சுகமான குறட்டை அவனிடமிருந்து சீராக விடுபட ஆரம்பித்தது.

கல்யாணிக்குத் தூக்கம் வரவில்லை. அவன் கொடுத்திருக்கும் பணம் வீட்டு வாடகை, அரிசி, மளிகை, பால் இந்தப் பாக்கிகளைச் சரிக்கட்டவே காணாது. அப்புறம் ரேஷன், விறகு இதற்கெல்லாம் என்ன செய்வது? ஐந்தாவது படிக்கும் பெரிய பையன் போன மாதத்திலிருந்து நச்சரித்துக் கொண்டிருக்கிறான். ஒரு டிராயர்



நெப்போலியன் தாம் உணவு உட்கொள்ளும் போது தம்மருகே யாரும் இருக்கவோ, பேசவோ அனுமதிக்க மாட்டார். சின்னக் குழந்தையைப் போல் தான் சோற்றை வாரி இறைத்துக் கொண்டு சாப்பிடுவதைப் பார்த்து யாரேனும் கேலி செய்யக் கூடாது என்பது தான் காரணம்.

—ஜா. ரவி.

---

எடுத்துத் தரச் சொல்லி! பாவம் எத்தனை நாளைக்குத் தான் அவன் சகித்துக் கொள்ள முடியும், சக மாணவர்கள் தன்னைத் 'தபால் பெட்டி டோய்' என்று கிண்டல் செய்வதை! இவளுக்குக் கூட இருக்கின்ற உள் பாவாடை சுத்தமாக நைந்து போய்விட்டது — அவனுடைய பழைய லுங்கிகள் இரண்டைக் கடைசி வீட்டுக் கனகாவிடம் பாவாடை தைக்கச் சொல்லிக் கொடுத்து மாதம் இரண்டாகி விட்டது — அவற்றைக் கூலி கொடுத்து வாங்கத் துப்பில்லை — அந்தக் கனகா புதுத் துணிகளைத் தைக்கக் கொடுத்தாலே இல்லாத ஜாலாக்கெல்லாம் பேசுவாள்! பழைய துணியைக் கொடுத்ததோடு, தையற்கூலியும் பாக்கி என்றால் சும்மாவா இருக்கப் போகிறாள்? ஊர்ஜாரா டமாரம் அடித்துக் கொண்டிருக்கிறாள்— அவள் வாயை வேறு கட்டியாக வேண்டும்!

இதற்குமேல் மருந்துச் செலவு, அவ்வப் போது அவன் சிட்டாட்டத்துக்கு இல்லாமல் பிறுண்டுவது, குழந்தைகளின் பள்ளிச்செலவு இப்படிப் பல. ஊரிலிருந்து அவன் அம்மா வேறு ''உடம்பு முடியவில்லை. ஏதாவது செலவுக்கு அனுப்பு'' என்று கடிதம் எழுதி இருந்தாள் — அதை ஒருமுறை பார்த்து விட்டு அலட்சியமாக விசிறியடித்ததோடு அவன் கடமை முடிந்தது—

''ராட்சசி! பணம் அனுப்பக் கூடாதுன்னு என் மவனைத் தடுத்திருப்பா'' என்று மாமியார்க் கிழவியின் வாயில் விழாமல் இருக்க வேண்டுமானால் இவள்தான் அக்கறை எடுத்துப் பணத்தை அனுப்பித் தொலைக்க வேண்டும்!

அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்தப் பதினொரு வருடத் தாம்பத்தியத்தில் ஓர் ஆண்மையின் நிழலைச் சுகித்த அனுபவமே

இல்லாமல், எவனோ ஓர் அந்நியனுடன் வசிக்கும் உணர்வு மட்டுமே மிஞ்சி இருக்கிறதே! அது ஏன்?

''இவர்கள் நம் ரத்தம்'' என்ற இறுமாப்புக்கு இடமில்லாமல் 'இவன் கொடுத்த தண்டனை இது' என்று குழந்தைகளைக்கூடச் சலிப்பு உணர்ச்சியோடு பராமரிக்கும் இந்த ஆயாசத்துக்கு என்ன பெயர்?

ஆரம்பத்திலிருந்தே அவன் அப்படித் தான்! பொறுப்புக்களைச் சுமக்கப் பிரியப்படாமல் 'பொசுக்'கென்று இவளுடைய புடவைக்குப் பின்னால் ஒளிந்து கொள்வான்! அவன் தேவைகள் தீர்கிறதா என்று மட்டும் பார்த்துக் கொள்வான்! எல்லாக் கடமைகளையும் அவள் தலையில் சாத்தி விட்டு அவற்றின் பெருமைகளில் மட்டும் நோகாமல் பங்கு கேட்பான்!

---

மனைவிக்காக எதையும் செய்யத்தயாராயிருக்கும் கணவன்மார்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். நேபாளத்தைச் சேர்ந்த கணேஷ் திராவா தம் மனைவிக்காக என்ன செய்தார் தெரியுமா? மனைவி பிரசவத்துக்குப் போயிருப்பதால் அவளுக்காகப் பரீட்சை எழுதினார்! பாவம், மோசடி வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது அவர் மீது!

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.



---

கரகரவென்று வழிந்த கண்ணீர் தலையணையை நனைத்தும் அவள் சுயநினைவற்றுப் போன ஜடமாகப் படுத்திருந்தாள்! அவன் இழுத்த இழுப்புக்கெல்லாம், இழைந்து கொடுத்து. இச்சை தீர்ந்ததும் அவன் நீட்டிய 'சம்பளக் கவரை' வாங்கிக்கொண்டு 'ஏதோ வானமே கையில் கிடைத்துவிட்டதாகப் பூரித்துப் போன தன் நிலைமை ஒரு கௌரவமான மனைவிக்குரியதாக இல்லாமல் நிரம்பக் கொச்சைப்பட்டுப் போனதாய் அவள் வெட்கிப் போனாள்!

**வ**ழக்கம் போல வெகு சீக்கிரம் விழிப்பு வந்ததும், வரிசையாகக் காத்து நிற்கும் பிரச்னைகள். அவள் வயசில் மற்றொருநாள் கூடிப்போனது. அடுப்படியில் காரியமாக இருக்கும் போதுதான் 'அது' திடும்மென ஞாபகம் வர, அடி வயிறு கலங்கிப்போனாள். சில மாதங்களுக்கு முன்பு நடந்தது போல் இந்த மாதமும் 'நாள்' தள்ளிப் போய் விட்டது — கிட்டத்தட்ட நாற்பது நாட்கள் ஆகிவிட்டது. டாக்டரைப் பார்க்கப்போனால் அது வேறு ஒரு எக்ஸ்ட்ரா செலவு. திரும்பவும் அவனைக் கேட்பதைத் தவிர வேறு வழி இல்லை.

''லேடி டாக்டரைப் பார்க்கணும் —இன்னும் ஒரு ஐம்பது ரூபாய் இருந்தால்...''

அவன் வெகுண்டு போய்க் கண்களைப் பயங்கரமாக உருட்டினான். ''இனிமே பைசாக்காக பெயராது — டாக்டர்கிட்டே போக வேண்ணு ஒண்ணும் குடி முழுகிப் போயிடாது — இருக்கிற கழுதைகளோட இன்னொரு கழுதை — அவ்வளவுதான்.''

சர்வ அலட்சியமாகச் சொல்லிவிட்டுத் தலைவார ஆரம்பித்து விட்டான் — அவளுக்கு உடம்பெல்லாம் நடுங்கியது.

''தூ— நீயெல்லாம் ஒரு ஆம்பிளையாடா'' என்று காறி அவன் முகத்தில் துப்பவேண்டும் போல் மனம் கொதித்தது—

''புள்ள பெத்துக்கறது நீ தலைசீவிக்கிற மாதிரி தனுக்கு காரியமில்லடா'' என்று கத்த வேண்டும் போல உணர்ச்சிப் பிரவாகம் குரல்வளையை இடித்தது — அதற்குள் 'ஸார்' என்று வாசலில் குரல் வர அவன் விருட்டென்று வெளியே வந்தான் —

ஐந்தாறு ஆட்கள் கையில் கவர்கவராக நோட்டீஸ்களோடும் 'ரெசிப்ட்' புத்தகத்தோடும் நின்றிருந்தார்கள். அவன் இறுக்கம் தளராதவனாக -'என்ன'' என்றான். —ஏதோ 'டொனேஷன்' போலிருக்கிறது — வந்தவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து மர்மமாகப் புன்னகைத்துக் கொண்டார்கள். அவன் மீண்டும் ''என்ன வேணும்'' என்று உரக்கக் கேட்டான்.

வந்தவர்களில் ஒருவன் மிகவும் மென்மையாக, அலட்சியம் தொனிக்க ''வீட்டிலே ஆம்பிளைங்க இருந்தா கொஞ்சம் கூப்புடுங்க'' என்றான்.

அந்த நிமிஷத்தில் தான் அவள் எரிமலையாகிப் போனாள் — உள்ளங்காலில் இருந்து ஜிவ்வென்று ரத்தம் ஏறிப் பாய்ந்து மூளைக்குள் அசுரத்தனத்தைத் திணிக்க, சுற்றுப்புறத்தை மறந்தாள்—கரை யுடைத்துப் பாயும் வெள்ளமாக உணர்ச்சிகள் தலை அறுக்கக் காட்டுக் கத்தலாகக் கத்தினாள்—

''இங்கே ஆம்பிளைங்க யாருமில்லே. எல்லாம் புடவைக்குப் பின்னாலே ஒளியுறவங்க — நான்தான் இந்த வீட்டு ஆம்பிளை— நான் தான் இந்த வீட்டு ஆம்பிளை.''

அவள் தடதடவென்று கதவையும், சுவரையும் கைகளால் அறைந்து விட்டு வீறிட்டு அலறும் சப்தம் கேட்டும் அவள் சாவதானமாக வெளியே வர, வந்தவர்கள் பயத்தோடு பின்வாங்கிக் கொண்டிருந்தார்கள்.

அவன் சரிந்து உட்கார்ந்து இரைச்சல் போட்டு அழுது கொண்டிருந்தான்,

<br>
உ

# அருள்மிகு சுவாமிநாதசுவாமி

## திருக்கோயில், சுவாமிமலை

கும்பகோணம் வட்டம், தஞ்சாவூர் மாவட்டம்

# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்

அன்புடையீர்,

ஸ்ரீ முருகப் பெருமானது ஆறுபடை வீடுகளுள் நான்காவதாக அமைந்ததும், தந்தையாகிய சிவபெருமானுக்கு பிரணவ உபதேசம் செய்த சிறப்பு பெற்றதுமான, இத்திருக்கோயிலில் தற்போது திருப்பணி நடைபெற்று வருகிறது.

நிகழும் ருத்ரோத்காரி ஆண்டு பங்குனி மாதம் 26ஆம் தேதி (8-4-1984) ஞாயிறு காலை 9-00 மணிக்கு மேல் 9-45 மணிக்குள்

## அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்

நடைபெற உள்ளது. 5-4-84 வியாழன் மாலையிலிருந்து யாகசாலை பூஜை தொடங்கி, ஆறுகால பூஜைகள் சிறப்பாக நடைபெற இருக்கின்றன.

அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பிக்கவும், பெருமளவு நிதி உதவி செய்து ஸ்ரீ முருகப் பெருமான் திருவருள் பெறவும் வேண்டுகின்றோம். அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு.

ஆ. குமாரசுவாமி, பி.ஏ.,
செயலாளர் & பொருளாளர்

குழ. இரத்தினசபாபதி
தலைவர்

மற்றும்

**திருப்பணிக் குழுவினர்**

## ஆரோக்கியம் அழைக்கிறது

# மன நோய்கள்

மருந்து தரலாம், கட்டுப்படுத்தலாம், குணப்படுத்திவிட முடியும் என்று சொல்வதற்கில்லை.

மனநோய்கள் சாதாரணமாக இரண்டு வகைப்படுகின்றன. அவசரமாக உடனே டாக்டரிடம் கொண்டு போய் வைத்தியம் பண்ண வேண்டிய நோயாளிகள் ஒருவகை. அவசரமில்லை நிதானமாகக் கவனிக்கலாம் என்பது ஒரு வகை.

நேற்று வரை நன்றாக இருந்த ஒருவர் திடீரென்று புரிந்து கொள்ள முடியாத அளவில் மாற்றமடையலாம். தூக்கம் வராமல் தவிப்பார். கத்திக் கூச்சல் போட்டுக் கலாட்டா செய்வார். அடிக்கடி பொருட்களைப் போட்டு உடைப்பது என்று மற்றவர்களைச் சங்கடத்தில் ஆழ்த்துகிற மாதிரி காரியங்களைச் செய்வார். 'சைக்கியாட்ரிக் எமர்ஜென்ஸி' என்று இந்த வகையைக் குறிப்பிடுவார்கள். இவர்களைத் தாமதப்படுத்தாமல் உடனே ஒரு மனநோய் நிபுணரிடம் அழைத்துச் செல்ல வேண்டும். ரொம்ப நாள் அப்படியே விட்டு வைப்பது தவறு.

இந்த மாதிரி நோயாளிகளைக் கிராமங்களில் கட்டிப் போட்டு வைப்பார்கள். இல்லையென்றால் ஒரு அறைக்குள் தள்ளிப் பூட்டி வைப்பார்கள். தானே சரியாகி விடும் என்ற நம்பிக்கை பல நோய்களில் தவறாகி விடும். காயம் பண்ணிக் கொள்வது, சாப்பிடாமல் இருப்பது என்று வேறு பல பிரச்சினைகள் ஏற்பட்டுவிடக் கூடும்.

**உணர்ச்சிவசப்படுதல்:**
**(EXCITEMENT MANIA)**

எண்ணத்தில் ஏற்படுகிற வேகம், சுறுசுறுப்பான மனநிலை இவை காரணமாக இந்த மனநோய் ஏற்படலாம். காரணம் தெரிகிறதோ இல்லையோ, மற்ற நோய்களைப் போல் இதற்கும் உடனே வைத்தியம் தொடங்கி நோயைக்கட்டுப் படுத்த வேண்டும்.

சிறு குழந்தைகள் மனநோயால் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. கொஞ்சம் வளர்ந்து பெரியவர்களாகும் போது தான் 'இந்தத் தகராறுகள் ஏற்படுகின்றன. நடுத்தர' வயதினருக்கும், வயதானவர்களுக்கும் இந்த நோய் அதிகமாக வரக் கூடும்.

மனநோய்க்குத் தொடர்ச்சியான வைத்தியம் தான் அவசியம். நோயாளியை ஏற்கெனவே ஒரு டாக்டரிடம் காண்பித்து மருந்து தந்திருப்பார்கள். அப்புறம் மருந்தை நிறுத்தியிருக்கக் கூடும்.

இந்த மாதிரி நேரங்களில் பக்கத்தில் யாரும் டாக்டர்கள் இல்லை என்றால் பழைய மருந்தைக் கூடத் தந்து, சிகிச்சையைத் தொடர்வது நல்லது. ஊசி மூலம் செலுத்துகிற மருந்துக்காக டாக்டரிடம் போயாக வேண்டும்.

**மனநோயா? கண்டறிவது எப்படி?**

மனநோய் எப்போது முதல் எப்படி ஏற்பட்டது என்னும் விவரங்களை, நோயாளியின் நெருங்கிய உறவினரிடமிருந்து கேட்டறிய வேண்டும். தலைவலி வாந்தி போன்றவை இருந்து அப்புறம் மன நோய் ஏற்பட்டிருக்கலாம். மூளைக் கட்டி போன்ற நோய்களால் இப்படி நேரவும் வாய்ப்பு உண்டு. ஆகையால் தக்க சோதனைகளை உடனே செய்ய வேண்டியிருக்கும். 'இ. ஸி. ஜி. . 'கேட் ஸ்கான் போன்ற சோதனைகள் மூலம் உடலில் ஏற்பட்டுள்ள இரத்த அழுத்தம் மூளைக்கட்டி போன்ற நோய்களைக் கண்டறிய முடியும். இவற்றைக் குணப்படுத்தினாலே மனநோய் இருந்தால் அதுவும் கட்டுப்படுத்தப்பட்டு விடும். இப்போதெல்லாம் நிறைய மருந்துகள் வந்து விட்டன. நேற்று கிடைத்த மருந்தை விட இன்னும் வசதியானதாக, சக்தி மிகுந்ததாகப் புதிய புதிய மருந்துகள் வந்து கொண்டேயிருக்கின்றன. லிதியம் என்று ஒரு மருந்து மனத்தை அமைதிப்படுத்த ட்ராங்க்விலைசர் மாதிரி, பெரிதும் உதவுகிறது.



○ டாக்டர் சோமசுந்தரம்

**வயதானவர்களுக்கு வரும் மனநோய்:**

வயதானவர்களுக்கு மனத்தளர்ச்சி, அயர்வு (DEPRESSION) என்று பல காரணங்களால் மனநோய் ஏற்படுகிறது. வயதான காலத்தில் துணைவரை இழந்து விடுகிற நிலையில், குழந்தைகள், கல்யாணம், உத்தியோகம் என்று வெளியே போய், வெறிச் சோடி விட்ட வீட்டில் தனி

மையில் இருக்க நேர்வ தால்; இன்னும் கொஞ்ச நாளில் செத்துப் போய் விடப் போகிறோமே என்ற பரபரப்பு; ரிடையர் மெண்ட், பொருளாதாரப் பிரச்சினைகள் என்று பல பிரச்சினைகளைச் சொல்ல லாம்.

இரத்தஅழுத்தம்போன்ற நோய்களால் மனநோய் ஏற்படும் என்று சொல்ல முடியாது. ஆனாலும் இரண் டும் சேர்ந்தே ஒன்றுக் கொன்று துணையாக வந்து விடுகிறதும் உண்டு.

**போதைப்பழக்கம்: (ADDICTIONS)**

போதை மருந்துப்பழக் கம் இப்போது சமீப கால மாக அதிகமாகப் பேசப் படுகிற விஷயமாகிவிட்டது. மருந்துக்கு அடிமை யாவோமா, விடுபட முடி யுமா என்பதெல்லாம் தேவையற்ற சிந்தனைகள். எல்லாவற்றிலிருந்தும்நிச்சய மாக விடுபட முடியும். கஞ்சா, மருந்து, சிகரெட், புகையிலை எல்லாமே 'அடிக் ஷன்'தான். தூக்க மாத் திரைகளையும் இதில் சேர்த்துக் கொள்ளலாம்.

**தூக்கமின்மை: (INSOMNIA)**

ஒருநாள் இரண்டு நாள் தூக்கம் இல்லாவிட்டால் ஒன்றும் பிரமாதமான தப்பு இல்லை. எட்டு மணி நேரம் தூங்கியாக வேண்டும் என்ப தெல்லாம் தவறான நம் பிக்கைதான். பிறந்த குழந்தை இருபது மணி தூங்குகிறது. வயதான வர்கள் நான்கு மணிநேரம் தூங்குவார்கள். முக்கிய மான சமாசாரம் பற்றி யோசனை பண்ணிக் கொண் டிருப்போம் தூக்கம்வராது. பல்வலி வந்தால் தூக்கம் கெட்டுவிடும். வலி போனால் அல்லது பல்லையே எடுத்து விட்டால் தானே தூக்கம் வந்து விடுகிறது. நேரு போன்ற பெரிய வர்கள் நாலு ஜன்மத்தில் சாதிக்க வேண்டிய காரியங் களை ஒரே பிறவியில் சாதிக்க வேண்டியிருந்தது. நான்கு மணி, மூன்று மணி நேரம் தான் அவர்களால் தூங்க முடிந்தது. தொடர்ந்து தூக்கமின்மை ஏற்பட்டால் மட்டுமே நோய்கள் ஏதேனும்காரண மாயிருக்கலாம். இதற்காக டாக்டரை ஆலோசிக்க லாம்.

**ஆர்வக் கோளாறுகள்:**

'அடிக்ஷன்' ஏற்பட என்ன காரணம்? பலருக்குச் சிறு வயதிலேயே ஏற்படுகிற ஆர்வம் ஒரு காரணம். அப்பா சிகரெட் பிடிக்கிறவ ராய் இருந்தால் அவரை மாதிரி ஆக வேண்டும் என் கிற ஆசை 16, 17 வயதில் ஏற்படக்கூடும். கல்லூரிக்குப் போனவுடன் மற்ற மாண வர்களைப் பார்த்து அவர் களுக்குச் சமதையாய்த் தானும் நடந்து கொள்ள வேண்டும் என்கிற நினைப்பு வரும். இதெல்லாம் ஒரு வரைப் பார்த்து மற்ற வர்கள் கற்றுக் கொள்கிற விஷயங்கள். ஒரு வரையில் இதனை வளர்ச்சியின் அறி குறி என்று கூடச் சொல்ல லாம். இப்படியெல்லாம் இருப்பது தான் நல்லது போலும் என்று அவர்களே நினைத்துக் கொள்கிறார்கள்.

பையன்களின் குடும்பச் சூழலும் இது போன்ற வேண்டாத பழக்கங்கள் ஏற்படக் காரணமாக அமைந்து விடும். பெற்றோ ரிடையே ஏற்படுகிற சச்சர வுகள், தொந்தரவுகள், வீட் டில் பலவிதமான கஷ் டங்கள் எல்லாவற்றையும் மறந்து கவலைகளை மூழ் கடித்துக் கொள்ளஇவர்கள் தேடுகிற ஒரு வழி இது.

சாதாரண மனநிலைஉள் ளவர்கள் என்று மட்டு மில்லை. மிகவும் உறுதியான மனநிலை உடையவர்களுக் கும் கூட இந்தப் பழக்கங்கள் ஏற்படுகின்றன. அவரவர் களின் தனிப்பட்ட எண் ணங்களும் கருத்துக்களுமே இதற்குக் காரணம். மேல் நாடுகளில் 'செக்ஸ்' கல்வி யைப் போல், மனநிலை உறுதிப்படவும் கற்றுத் தருகிறார்கள்.

**செல்லம் கொடுக்கலாமா?**

குழந்தைகளிடம் காணப் படுகிற முரட்டு சுபாவம் எப்படிச் சமாளிக்கப்பட வேண்டும்? பாதிராத்திரி யில் பையன் சாக்லேட் கேட்கிறான் என்று போய் வாங்கித் தருகிற மாதிரி பெரியவர்கள் மிகவும் விட்டுக் கொடுத்துப்போவது தவறு. செல்லம் தரவேண் டியது தான். ஆனால் கண் டிப்பும் கூடவே இருக்க வேண்டும். நல்லது எது கெட்டது எது என்று ஆரம் பம் முதலே அவர்களுக்கு



எடுத்துச் சொல்லிப் பழக்கப் படுத்தியாக வேண்டும். அனாவசியமாகக் குழந்தைகளிடம் எரிந்து விழுவதும் கூடாது. சில சமயங்களில் ரொம்பச் செல்லம் கொடுப்பது, சில நேரங்களில் கண்டாலே எரிந்து விழுவது என்று இருந்தால் குழந்தைகளுக்கே ஒரு மாதிரி சந்தேகம் வரும். அப்பாவிடம் எப்போது எதைக் கேட்பது என்று குழப்பம் ஏற்படும்.

## தற்கொலை முயற்சியும், மனநோயும்:

தற்கொலை மனப்பான்மை, சில நேரங்களில், சற்றும் எதிர்பார்க்க முடியாத பேர்வழிகளிடம் கூட வெளிப்படுகிறது. ஒவ்வொரு பருவத்திலும் இதற்கான காரணங்கள் மாறிக் கொண்டே இருக்கும். பள்ளிக்கூட கல்லூரி நாட்களில் தேர்வுகளில் தோல்வி அடைவது.... இது ஒரு விஷயமா? இந்தத் தேர்வு போனால் அப்புறம் தேர்வு இல்லாமலா போய் விட்டது? அப்புறம் காதல் தோல்விகள். வயதானால் குடும்பக் கவலைகள், பணப் பற்றாக் குறை, அலுவலகத் தொந்தரவுகள். இப்படி வந்து கொண்டேதான் இருக்கும். எல்லாவற்றிலும் தளர்ந்து போய் விடலாமா? கவலையோ, சோர்வோ, ஓர் அளவு தான் இருக்க வேண்டும். அவசரப்படாமல், நிதானமாக எதையும் எதிர் நோக்குகிற மனப்பக்குவத்தை வளர்த்துக்கொள்வதுதான் வழி. வாழ்க்கையில் அபாரமான வெற்றி பெற்றவர்கள் கூடத் தற்கொலையில் முடிந்து விடுகிறார்கள். 'அக்கரைப்பச்சை' யாக நாம் நினைத்துக் கொண்டிருக்க, அவர்கள் உள் மனசுக்குள் வெளியே தெரியாத வேதனைகள் எவ்வளவோ இருந்திருக்கும். இவையெல்லாம் வயதானவர்களிடையேதான் அதிகம். போதைப் பொருட்களால் வருகிற வினை இதில் நிறைய உண்டு.

## தடுப்பது எப்படி?

மனநோய் வராமல் தடுக்க முடியும் என்று சொல்வதற்கில்லை. பல நேரங்களில் ஏன், ஏற்பட்டது என்பதையே சரியாகப் புரிந்து கொள்ள முடிவதில்லை. மருந்து தரலாம், நோயைக் கட்டுப்படுத்தலாம், குணப்படுத்தி விட முடியும் என்று சொல்வதற்கில்லை.

## தியானங்களும் மனக் கட்டுப்பாடும்:

பூஜை, யோகம், தியானம் என்றெல்லாம் சொல்கிறார்கள். இவையெல்லாம் மனநோயைக் குணப்படுத்த உதவும் என்பதற்கில்லை. மூன்று நாள் நான்குநாளில் யாராவது குணப்படுத்தி விடுகிறேன் என்று வந்தால் அந்த ஆசாமி மீது சந்தேகப்பட வேண்டியது தான். மனசில் நிம்மதி ஏற்பட ஓரளவுதான் இவை உதவ முடியும்.

முன் ஜன்ம நினைவு (பாராஸைக்காலஜி), அனுமார் கனவில் வந்துசொன்னார், இயேசு சொன்னார் என்றெல்லாம் சிலர் கூறுகிறார்கள். இதெல்லாம் மனசில் தோன்றுகிற மயக்கங்கள் தான். சொல்கிறவன் எப்படிப்பட்டவன் என்று பார்க்க வேண்டும். அந்த நாளில் யேசுநாதர், நபிகள் நாயகம், 'இராமகிருஷ்ண பரமஹம்ஸர் இவர்களெல்லாம் சொன்னால் அர்த்தமாயிருக்கிறது. இவர்களெல்லாம் ஞானிகள். இப்போது மனநோய் மருத்துவமனையிலிருப்பவனெல்லாம் கூட இப்படிஆரம்பித்துவிட்டால் என்ன சொல்வது? சொல்கிறவனுக்கு ஒரு யோக்கியதை வேண்டாமா?

## பாலுணர்வு வக்கிரங்கள்:

பாலுணர்வு வக்கிரங்கள் எல்லாம் மனநோய் ஆகி விட முடியாது. இப்போதெல்லாம் மேலைநாடுகளில் ஹோமோ செக்ஷுவலைக் கூடத் தவறாக எண்ணுவதில்லை. மற்றவர்களுக்கு இடைஞ்சலாய் இல்லாத வகையில் இருந்தால் ஒழியட்டும் என்று விட்டுவிடுவார்கள். படம் பார்ப்பது மற்ற வகைகளில் கிளர்ச்சியடைவது என்று தொடங்கி மனைவியிடம் ஒருவன் சரிவர நடந்து கொள்ள முடியாமல் போகுமானால் மட்டுமே இதை ஒரு நோயாகக் கருத முடியும். அடிப்பது, துன்புறுத்துவது போன்ற வழக்கத்துக்கு முரணான நடத்தைகளைக் கவனிக்க வேண்டியதுதான்.

## வலிப்பும், மனநோயும்

'எபிலப்ஸி' என்னும் வலிப்பு நோய் உள்ளவர்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேருக்குமேல் சாதாரணமான நிலையில்—நார்மலாக உள்ளவர்கள் தான். மிகவும் அற்பமான எண்ணிக்கையில் தான் நோயின் தீவிரத் தன்மையில் வித்தியாசம் இருக்கும். பள்ளிக்கூடம் போகக் கூடாது, சைக்கிள் ஓட்டக் கூடாது என்று இவர்களை ஒதுக்கி வைப்பது மனநிலையைப் பாதிக்கக்கூடும்.

ஹிஸ்டீரியா — என்பது பெண்களிடையே அதிகம் ஏற்படுகிறது. பொதுவாகப் பெண்கள் அதிகம்உணர்ச்சி வசப்படுகிறவர்கள். பெண்களின் வாழ்க்கை முறை, சமுதாயத்தில் அவர்களுக்கு உள்ள இடம் போன்றவை சில நேரங்களில் அவர்களைப் பாதிக்கக் கூடும். மற்றபடி பெண்களுக்கு என்று தனிப்பட்ட மன நோய்கள்உண்டு என்று சொல்வதற்கில்லை.

முன்பெல்லாம் மனநோய் மருத்துவர்களிடம் போக, ஆலோசனை கேட்கத் தயங்குவார்கள். பயப்படுவார்கள். இப்போது அந்த நிலை மாறி விட்டது. இருதய நோய் நிபுணர், கண் நோய் நிபுணர் என்கிற மாதிரி இவர்களையும் மதிக்கப் பழகி விட்டார்கள்.

(டாக்டர் சோமசுந்தரம்—டாக்டர் வியாஸ் உரையாடலிலிருந்து தொகுப்பு.)




# பெருமைக்குரிய சாதனை!

மீ.ப.சோமு

இருபத்தைந்து அல்லது முப்பது ஆண்டுகள் செக்குமாடு மாதிரி ஆபீஸுக்கும் வீட்டுக்குமாகவே வட்டம் சுற்றிக் கொண்டிருந்து விட்டு, ஓய்வுபெறுகிற அரசாங்க அதிகாரிகளிலே பலருக்கு நேரம் போவதில்லை! ஓய்வுக் காலத்தை எப்படிக்கழிப்பது என்று புரியாமல் மனநோய்களுக்கும் உடல் நோய்களுக்கும் உள்ளாகிறவர்கள் பலர்! நேரம் போதவில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள், நேரம் போகவில்லை என்கிறார்கள்! இவர்களுக்கு ஏதாவது வேலை வேண்டும்!

ஓய்வு பெற்ற முதியோர்களைப் போலவே, வேலை இல்லாமல் அவதிப்படுகிற இளைஞர்கள், படித்துப் பட்டம் பெற்றவர்கள் உண்டு!

இந்த இரண்டு பிரிவினர்களும் முனைந்து ஈடுபடக்கூடிய விதத்தில் இப்போது பற்பல சமுதாய அமைப்புக்கள் இயங்கிவருகின்றன. நாட்டின் வளர்ச்சிக்கும் சமுதாய முன்னேற்றத்துக்கும் இவை மிகவும் அவசியமே! ஆனால் எல்லா மாடுகளும் ஒரே தொழுவிலேபோய் விழவேண்டுமா?

ஊனமுற்றோர் நலம், மாதர் முன்னேற்றம், அனாதைகள் பராமரிப்பு,வழுக்கி விழுந்தோர் மறுவாழ்வு என்று இவற்றைப் போன்ற ஒரு சில அமைப்புக்களில் மட்டுந்தானா எல்லாரும்ஈடுபட வேண்டும்? புதிய தொண்டுகளைப் பற்றியும் சிந்திக்கலாம் அல்லவா?

சென்னையிலும், நமது மாநிலத்தின் வேறு பல நகரங்களிலும், ஏன், சிற்றூர்களிலுங்கூடப் புதிது புதிதாகப் பலகுடியிருப்புகள் தோன்றியுள்ளன. தோன்றியும் வருகின்றன. இவற்றில் எத்தனையோ விதமான சமுதாய சேவைகள் இயற்ற இடம் இருக்கிறது!

ஒரு குடியிருப்பை எடுத்துக் கொண்டால் அதிலுள்ள நூற்றுக்கணக்கான வீடுகளின் தலைவர்கள், சில வீடுகளில் தலைவியர்களுங் கூட, வேலை பார்க்க அலுவலகம் செல்கிறவர்கள்! ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள் மட்டுமே



வீட்டிலே இவர்களைப் பார்க்க முடியும்! பிள்ளைகளோ பள்ளிக்கூடம் போய் விடுகிறார்கள். இப்படிப்பட்ட வீடுகளில் பொழுது விடிந்தால் பொழுது விழுந்தால் எத்தனையோ பல பிரச்னைகள் எழுகின்றன!

திடீரென்று மாடியிலே உள்ள தொட்டிக்குத் தண்ணீரை ஏற்றுகிற 'பம்ப்' இயந்திரம் பழுதாகி விடுகிறது! திடீரென்று மின்சார இணைப்பு கெட்டுவிடுகிறது! ஆபீஸுக்குப்புறப்படுகிற நேரம் பார்த்து 'ஸ்கூட்டர்' மறியல் செய்கிறது. சைக்கிள் 'டபார்' என்கிறது! பாவம், வீட்டுத் தலைவர் படுகிற பாடு! அடுத்த ஞாயிற்றுக்கிழமை வரை இந்த மனித இயந்திரத்தின் இயக்கமுமே பழுதாகி விடுகிறது! இதற்கெல்லாம் அவருக்கு நேரமேது?

காலை எட்டு மணிக்கு, சிலர் அதற்கு முன்பே, வெந்ததும் வேகாததுமாக வயிற்றிலே கொட்டிக் கொண்டு, கையிலே ஒரு பொட்டலத்தையும் எடுத்துக் கொண்டு, பல்லவனையோ,சோழனையோ,பெரியாரையோ அல்லது புகை வண்டி அல்லது மின்சார மகாதேவரையோ நம்பி அவசரம் அவசரமாக ஓட வேண்டும்! வீடு திரும்ப இரவு எட்டு மணியோ, ஒன்பதோ! பத்தோ! சிலருக்கு வரும்போது ஒரு அம்பாரம் 'பைல்' கட்டும் கூடவே வரும்!

தகப்பனார்களிலே சிலர் தங்கள் குழந்தைகளை ஞாயிற்றுக் கிழமை தான் பார்க்கிறார்கள்! குழந்தைகளுக்கும் அந்த ஒரே ஒரு திருநாளிலே தான் பித்ரு தரிசனம்! காலையில் குழந்தைகள் எழுந்திருக்கு முன்பே இவர் புறப்பட்டு விடுவார். இரவில் இவர் வரும் போது குழந்தைகள் தூங்கி விடும்!

சம்சார சாகரத்தை இப்படிக் கடந்து வருகிற நகரவாசி, பாவம், மெக்கானிக்குகளைத் தேட நேரம் ஏது? வீட்டு அம்மாள் அதிகாலையில் பாடுகிற இந்த முகாரியை ஒரு குரல் கேட்டுக் கொண்டே பல்லவனை நோக்கி ஓடவேண்டிய நிலை!

இப்படிப்பட்ட அலுவலர்கள் நிரம்பிய குடியிருப்புக்கள் ஏராளம்!



உலகிலேயே மிகச் சுருக்கமான உயிலை எழுதியவர் ஜெர்மனியைச் சேர்ந்த கார்ல் டாங்ஜ். இவர் தமது உயிலில் எழுதியிருந்த வார்த்தைகள் மூன்றே மூன்றுதான்: ''எல்லாம் என் மனைவிக்கே.''

—ஜா. ரவி.



சில வீட்டுத் தலைவர்களுக்கு வெளியூர்களிலே வேலை! அத்தனை இக்கட்டுக்களையும் வீட்டு அம்மாள் தான் தன்னந்தனியாகச் சமாளித்து மாள வேண்டும்.

லாண்டரிக்குத் துணி அனுப்புவது, பிள்ளைகளுக்கு பீஸ் கட்டுவது, மின்சாரக் கட்டணத்தைத் தேதி தவறாமல் இபி அலுவலகத்துக்குக் கொண்டு செல்வது, வீட்டு வரி, தண்ணீர்வரி, இவற்றிற்கு மத்தியிலே இயந்திரக் கோளாறுகள்! அப்பப்பா! நகர வாழ்க்கை அப்படி ஆகி விட்டது! எல்லோரும் வேலைக்காரர் வைத்துக் கட்டி வருமா?

இப்படிப்பட்ட குடியிருப்புக்களிலே அன்றாடத் தேவைகளுக்கு உதவி செய்யக் கூடிய சமூகசேவா நிலையங்கள், தொண்டர் மன்றங்கள், அங்கங்கே தோன்றினால் எவ்வளவு வசதியாக இருக்கும்!

'எங்கள் வீட்டில் பம்ப் செட் ஓடவில்லை.' 'எங்கள் வீட்டில் திடீரென்று மின் இணைப்பு பழுதாகி விட்டது', 'எங்கள் வீட்டில் குழாய் டப் என்று உடைந்து விட்டது' இப்படி அன்றாட விபத்துக்கள், அன்றாடத் தேவைகளைக் கவனிப்பதற்குப் பொது அமைப்புக்கள் ஏற்படுத்தி, நேரம் போகாமல் அவதிப்படுகிறவர்கள் எல்லாம் இப்படிப்பட்ட சமூக சேவையில் ஈடுபட்டால் என்ன? விறுவிறு என்று நேரம் போவதோடு, எத்தனை குடும்பங்களுக்கு எத்தனை தொல்லைகள் தீரும்!

சிறுசிறு அமைப்புக்களாகத் தொடங்கிப் பிறகு இவை ஒன்றியங்களாகிப் பிறகு நகராட்சியோடு மல்யுத்தம் செய்வதற்குரிய பெரிய பெரிய சமுதாயத் தொண்டு நிலையங்களாகவே வளர முடியுமே!

மேனாடுகளில் இப்படிப்பட்ட அமைப்புக்கள் பல உண்டு. பழுது பார்ப்பதற்குரிய அடக்கச் செலவோடு ஒரு சிறிய கட்டணத்தை மட்டும் அந்தச் சேவைக்காக வசூலித்துக் கொள்கிறார்கள்) 'ஸர்வீஸ் சார்ஜஸ்' என்று! ஓய்வுபெற்ற அதிகாரிகளோடு, பட்டம் பெற்று வேலை இல்லாமல் தவிக்கிற இளைஞர்களும் இந்த அமைப்புக்களிலே சம்பளத்துக்கு நியமிக்கப் பெறலாம். சேவைக்குச் சேவை, வேலைக்கு வேலை, சமுதாயத்துக்கோ மிகப் பெரிய வசதி! தினந்தோறும் அவரவருடைய மேற்பார்வைக்கு உட்பட்ட வீடுகளுக்கு ஒரு சுற்றுச் சுற்றி வந்து, தேவைகளைக் கவனித்துக் கொள்ளவும் தோதாக இருக்கும் இந்த ஏற்பாடு!

• • •

சில வாரங்களுக்கு முன்பு தமிழகம் பெருமைப் படக் கூடிய ஒரு நற்செய்தியைப் படித்தேன். டாக்டர் நரேந்திரன் அவர்களின் முயற்சியினாலும், திறமையினாலும் சென்னை அரசு மருத்துவ மனையில் ஒரு புதிய சோதனைக் கருவி உருவாகியிருக்கிறது.

ரஷ்ய நாட்டுப் பல்கலைக் கழகத்தின் ஆய்வுக் கூடத்தில் நடைபெற்றுள்ள சில அரிய, பெரிய சோதனைகள் பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன்பு வெளியான இரண்டு ஆங்கில நூல்களைப் படித்த போது, எனக்கு உடம்பு சிலிர்த்தது. அந்தப் புதிய கண்டுபிடிப்புக்களில் ஒன்று ''ஈதரிக்டபின்'' என்ற நுண்ணுடலைப் பற்றியது.

இந்த உலகிலுள்ள நிற்பன, நடப்பன, பறப்பன எல்லா உயிரினங்களுக்கும் அவற்றின் உடம்பை மேவி இன்னொரு ஒளி (உடம்பு) வெளியே இருக்கிறது. அதைப் புகைப் படம் எடுக்கலாம்.

இந்த ஒளி உடம்பிலே மாறுதல் ஏற்பட்ட பிறகே நமது தூல உடம்பில் அந்த மாறுதல் தாவுகிறது!' ஞானிகளுக்கும், யோகிகளுக்கும் இந்த ஒளி வட்டம் மிகமிகப் பிரகாசமாக ஒளிர்கிறது. நம் ஓவியர்களும், சிற்பிகளும் தேவதைகளுக்கும் முனிவர்களுக்கும் ஒளி வாசி அல்லது பிரபையை முகத்தைச்சுற்றி வட்டமாக உருவகிப்பது இதுவே!

அரிய விஞ்ஞானக் கருவிகளைக் கொண்டு ரஷ்யாவிலும், வேறு சில கம்யூனிச நாடுகளிலும் இந்த ஒளிப் படங்களைப் புகைப்படம் எடுத்து அற்புதமான பேருண்மைகளை வெளியிட்டிருக்கிறார்கள். இந்த ஆன்ம உண்மைகளைச் சில ஆண்டுகளுக்கு முன்பு படித்த போது எனக்கு நமது நாட்டுச் சித்தர்களின் இலக்கியத்திலுள்ள பல பாடல்கள் நினைவுக்கு வந்தன.

இப்போது நமது சென்னை மருத்துவமனையிலே இந்தக் கருவியை அமைத்திருப்பதோடு, டாக்டர் நரேந்திரன் அவர்கள் இதன் பயனைப் பற்றி விரிவாக விளக்கியிருக்கிறார்.

நோய்களை ஆராய்வதற்கும், ஒரு மனிதரை ஒரு பெரிய நோய் தாக்கப் போகிறது என்ற அறிகுறியை முன்கூட்டியே தெரிந்து கொள்வதற்கும், இந்தக் கருவி அரியதோர் சாதனமாகும்.

# பாலாஜி வெட்கிரைண்டர்

**ஊறவைத்த உணவு தானியங்கள், மசாலா, சட்னி போன்றவைகள்
அரைப்பதற்கு வீட்டிற்குத் தேவையான ஈர அரவை மிஷின்கள்
தூசி துரும்புகள் விழாமல் பாதுகாக்கும் நவீன ரிங் வசதியுடன்.**



வீட்டின் தேவைக்கும்
உணவு விடுதி
சிற்றுண்டி நிலையம்
மற்றும்
தொழில் ரீதியான
வகைகளுக்கும்

- சத்தமில்லாத ஓட்டம்
- பாதுகாப்புள்ள அமைப்பு முறை
- தேவைக்குத் தகுந்தாற் போன்ற அளவுகள்
- நீடித்த உழைப்பு
- எளிதான பராமரிப்பு

விற்பனையாளர்:

## அருணா & கோ.

**தலைமை நிலையம்:**
340, T.H. ரோடு
சென்னை-600 021.
தொலைபேசி: 553644 552728

534, T.H. ரோடு
சென்னை-600 021.

**கிளைகள்:**
1, நரசிங்கபுரம் தெரு
சென்னை-600 002.
தொலைபேசி: 844251

அருணா & கம்பெனி
669, அண்ணா சாலை,
ஆயிரம் விளக்கு, சென்னை-600 006 தொலைபேசி: 89997

# அபிமானவல்லி



## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 22

### புரு விடு தூது

சேரமான் தாணுரவிக்குப் பொழுது போகவில்லை. குவளை, கடம்பமாதேவி, இளங்கோப்பிச்சி ஆகியோருடன் சொக்கட்டான் ஆடினான்: ஒருநாள் சென்றது: அடுத்த நாள் அலுத்தது.

தினந்தோறும் முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட வேண்டிய அம்சங்களில் இளங்கோப்பிச்சியும் குவளையும் சேரமானைக் கலந்தாலோசிக்கத் தவறவில்லை. அதுவும் அரை நாழிகை அல்லது ஒருநாழிகைக்கு மேல் நீடிக்கவில்லை.

உண்ண, உறங்க, உடற்பயிற்சி செய்ய நேரம் ஒதுக்கினான். பலனில்லை. காலம் அவன் முன் நீண்டு கிடந்தது. ஆதித்தன் படைகளுடன் சென்ற பிறகு அரண்மனை என்ன, தலைநகரமே வெறிச்சோடிக் கிடந்தது.

என்ன செய்வதென்று புரியாமல் வாளாவிருந்த போதெல்லாம் அவன் மனக்கண் முன் அபிமானவல்லி தோன்றினாள். தஞ்சையில் அவனுக்கு வரவேற்பு தரப்பட்ட அன்று அவள் அரசவையில் நடனமாடித் தன்னை மகிழ்வித்ததை எண்ணிப் பார்த்தான். அவள் நிருத்தியத்தில் தன் மனமும் சதிராட மருதோன்றியிட்டு அலங்கரிக்கப்பட்டிருந்த அவள் கரங்களில் தான் முத்தாரங்களை வழிய விட்டதை நினைவு கூர்ந்தான். அப்போது அவள் எழில்களைத் தான் எடை போட்டதையும் அதை உணர்ந்து அவள் புருவங்களை உயர்த்திப் புன்னகையை அதரங்களில் நெளிய விட்டதையும் மீண்டுமொருமுறை மன அரங்கில் கண்டான். மன்மதனின் வில்லாகப் புருவம் வளைய, கண்மலர் அம்புகளை அவள் என் மீது செலுத்தியது எதற்காக? என்னிடம் ஏதேனும் கவர்ச்சியை அவள் கண்டாளா? அல்லது என்னை ஈர்ப்பதொன்றே அவள் நோக்கமா? தன் எழிலுக்குச் சோழன் மட்டுமல்ல மூவேந்தருமே அடிமைகள் என்று தனக்குத் தானே நிரூபித்துக் கொள்ள விரும்பினாளா? ஒருவேளை அவளுடைய ஏளனப் புன்னகையைத்தான் நான் இசைவுப் புன்னகையாகத் தப்பர்த்தம் செய்து கொண்டேனா?

அவள் ராஜநர்த்தகி மட்டுமல்ல; ஆதித்தனின் ஆசை நாயகியும் கூட என்று ஊகிக்க இடமிருந்தது. என் மனம் இப்படி அலைபாய்வதை உணர்ந்தால் ஆதித்தன் என்ன நினைப்பான்? எப்படி நடந்து கொள்வான்?

பட்டுப் பூச்சி வண்ணச் சிறகடித்துப் பறப்பது போல் படபடத்த இமைகள், புன்னகையில் இன்ப மேடுகளாய்க் குவிந்த கன்னங்கள், நீர் அருந்தினாலும் இறங்குவதைக் காணக் கூடுமோ என்று சந்தேகிக்க வைத்த நீண்ட பளிங்குக் கழுத்து; முந்தானை நில்லாமல் சரியச் செய்த வழுவழுப்பான தோள்கள்; அவற்றை வருத்திய பாரமான நெஞ்சகங்கள்; மதர்த்த நிலையிலும் தளர்வறியாக் கலசங்கள்; பாரிஜாத மலர் போன்ற நாபிச் சுழி; நீண்டும் நிறைந்தும் நடன உடையில் தன் லாவண்யத்தை வெளிக் கோடிட்டுக் காட்டிய கால்கள்; அசைவிலும் அசைவற்ற நிலையிலும் நினைவழித்த பின்னழகுகள் எல்லாம் தனித்தனியாகவும் ஒட்டு மொத்தமாகவும் அவன் மனக்கண் முன் தோன்றி அலைக்கழித்தன. வேலையின்றிச் சோம்பியிருந்ததால்தான் அவள் நினைவு அடிக்கடி ஏற்படுகிறது என்று அவன் வெறுப்புற்றான்.

நம்பியாண்டார் நம்பி தலைநகர் திரும்பியிருந்தார். தாம் சென்று தரிசித்த தலங்கள் பற்றியும் ஆங்காங்கே கோயில் கொண்டுள்ள இறைவனின் சிறப்புகளைக் குறித்தும் சொன்னார். சிவனடியார்களைப் பற்றிப் பேசினார். அவர்தம் வாழ்க்கை வரலாறுகளை விவரித்தார். மூவர் பாடிய தேவாரங்கள் பலவற்றைப் பாடி அவற்றின் இலக்கிய நயங்களை உணரச் செய்தார். கன்னரதேவன் அவர் கூறியவற்றைத் தாணுரவியை விடவும் அதிகமாக ரசித்தான். சேரமானுக்கு இரு தினங்களுக்கு மேல் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை.

''என் நாட்டை விட்டுச் சோழநாடு வந்திருக்கிறேன். அங்கே என்னென்ன பிரச்னைகளோ... என் மனம் ஒரு நிலையில் இல்லை. மகாராணி அனுமதி தந்தால் கிளம்பலாம்'' என்றான்.

''வேந்தே! தங்கள் நண்பர் போர்க்களத்திலிருந்துதிரும்பியதும் அவர் விழிகள் கூட்டத்தில் உங்களைத் தேடித்தானே துழாவும். அவரைச் சந்திக்காமல் திரும்புவது பற்றிச் சிந்திக்கவும் கூடுமோ?'' என்றாள் இளங்கோப்பிச்சி.

''மன்னவா! நம்பகமான, திறமை மிக்க அமாத்தியரிடம் தானே பொறுப்புகளை ஒப்படைத்து வந்துள்ளீர்கள், பிறகேன் கவலை?'' என்றாள் குவளை.

''இது கவலை அல்ல, சலிப்பு'' என்றாள் கடம்பமாதேவி.

புரிந்து கொண்டவளாக, இளங்கோப்பிச்சி, ''வேட்டைக்குப் போகலாமே'' என்று யோசனை கூறினாள். சேரமான்கண்கள் ஒளிபெற்றன. ஒருபகல் ஓய்வின்றி வேகமாய்



ஒடும்: ஓர் இரவு களைப்பினால் ஆழ்ந்த உறக்கம் ஆட்கொள்ளும் என்று கணக்குப் போட்டான். மறுநாளே புறப்பட்டான்.

கன்னரதேவனை உடன் அனுப்பினான் பிச்சி. இளவல் அதை விரும்பவில்லை எனினும் போகாதிருப்பது பண்பல்ல என்று அறிவுறுத்தினாள் குவளை. பேச்சுத்துணைக்காகவாவது உடன் செல்லவேண்டும் என்று இருவரும் அவனை வற்புறுத்த, வேண்டா வெறுப்பாகச் சென்றான்.

ஆதித்தனிடம் அளவாக உண்டு, நன்றாக வளர்ந்து, முறையாகப் பயின்ற வேட்டை நாய்களும் ராஜாளிகளும் இருந்தன. நாய்கள் முன்னே மோப்பம் பிடித்துப் பாய்ந்தோடக் கானகத்தின் தாழ்ந்த கிளைகளின் மீது பட்டுக் கொள்ளாமல் லாகவமாக உடலை வளைத்தும் குனிந்தும் அவற்றை விரைவாகப் பின்பற்றினான் தாணுரவி. அவனுடைய கவசமணிந்த இடது கரத்தில் ராஜாளி ஒன்று முகமூடி அணிந்த நிலையில் சடசடத்தாலும் பறக்க முடியாததால் கால்களால் கெட்டியாகப் பற்றியபடி அமர்ந்து அந்த வேகத்துக்கும் நெளிவு சுளிவுகளுக்கும் ஈடுகொடுத்துக் கொண்டிருந்தது. இளங்குமரனால் தாணுரவியின் வேகத்தையும் சமாளிக்க முடியவில்லை; அவனது கொடூரத்தையும் தாங்கிக் கொள்ள முடியவில்லை. காட்டுப்பன்றி ஒன்றைப் பின் துரத்திப் போய் வேலெறிந்து கொன்றதையே காணச் சகியாமல் கண்களை மூடிக் கொண்ட அவன், அடுத்து மான் ஒன்று தாணுரவியின் அம்பு பட்டு விழுந்து துடித்ததைப் பார்க்கப் பொலபொலவென்று பெருகிய கண்ணீரைச் சேரமான் கவனித்து விடாதவாறு சிரமப்பட்டு மறைத்தான். வேட்டை நாய் ஒன்றினிடம் காட்டுக் கோழி சிக்க, அதைப் பெருமிதத்துடன் கவ்வி வந்து சேரமான் காலடியில் வைத்தது. ராஜாளியின் முகமூடியைக் கழற்றி ஏவ அது ஒரு முயலைப் பொந்துக்குள் புகவிடாமல் தடுத்தது.

## அருள்வாக்கு

இப்போது நான் விசித்திரமாக ஒன்று சொல்லப் போகிறேன். பரோபகாரம் பண்ண வேண்டுமென்பதே நமக்கு உண்டான ஒரு 'கடன்'தான். பிதிர்கடன் என்கிறோம். சாஸ்திரத்திலேயே 'ருணத்ரயம்' என்று மூன்று கடன்களைச் சொல்லியிருக்கிறது. பிராமண ஜன்மா எடுத்தவன் ரிஷிகளிடமும் தேவர்களிடமும் பித்ருக்களிடமும் கடன்பட்டிருக்கிறானென்றும், வேதாத்யயனத்தால் ரிஷிக் கடன் தீர்கிறதென்றும் யக்ஞம் செய்வதால் தேவர் கடன் தீர்கிறதென்றும், புத்ர ஸந்ததி உண்டு பண்ணுவதால் பிதிர் கடன் தீர்கிறதென்றும் சொல்லியிருக்கிறது. வேத சாஸ்திரங்களிலேயே சொன்ன பஞ்ச மஹாயக்ஞங்களில் இந்த மூன்றுபேருக்கும் செய்ய வேண்டிய யக்ஞங்களோடு 'ந்ருயக்ஞம்' என்பதாக மற்ற மனிதர்களுக்குப் பண்ண வேண்டியதும் 'பூத யக்ஞம்' என்பதாக எல்லா உயிரினங்களுக்குமே பண்ண வேண்டியதும் விதிக்கப்பட்டிருக்கிறது. அதனால் மனுஷ்யர்கள், மிருகங்கள், பக்ஷிகள் எல்லாவற்றுக்கும் தாம் ஆற்ற வேண்டிய உபகாரத்தையும் 'கடன்' என்றே சேர்த்துக் கொள்ள வேண்டும்.

நாமாக ஒருத்தனுக்குத் தானம் பண்ணாமல் இருக்கலாம். எவனோ கடன் கேட்டால் கொடுக்க மாட்டேனென்று சொல்லலாம். ''கொடுத்தாவைத்திருக்கிறீர்? என் பணம். கொடுப்பதும் கொடுக்காததும்என் இஷ்டம் ''என்று சொல்லலாம். ஆனால் நாம் கடன்பட்டிருக்கும் போது கடன் கொடுத்தவன் திருப்பிக் கேட்டால் இப்படிச் சொல்ல முடியுமா? முடிகிறதோ இல்லையோ எப்பாடு பட்டாவது அவனுக்குக் கொடுத்துத் தீர்க்கத்தானே வேண்டும். இப்படித்தான் நாம் கடன்பட்டிருப்பவர்களுக்காக வேதம் பஞ்ச மஹாயக்ஞங்களை விதித்திருக்கிறது. கடன் என்றால் திருப்பித்தானே ஆகவேண்டும். ஆகவே இதைச் செய்ய மாட்டேன் என்று சொல்ல நமக்கு ரைட்டே இடையாது. நம் போன்ற மனுஷ்யர்களுக்கும் பசு, பக்ஷிகளுக்கும் உபகாரம் என்ற ரூபத்தில் யக்ஞம் செய்து அவற்றைத் திருப்திப்படுத்த வேண்டியது நம் கடமை.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

அடித்துக் கொத்திக் கொண்டு பறந்து வந்து தாணுரவியிடம் சமர்ப்பித்தது. பன்றி, மான், முயல், கோழி எல்லாமே பகலுணவுக்குத் தீயில் போகக்கப்பட்டன. நிணவாடையையும் வேட்டையின் கொடுமையையும் தாங்க முடியாத கன்னரதேவன், ''மன்னவா என்னை மன்னியுங்கள், உடல் நலம் சரியில்லை. நான் திரும்புகிறேன். தாங்கள் பிறகு சாவகாசமாக வரலாம்'' என்று கூறி வணங்கி நிமிர்ந்த வேகத்திலேயே சேரமானின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் குதிரை மீது பாய்ந்தேறி அதனைத் தட்டிவிட்டான்.

தாணுரவி அவனைத் தடுக்கவோ அழைக்கவோ முற்படவில்லை. அவனுக்குப் புரிந்து போயிற்று. கூடவே வேட்டையில் நாட்டமும் குறைந்து விட்டது. தான் சோழனின் அதிதி என்பதையும் ஆதித்தன் இல்லாத இந்நேரத்தில் இங்கு கன்னரதேவனே நாடாளும் அருகதை உள்ளவன் என்பதையும் உணர்ந்திருந்த அவனுக்கு விருந்தோம்பியவனின் மனம் வருந்த நடந்து கொள்ளப் பிடிக்கவில்லை. உடலைவிட உள்ளமே அதிகம் சோர்ந்து போகச் சீக்கிரமே அரண்மனைக்குத் திரும்பி விட்டான்.

அன்றிரவு அபிமானவல்லி அவன் கனவில் தோன்றினாள். 'என்ன, என்னைக் காண வர பயமா?' என்று கேட்டாள். 'என்னை நெருங்கினாலே நிதானம் தவறிவிடும் என்ற அச்சமா? அப்புறம் ஆதித்தனுக்கு என்ன பதில் கூறுவது என்ற தயக்கமா?' கேலியாகச் சிரித்தாள் அவள். அவன் ஆண்மைக்கு ஓர் அறைகூவலாக இருந்தது அந்த நகையொலி.

திடுக்கிட்டுக் கண் விழித்தவன்தான்; இரவெல்லாம் தூக்கமின்றிக் கழித்தான். மறுநாள் அவளைக் கண்டிப்பாகப் போய்ப் பார்த்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டவனாகத் தூரத்துப் பனைமரங்கள் மேற்கு வானில் செக்கர் பூசக் காத்திருந்தான். தனியே செல்ல மெய்யாலுமே அவனுக்கு யோசனையாக இருந்தது. தான் ஒருவேளை நிலை தடுமாறி நடந்து கொண்டால் அதை அவள் எப்படி ஏற்பாள்? பெருமைப் படுவாளா? அலட்சியப்படுத்துவாளா? ஒருவேளை ஏசி அனுப்பிவிட்டால் தன் கௌரவம் என்னாவது? ஆதித்தனிடம் அவளுக்கு எந்த அளவுக்கு ஈடுபாடு? அது கிடக்கட்டும், ஆதித்தனுக்கு அவளிடம் உள்ள பிரேமை எத்தகையது? ஆழ்ந்த காதலா? மேலோட்டமான காமமா? அபிமானவல்லியை முன்விட்டுத் தனக்கும் ஆதித்தனுக்கும் இடையேயான நட்பு முறிவதை அவன் விரும்பவில்லை. எனவே கடம்பமாதேவியைத் தன்னுடன் வருமாறு அழைத்தான். அநாவசிய வம்புப் பேச்சுக்கு இடம் தராத போதே ராஜநர்த்தகியின் மனத்தையும் படித்து விடலாம் என்பது அவன் திட்டம்.

''நானே போக வேண்டுமென்று தான் நினைத்தேன். உங்களை அனுமதி கேட்க எண்ணி இருந்தேன்'' என்றாள்.

''எதற்கு அவளைப் போய்ப் பார்க்கக் கருதினாய் நீ?''

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!

கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸெண்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸெண்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது, ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்!
மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!






இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

**Godrej**
**பவுடர் ஹேர்-டை**
**கான்ஸெண்ட்ரேட்**

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

"ஒரு காரணமுமில்லை; அவளை நாம் ஒதுக்கியது போல அல்லது அலட்சியப்படுத்தியது போல அவனுக்குத் தோன்றவேண்டாமே என்றுதான். மகாராணி ஒருபுறம் இருந்தாலும் ஆதித்தனின் இதயராணி அவள்தானே!"

தன் மாளிகையை நாடி வந்த இவர்களை அபிமானவல்லி மேன்மாட நிலா முற்றத்தில் காற்றுட வரவேற்றாள். சிற்றுண்டி கொணர்ந்தாள்; பழரசமும் தந்தாள்.

"என்னுடைய பெரும் பாக்கியத்தை எண்ணி எண்ணிப் பூரித்துப் போகிறேன். தாங்கள் வருவதாக எனக்கு முன்கூட்டியே தெரிந்திருந்தால் இன்னும் சிறப்பான முறையில் தங்களை உபசரித்து மகிழ்ந்திருப்பேன்" என்றாள்.

"இதுவே போதும்" என்றான் தாணுரவி. "உன் நடனக் கலைத் தேர்ச்சியில் பாதி அளவுதான் உபசாரக் கலை பயின்றிருக்கிறாய் என்றாலும் அதை முழுமையாக என் மீது பிரயோகித்தால் நான் திக்குமுக்காடித்தான் போவேன்" என்றான்.

"அன்றும் அப்படித்தான். 'ஆடியது போதும். இதற்குமேல் உலகம் தாங்காது; நானும் தாங்க மாட்டேன்' என்றீர்கள்!" கூறிவிட்டுக் கலீரென்று சிரித்தாள். ஏளனமான அந்த ஒலிச் சிதறலுக்கு முத்தத்தால் முற்றுப்புள்ளி வைக்கும் ஆவேசம் கிளர்ந்தெழ அதை அடக்கிக் கொண்டு பேசினான்:

"அன்று நீ ஆடிய போது என் இதயமும் சேர்ந்து நடனமாடியது. உன் கலைத் திறனைப் பாராட்டிச் சில வார்த்தைகள் கூறவும் சக்தியற்றுப் போனேன்."

"அதுவும் ஒரு வகையில் நல்லதாயிற்று. அந்தக் குறையை இட்டு நிரப்பத்தானே இப்போது வந்திருக்கிறீர்கள். இல்லாதுபோனால் உங்களை வரவேற்கும் பாக்கியம் கிட்டியிராதே இந்த மாளிகைக்கு."

ஒரு புறா வந்து தோளில் அமரவும் அதை லாகவமாகப் பற்றி அவனைப் பார்த்தவாறே அதனை முத்தமிட்டாள். பிறகு அழகு நடை நடந்து, நிலா முற்றத்தின் ஒரு பக்கலில் இருந்த கூண்டுக்குள் வைத்து வலைக்கதவை மூடினாள்.

"நீங்கள் கொங்கு நாட்டிலிருந்து வந்ததாகக் கேள்விப்பட்டேன். நடனக்கலையை எங்கு பயின்றீர்கள்?" என்று வினவினாள் கடம்பமாதேவி.

"ஏன்? அங்கேயேதான்!"

"அப்படியா? காஞ்சியும், தஞ்சையும் தானே பரதக் கலையின் வளர்ச்சிக்குப்பேர் பெற்ற நகரங்கள் என்று கேள்வி?"

அவளைக் கட்டெரிப்பது போல் பார்த்தான். "ஏதேது, நீங்கள் கங்கநாட்டிலிருந்து ஆதியில் வந்தவர் என்பதால் வேறு தேசங்களில் ராஜதந்திரம் என்பதே கிடையாது என்பீர்கள் போலிருக்கிறதே?"

சிரித்தான் தாணுரவி. "உண்டு என்பதற்கு நீயே சாட்சி! மடக்கி விட்டாயே

# கோகுலம்





## ஸ்ரீஹர்ஷசரிதம்

16 பக்கவண்ணப் படக்கதை

கதை: ஆனந்தி
சித்திரம்: வினு

கடம்பமாதேவியை! வாதத்தில் வென்று விட்டாயே!''

''பிரபோ தங்களால் இந்த அளவுக்குப் புகழப்பட அருகதையற்றவள் நான். அடியாளுக்கு ஆடவும் பாடவும், ஆண்டைக்கு அடிமை செய்து மகிழ்விக்கவும் மட்டுமே தெரியும்.''

''அந்தக் கலையை ஆதித்தன் தான் மட்டுமே பேராசையுடன் அனுபவித்துக் கொண்டிருந்தால் எப்படி...? திரும்பி வரட்டும் அவன். அவனுக்கு நான் உதவி புரிந்ததற்குப் பிரதியாக ஒரு பரிசு வேண்டப் போகிறேன்.''

''மன்னவா!......''

''உன்னை என்னுடன் அனுப்பி விடும்படி கேட்கப் போகிறேன். எப்படியும் குலாந்தகனுடன் கடம்பமாதேவி இங்கு தங்கத்தான் போகிறாள். பதிலுக்கு நான் உன்னை அபகரித்துக் கொண்டு போகப் போகிறேன்.''

''பிரபோ! கேளுங்கள். தாராளமாகக் கேளுங்கள். சோழ சக்கரவர்த்தியின் ஆக்ஞை அதுவானால் மறுத்துச் சொல்ல நான் யார்?''

''ஆதித்தன் என் கோரிக்கைக்குச் செவி சாய்க்க மாட்டான் என்று நீ உறுதியாக நம்புவது உன் குரல் தொனியிலேயே தெரிய வருகிறது... சரி...'' என்று எழுந்தான் தாணுரவி. ''வரட்டுமா?''

''சென்று வாருங்கள் பிரபோ!''

படியிறங்கி வாசலை அடைந்து குதிரை ஏறினான் தாணுரவி. கரம் அசைத்து விடை கொடுத்தாள் அபிமானவல்லி. பல்லக்கில் ஏறினாள் கடம்பமாதேவி. தோட்டத்தைக் கடந்து வீதிக்கு வந்ததும், பல்லக்கின் திரைவிலக்கி ''பிரபோ'' என்றழைத்தாள்.

''என்ன?'' என்று அவன் திரும்பிப்பார்த்தான்.

''நேற்று வேட்டைக்குக் கொண்டு போன ராஜாளிக்குத் தங்கள் கரத்தாலேயே ஆகாரம் கொடுத்துப் பழக்க வேண்டும் என்றீர்கள். நினைவூட்டுகிறேன்.''

ஒரு கணம் திகைத்தான். என்ன சொல்கிறாள் இந்த ராஜதந்திரி? பளிரென்று மின்னல் வேகத்தில் ஒரு கருத்து உதயமாயிற்று.

''ஆமாம், நான் முன்னதாகப் போய் அதைக் கவனிக்கவா? மாலை மயங்கும் நேரமாகிறதே.''

''என்னைப் பத்திரமாக அரண்மனைக்குக் கொண்டு சேர்க்கத்தான் காவலர்கள் இருக்கிறார்களே. நீங்கள் கவலைப்படாமல் போகலாம்.''

தட்டிவிட்டான் குதிரையைத் தாணுரவி. இத்தனை நாட்களாக அலுப்பும் சலிப்புமாய்க் காலத்தை ஓட்டியவன் புதியதொரு களை உணர்ந்தவனாக விரைந்தான். துரிதமாக அரண்மனை வேட்டை மண்டபத்தை அடைந்து கரத்துக்குக் கவசமணிந்து அதில் ராஜாளியைத் தாங்கி மேன்மாட உப்பரிகைக்குப் போனான். ராஜநர்த்தகியின் மாளிகை இருந்த கிழக்குத் திக்கில் வானைக் கூர்ந்து ஆராய்ந்தான். அவன் எதிர்பார்த்தது நடந்தது. சற்று நேரத்தில் புறா ஒன்று சடபடவென்று சிறகடித்துக் கொண்டு அத்திசையிலிருந்து பறந்து வந்தது. அரண்மனை வளாகத்தைக் கடந்து தொடர்ந்து மேற்கு முகமாகப் பயணப்பட்டது. ராஜாளியின் முகமூடியைக் கழற்றினான், தாணுரவி. அது அவன் கரத்தில் அமர்ந்தபடியே இப்படியும் அப்படியுமாய் ஒரு முறை தலைசாய்த்து நோக்கியது. ஏவி விட்டான் சேரன். ஜிவ்வென்று கம்பீரமாகச் சிறகடித்துப் பறந்தது ராஜாளி. தாணுரவி பார்த்துக் கொண்டே இருக்க, வெகு சீக்கிரமே புறாவை நெருங்கியது. புறா பரபரப்படைந்து வேகத்தை அதிகரிக்க முயன்றது. பயன் என்ன? ராஜாளி அதன் மீது குடை விரித்தாற் போல் படர்ந்து அலகால் ஒரு குத்துக் குத்தியது. புறா அடிபட்டு விழத் தொடங்கியது. செங்குத்தாகக் கீழ்நோக்கிப் பாய்ந்த ராஜாளி, புறாவின் உடல் நிலத்தைத்தாக்கு முன்னரே அதனைத் தன் அலகில் கொத்திக் கொண்டது. மறுபடி மேலெழும்பி ராஜகம்பீரத்துடன் சிறகினைச் சிலமுறை அசைத்துப் பிறகு வட்டமடித்துத் திசை திரும்பி தவழ்ந்து, காற்றில் மிதந்து முன்னேறி அரண்மனை வளாகத்தை அடைந்து, உப்பரிகையில் தாணுரவியின் நீண்டிருந்த கவசமணிந்த கரத்தில் வந்தமர்ந்தது. அதன் மீது முகமூடியைப் பொருத்தி விட்டுப் புறாவைப் பெற்றுக் கொண்ட தாணுரவி, ராஜாளிக்குச் சிறியதொரு இறைச்சித் துண்டைப் பரிசாகத் தந்தான்.

உயிர் விட்டிருந்த புறா தன் காலில் கட்டிச் சென்ற சிறு மூங்கில் குழலைத் துறக்க முடியாமல் இன்னும் சுமந்துகொண்டிருந்தது. குழலின் ஒரு புற மூடியைத் திறந்து உள்ளிருந்து சின்னஞ்சிறிய நறுக்கோலையை எடுத்து மங்கி வரும் மாலை ஒளியில் நுணுகி வரையப்பட்ட முத்துமுத்தான எழுத்துக்களைப் படித்தான் தாணுரவி. அவன் உடல் பதறியது கோபத்தில். கண்கள் செந்நிறத்தில் வெண்புறாவின் உடலிலிருந்து சிந்திய ரத்தத் துளிகளுடன் போட்டியிட்டன.

(தொடரும்)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran



"எனது ஆறு வயதுச்
செல்வி பரத
நாட்டியம் நன்கு
ஆடுகிறாள்.
நாளைய உலகமே
அவளது மேடையாம்."

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!




வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்?

போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் வெளிப்படையாகவே கூறுகிறார்கள். "என்னுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்தது அல்ல."

குழந்தைகளைக் கேளுங்கள்
பெற்றோர்களைக் கேளுங்கள்
உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்

அதில்...உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல... அவற்றைவிட அதிகமோ அதிகம்!

அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரீஸ்

**போர்ன்விடா**

நல்ல வளர்ச்சி, போர்ன்விடா பயிற்சி.

EGISTERED No. M. 4392
egistered as a Newspaper in Sri Lanka

பார்லே

# இனிப்பும் உப்பும்-இணைந்திட்ட புதுமை.

இதன் சுவை இனிப்பென்று
சாதிப்பவரும் உப்பென்று
வாதிப்பவரும் மனமுவந்து
சொல்வதோ : அது சுவை
மிக்கது. மொரு
மொருப்பானது.
கரகரப்பானது.

இந்தப் பேக்கை மட்டுமே
வாங்குங்கள். ஏனெனில்
க்ராக்ஜாக் ஒருபோதும்
உதிரியாக விற்கப்படுவதில்லை.
ஒருபோதும்.






உலகத் தேர்வில்
விருது வென்றது.

பார்லே க்ராக்ஜாக் பிஸ்கட்
-இனிப்பும் உப்பும் இணைந்திட்ட மோகம்.

everest/84/PP/31-tm